ஓம் ஸ்ரீ சாயி ராம்

# சமய சஞ்சீவி
# ஸ்ரீமத் சாயி ராமாயணம்




இலவச வெளியீடு

OM SRI SAI RAM

# *With the Blessings of*



# *Sri Sai Baba*

## *For Healthy Prospective Long life*


## SHIRDI SRI SAI BABA TRUST

# 9, Sai Baba Koil Street, Gowrivakkam,
Chennai - 600 073. Phone No : 044 - 2278 0195.



FREE PUBLICATION

சாயிராம்

# முன்னுரை

சீரடி பாபாவின் பாதத்தில் சரணடைந்து பாபாவே தோற்றத்தில் காண்பித்த, உண்மையாக நடந்த லீலைகளை ஸ்ரீமத் சாயி ராமாயணம் என்ற புத்தகம் மூலமாக எழுத முற்பட்டுள்ளேன். ஏற்கனவே, பாபாவே தோற்றத்தில் சொன்ன சாயி சத்சரிதத்தை முதல் வெளியீடாக வெளியிட்டுள்ளேன். அதில் பாபா எப்படி என்னை ஆட்கொண்டார் என்று எழுதியுள்ளேன். அதை படிக்காதவர்கள் தெரிந்து கொள்வதற்காக அந்த முன்னுரையை இந்த புத்தகத்தில் வெளியிட்டுள்ளேன். சிறிய பையனாக என்னோடு தங்கியிருந்து, என்னோடு ஒரே கட்டிலில் படுத்திருந்து, என்னை ஆட்கொண்டதை இப்பொழுது நினைத்தாலும் புல்லரிக்கிறது.

கௌரிவாக்கத்தில் ஒரு கோயில் கட்டும்படியாகச் செய்து, மூன்றே வருடத்தில் ஒரு முழுமையான அந்தஸ்தும், இனி கோயிலுக்கு தேவையானது ஒன்றுமில்லை என்று சொல்லும்படியாக பாபா ஜொலிக்கின்றார். எல்லோருக்கும் வேண்டியதை தகுதிக்கேற்றவாறு வாரி வழங்குகிறார். பலவித அற்புத லீலைகளை தினசரி நடத்தி வருகிறார். வேண்டியதை அடைந்தவுடன் பக்தர்கள் தங்களால் முடிந்ததை பாபாவிற்கு அளிக்கும்போது மகிழ்ச்சியாகின்றது. தினம் தினம் பக்தர்களுக்காக அநேக லீலைகளை நடத்திக் காண்பிக்கின்றார்.

கும்பாபிஷேகம் நடந்து முடிந்தவுடனே, முதல் வியாழக்கிழமை பாபாவிற்கு காலையில் அபிஷேகம் நடத்தி, பிறகு வஸ்திரம் சார்த்தி புஷ்பமாலை பாபாவிற்கு சார்த்த கிடைக்காமல் திணறினேன். அழுகை அழுகையாக வந்து, இப்படி ஒரு குக்கிராமத்தில் கோயில் கட்ட செய்து புஷ்ப அலங்காரம் செய்ய முடியாமல் தவிக்க வைத்துவிட்டாரே என்று தேம்பினேன். சிறிது நேரத்தில் ஒருவர் ஒரு பெரிய மாலையை கையில்தூக்கி வந்து என்னிடம் கொடுத்து, வழக்கமாக ஒவ்வொரு வியாழக்கிழமையும் காலையில் ஈச்சம்பாக்கம் சென்று மாலை சார்த்துவதாகவும், இன்று ஆட்டோ ரிக்ஷாக்காரர் அழகான பாபா இங்கேயே உள்ளதால் போகலாம் என்று சொல்லி அழைத்து

வந்ததாகச் சொன்னார். எனக்கு பாபாவே நேரில் வந்து நின்று தேற்றுவது போலிருந்தது. அவரிடம் நான் மாலையில்லாமல் தவித்ததை சொன்னபோது தானே அந்த பாக்கியத்தை எடுத்துக்கொள்வதாகச் சொல்லி இன்றுவரை ஒவ்வொரு வியாழக்கிழமையும் புஷ்பமாலைகள் பாபாவிற்கு கொடுத்து வருகிறார். இந்த புத்தகத்தில் கடைசி அத்தியாயத்தில் கௌரிவாக்க பாபாவின் (நான் அனுபவித்து வருகின்ற) லீலைகளை எழுதியிருக்கிறேன்.

பாபா எப்படியெல்லாம் தோற்றத்தில் சொன்னாரோ அப்படியே எழுதியிருக்கின்றேன். பாபாவின் தனித்தன்மை என்னவென்றால் நாம்தான் செய்தோம், நம்மால் தான் முடியும், நாமே காரணம், இப்படியெல்லாம் நினைக்காமல் எந்த காரியத்தையும் செய்து வந்தால் எல்லாவற்றையும் பாபாவே முன்னின்று தடங்கலில்லாமல், மங்களகரமாக முடித்துத் தருவார். என்னை மண்டையிலடித்து பூர்த்தி செய்த, அதாவது கற்பனையிலும் நினைக்க முடியாத அளவு நிறைவேற்றிய ஒரு நிகழ்ச்சியை சொல்லி என் முன்னுரையை முடிக்கிறேன்.

நான் மின்சார வாரியத்தில் ஒரு அதிகாரியாக பணியாற்றி வந்தேன். ஒருநாள் ஒரு ஏழை வாலிபர் (III Class B.A., பாஸ் செய்தவர்) என்னிடம் வந்து வேலை கிடைக்காமல் 3 வருடமாக திண்டாடுவதாகவும், தன்னை நம்பி விதவைத் தாயாரும், தங்கையும் இருப்பதாகவும், எங்கெங்கோ அலைந்து கடைசியில் ஒருவர் என் பெயரைச் சொல்லி கண்டிப்பாக நான் வேலை வாங்கித் தருவேன் என்று என்னிடம் அனுப்பினதாக சொன்னார். அவன் பெயர் சிவராமன். நான் அப்பொழுது இருந்தது திருவல்லிக்கேணி சிவராமன் தெருவில்தான்.

உடனே ஒன்றுமே யோசிக்காமல், என்னிடம் நிறைய காண்டிராக்டர்கள் வருவதாகவும், அவர்களுக்கெல்லாம் என் மூலமாகத்தான் செக் கிடைப்பதாகவும், நான் சொன்னால் ஒவ்வொருவரும் போட்டிபோட்டுக் கொண்டு வேலை கொடுப்பார்கள் என்றும் ஒரே வாரத்தில் நல்ல வேலையில் அமர்த்திக் காட்டுவதாக பெருமையோடு பேசினேன். (ஒவ்வொரு வார்த்தையும் எவ்வளவு மண்டை கர்வத்தோடு சொல்லியிருக்கின்றேன் என்று கவனியுங்கள்)

பையனுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து அப்பொழுதே வேலை கிடைத்துவிட்டதாக கற்பனையில் மிதந்து போனான். இனி என் தரித்திரமெல்லாம் போய்விட்டது சார், நீங்கள் என் வரையில் கண்கண்ட தெய்வம் தான் என்று சொல்லி ஒரு வாரத்தில் வருவதாகப் போனான்.

பையனோ மிகவும் ஏழை. கிழிந்த லுங்கியுடன் ஒவ்வொரு வாரமும் வந்து போனான். காண்டிராக்டர்கள் என்னிடம் அனுப்புங்கள் என்பார்கள். பையன் போனால் பேசக்கூட மாட்டார்கள். ஏதாவது சாக்கு சொல்லி திருப்பி அனுப்பிவிடுவார்கள். அவன் வரும்பொழுதெல்லாம் ஏதாவது காசு கொடுத்து அனுப்பிவிடுவேன். இவ்வாறு ஒரு வருடம் ஓடிவிட்டது.

ஒருநாள் பாபாவின் பூஜையறையில் இருந்துபோது பையன் வந்து உட்கார்ந்தான். அழுகிற சத்தம் கேட்கவே திரும்பி பார்த்தால் சிவராமன் விக்கி விக்கி அழுவதைப் பார்த்தேன். மனது தாளாமல் என்னால் ஒரு வருடம் பையன் வாழ்க்கை பாழாகிவிட்டதே என்று சஞ்சலப்பட்டு, பாபாவிடம் பையனைப் பற்றி முறையிட்டு, அவனுக்கு உடனே வேலை கிடைக்க அருள்செய்ய அழுது பிரார்த்தித்தேன்.

பாபா மிகவும் சிரித்து. "என்ன! உனக்குத் தான் நிறைய காண்டிராக்டர்கள் இருக்கின்றார்களே, யாரிடம் சொன்னாலும் உடனே வேலை போட்டு கொடுத்து விடுவார்களே பக்கிரி நான் என்ன செய்ய முடியும்" என்றார்.

உடனே எனக்கு இடியே என் தலையில் விழுந்தாற்போல் உடம்பெல்லாம் வியர்வை கொட்ட அப்பொழுதுதான் நான் செய்த இமாலய தவறை உணர்த்தப்பட்டவனானேன். பாபாவிடம் பிரார்த்திக்காமல், மனுஷனை போய் நம்பி வந்த பையனுடைய வாழ்க்கையை சிதறடித்து விட்டேனே என்று தோன்றி பாபாவிடம் அழுது மன்றாடினேன். பாபா, உங்களையே நம்பியிருக்கும் நான் எப்படி மனுஷர்களை நம்பி வாக்கு கொடுத்தேன்! தப்புதான் பாபா, எப்படி அவர்களை நம்பினேன் என்று தெரியவில்லை. நான்தான் தவறு செய்துவிட்டேன், மன்னித்து விடுங்கள். நான் செய்த தவறுக்கு சிவராமனை தண்டிக்காதீர்கள். என்னை எப்படி வேண்டுமானாலும் தண்டியுங்கள். என்னால் அவன் வாழ்க்கை பாழாகக்கூடாது. பாபா

மன்னித்துவிடுங்கள், என்னுடைய கர்வம் தான் இதற்கு காரணம். என் கர்வத்தை உங்களிடம் சரணமடைய செய்து விட்டேன், சிவராமனுக்கு உடனே நல்ல வேலை வாங்கிக் கொடுங்கள், உங்களால்தான் முடியும். கண்டிப்பாக உங்களால்தான் கிடைக்க வேண்டும் என்று அவர் பாதத்தில் வேண்டிக் கொண்டேன்.

பாபா சிரித்து, "சரி பையனிடம் என் எதிரில் மன்னிப்புக் கேள். உன்னால் வேலை வாங்கித் தர முடியாது என்று சொல், நீ சொன்னதை முழுமையாக வாபஸ் வாங்கு" என்றார்.

உடனே பையனிடம் சென்று, சிவராமா என்னை மன்னித்து விடப்பா. உன் வாழ்க்கையை ஒரு வருடம் பாழாக்கிவிட்டேன். வேறு எங்கு சென்றிருந்தாலும் இந்நேரம் நல்ல வேலை கிடைத்திருக்கும். என் கர்வம், என்னால் முடியும் என்கிற மண்டைக்கணம் உன்னை பாழாக்கினேன். என்னை மன்னித்துவிடு என்றேன். உனக்கு வேலை வாங்கித்தர முடியாது, முடியாது, முடியாது. இதோ பாபா படம், பாபாவின் உதி, சென்று வா இனி என்னை வந்து பார்க்காதே என்று சொல்லி, சர்ரென்று எழுந்து கீழே இறங்கிவிட்டேன். அதன்பின்னர் சிவராமனை பார்க்கவே இல்லை.

மூன்று மாதங்களுக்குப் பிறகு ஆபிஸ் வேலை விஷயமாக மைசூர் செல்ல வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. மைசூர் இரயில் நிலையத்தில் ரிசர்வ் செய்துவிட்டு வண்டி வருகைக்காக காத்திருந்தேன். அப்பொழுது டிப்டாப்பாக உடையணிந்த ஒரு வாலிபன் என்னிடம் வந்து சாஷ்டாங்கமாக பிளாட்பாரத்திலேயே நமஸ்காரம் செய்தான். எனக்கு ஆச்சர்யம் ஏற்பட்டு வாலிபனை தூக்கி நிறுத்தினால் அவன் அதே சிவராமனாக இருக்கக்கண்டு மீண்டும் ஆச்சர்யமடைந்தேன். அவனும் சிரித்து, தங்களின் பெயர் ரிசர்வேஷன் லிஸ்டில் பார்த்தேன். தங்களைக் கண்டிப்பாக சந்திக்க வேண்டும் என்று நானும் ரிசர்வ் செய்து கொண்டு, தங்களுடன் வர ஆயத்தமாக வந்து சேர்ந்தேன். தங்களுடைய ஆசியால் தாங்கள் விரட்டியடித்த ஒரே வாரத்தில் எனக்கு இந்த வேலை கிடைத்து சௌக்யமாக இருக்கின்றேன். தங்கள் பாபாவிடம் செய்துகொண்ட ப்ரார்த்தனை பலித்து உடனே வேலை கிடைத்துவிட்டது. இந்த கதையை, வண்டியில் விஸ்தாரமாக சொல்லுகிறேன் என்று சொல்லி, ஒரு கூடை நிறைய ஆப்பிளை என்னிடம் கொடுத்தான். அவன் வண்டியில் சொன்னதாவது:

நான் தங்களிடம் இருந்து விரட்டப்பட்டவனாக மிகவும் விரக்தியாக வீடு போய் சேர்ந்தபோது என் தங்கை வாசலிலேயே காத்திருந்து ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்தாள். அது பெங்களூரில் உள்ள எலக்ட்ரானிக்ஸ் கம்பெனியிலிருந்து எனக்கு வந்த இண்டர்வியூ ஆகும். எனக்கு ஒரே சந்தோஷம் ஏற்பட்டு தங்களையும் பாபாவையும் பிரார்த்தித்துக் கொண்டேன். அடுத்த நாளே இண்டர்வியூவானதால், நண்பர்களிடமிருந்து பழைய கோட்டும், மாற்று வஸ்திரங்களையும், சிறிது பணத்தையும் பெற்றுக் கொண்டு அன்று இரவே பெங்களூர் எக்ஸ்பிரஸில் கிளம்பினேன். இரவெல்லாம் பாபாவையே பிரார்த்தித்துக்கொண்டு இந்த வேலையாவது கிடைக்கவேண்டுமென்று வேண்டிக் கொண்டேன். என்னுடைய துரதிஷ்டம் வண்டி 9 மணிக்குத்தான் பெங்களூர் போய் சேர்ந்தது. 9.30 மணிக்கு இண்டர்வியூவானதால் நேராகவே இண்டர்வியூ நடக்கும் இடத்திற்கே ஓடிச் சென்றேன். அங்கு எனக்கு முன்பாக லிஸ்டில் இருபது பேரும், கடைசியாக இருபத்தியோராவது பேராக என்பெயர் இடம் பெற்றிருந்தது. இருபது பேரையும் இண்டர்வியூ செய்வதற்குள் பனிரெண்டரை மணியாகிவிட்டது. எனக்கு முன் சென்றவர்கள் அனைவரும் டபுள் கிராஜுவேட்டாக இருந்து எல்லா தகுதியும் பெற்றிருந்தனர். ஆகவே பாபாவிடம் மிக உருக்கமாக இந்த வேலையை எனக்கு வாங்கிக் கொடுத்தால் மிகவும் விசுவாசமாகவும், நன்றியுடனும், பாபாவிடம் பக்தியுள்ளவனாகவும் இருப்பேன் என்று வேண்டிக்கொண்டு விரக்தியோடு இருந்தேன். கடைசியாக என்னுடைய முறை வந்து நான் போய் அதிகாரிகளின் எதிரில் உட்கார்ந்தபோது மயக்கம் வந்து விழுந்துவிட்டேன்.

அதிகாரிகள் என் முகத்தில் தண்ணீரைத் தெளித்து, தெளிவு பெறச் செய்து என்ன காரணம் என்று கேட்டார்கள். வண்டி லேட்டாக வந்ததினால் நேராக ஆபிஸிற்கே வந்துவிட்டேன். பசி மயக்கத்தினால் சோர்ந்து விழுந்துவிட்டேன் என்று கூறினேன். என்னிடம் பரிதாபப்பட்டு தோசை முதலிய ஆகாரங்களை வாங்கிக் கொடுத்து இண்டர்வியூ செய்ய உட்கார வைத்தார்கள். அப்பொழுதும் பாபாவையே பிரார்த்தித்துக் கொண்டிருந்தேன். அந்த கம்பெனி வெளிநாட்டு உதவியோடு நடப்பதால், பிரென்ச் நாட்டைச் சேர்ந்த அதிகாரி முதல் கேள்வியைக் கேட்டார். டங்ஸ்டன் என்றால் என்ன? அதை எப்படி செய்கிறார்கள்? அதன் முக்கிய வேலை என்ன? என்று கேட்டார்.

நான் மிகவும் குழப்பத்தில் இருந்ததினால், அந்த வார்த்தையே என் நினைவுக்கு வராமல் அப்படி ஒரு வஸ்துவை நான் கேள்விபட்டதில்லை என்று சொல்லி என்னுடைய நிலையையும் சொல்லி எனக்கு ஆறு பாஷைகள் சரளமாக பேசத் தெரியும் என்றும் சேல்ஸ்மேன் பதவியானதால் ஆறு மாதங்கள் ட்ரெய்னிங் கொடுத்தால் உற்சாகமாக எல்லாவற்றையும் கற்றுக் கொண்டு கம்பெனிக்கு மிகவும் உதவியாகவும், நன்றியுள்ளவனாகவும் இருப்பேன், மேலும் என் குடும்பத்தை வறுமையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று அந்த அந்நியரிடம் மிக சரளமான ஆங்கிலத்தில் எடுத்துரைத்தேன்.

என் எதிரிலேயே அவர் மற்ற அதிகாரிகளிடம் இவன் கதையைக் கேட்க பரிதாபமாக இருக்கிறது. அவன் குழம்பி இருப்பதினால் பதில் சொல்ல முடியவில்லை. ஆனாலும் நமக்கு வேண்டிய சரளமாக பேசும் திறமை ஆறு பாஷைகளில் அனுபவம் இருக்கிறது. ஆகவே இவனையே எடுத்துக்கொள்வோம் என்று சொல்லி அப்போதே ஆர்டர் போட்டு ட்ரெய்னிங் பீரியடாக ஆறுமாதம் மைசூர் பிரிவில் வேலை செய்ய ஆர்டர் கொடுத்தார்கள். என்னைவிட எவ்வளவோ படித்த திறமைமிக்க ஆட்களை விட்டு என்னை நியமனம் செய்தது பாபாவின் (அவர்களின் மனதை மாற்றிய) லீலையாகும்.

இப்பொழுது மைசூரில் ஒரு தனி கிளைக்கே நான் மேனேஜராக இருக்கின்றேன். நீங்கள் எனக்காக பாபாவிடம் பிரார்த்தித்துக் கொண்டதின் பலன் நான் நிம்மதியாக இருக்கின்றேன். நான் உங்களை மறக்கவே முடியாது என்று சொல்லி மறுபடியும் நமஸ்கரித்தான்.

ஆகவே நம் அகங்காரத்தை விட்டு நம்மால் செய்யப்பட்டது என்று நினைக்காமல் நம்மால் முடியும் என்ற எண்ணமில்லாமலும் எந்த காரியத்தை ஆரம்பித்தாலும் பாபா முன்னின்று வெற்றிகரமாக முடித்துத் தருவார் என நம்பிக்கையோடு காரியங்களைச் செய்ய வேண்டும் என அறிந்து கொண்டேன்.

சீரடிபாபா செய்த உடல்நல லீலையை சொல்லுகிறேன். ஒரு பார்ஸி கனவான் சூரத்தில் பெரிய வியாபாரம் செய்து கொண்டு இருந்தார். அவருடைய ஒரே மகனுக்கு அம்மை போட்டு உடம்பெல்லாம் தழும்பு ஏற்பட்டிருந்தது. கண்களை மறைத்து விடும்

அபாயமும் இருந்தது. பரிசோதித்த டாக்டர்கள் பையன் பிழைப்பதே கஷ்டம். இந்த வியாதியில் இருந்து மீளமுடியாது என்று கைவிரித்து விட்டனர்.

ரொம்ப சோகமாக இதைப்பற்றியே நினைத்து உட்கார்ந்திருந்தபோது, அவரது நண்பரான இன்னொரு பார்ஸி கனவான், சீரடி சாயிபாபாவின் படத்தைக் கொண்டுவந்து பையன் தலைமாட்டில் வைத்து, அவரை முழுமனதோடு வணங்கும்படியும் இந்த அபாயத்திலிருந்து அவரால்தான் மீட்க முடியும் என்று சொல்லிச் சென்றார்.

அதே மாதிரியாக அந்த கனவான் பாபாவின் படத்தின் முன்பாக அமர்ந்து, அழுது, பாபா எவ்வளவோ பேருக்கு எத்தனையோ லீலைகளை நடத்திக் காண்பிக்கின்றீர்கள் என் மகனுக்காக ஒரு லீலையை நடத்தி இந்த பேராபத்திலிருந்து என் மகனை காப்பாற்ற மாட்டீர்களா, டாக்டர்களும் கைவிரித்து விட்டார்களே. இனி நீங்கள்தான் ஒரே தெய்வம் உங்களை மறக்கவே மாட்டோம். என் மகனை காப்பாற்றினால் அவனை அழைத்துக் கொண்டு சீரடி வந்து உங்கள் பாதத்தில் விழச் செய்வேன் என்று வேண்டினார்.

அன்று இரவே பாபா கனவில் தோன்றி நீ ஏன் பயப்படுகின்றாய்? உன் மகனைக் காப்பாற்ற நான் வந்துவிட்டேன் என்று சொல்லி அவர் அணிந்திருந்த துணியை விலக்கிக் காண்பித்தார். அவர் உடம்பு முழுக்க அம்மைத் தழும்புகள் இருப்பதை கனவான் பார்த்தார். கனவிலேயே அவர் ஏன் பாபா இந்த அவஸ்தை நீங்கள் படுகிறீர்கள் என்று கேட்டார். உன் மகனைக் காப்பாற்ற நானே அந்த நோயை ஏற்றுக் கொண்டேன். இன்னும் நான்கு நாட்களில் அவன் நோய் முழுக்க குணமாகி சரியாகிவிடுவான் என்று பாபா சொன்னார். அதே மாதிரியாக அவர் மகனும் பூரண குணமடைந்தான்.

இத்துடன் என்னுடைய முன்னுரையை முடித்து பக்தர்கள் இதை சிரத்தையுடன் படித்து பாபாவின் அருளால் எல்லா நன்மைகளும் பெற வாழ்த்துகின்றேன்.

# சாய் சத்சரிதத்தில் வந்த முன்னுரை

ஓம் ஸ்ரீ சாயி ராம்

சீரடி சாய்பாபா பிரத்தியட்சமான தெய்வம். அவரையே தியானித்திருந்தால், எதையும் சாதிக்கலாம். அவருக்கு வேண்டியதெல்லாம் நம்பிக்கையும், பொறுமையும். பாபாவை பொறுத்தவரை என் மனைவிதான் என் குரு. கல்யாணமான புதிதில் அவள் பாபாவை ஸ்மரிக்கும்போது கேலியாக பேசிவந்தேன். ஆனால் பாபா வெகு சீக்கிரமாக என்னை ஆட்கொண்டுவிட்டார்.

ஆபீஸ் விஷயமாக பம்பாய் போகும் சந்தர்ப்பம் கிடைத்தது. என் மனைவி அங்கிருந்து சீரடி வெகு அருகிலிருப்பதாகச் சொல்லி, கண்டிப்பாக சீரடி தரிசனம் பெற்று வரும்படி வற்புறுத்தினாள். பம்பாயில் வேலை முடித்ததும், சீரடி செல்ல அதிகாலையில் 4 மணிக்கே எலக்ட்ரிக் டிரெயினில் பம்பாய் ஸ்டேஷனுக்கு சென்று அடைந்தேன். டிக்கட் கொடுப்பவர், ரயிலில் மண்மாட் சென்று அங்கிருந்து வேறு ரயிலில் கோபர்கான் சென்று சீரடியை அடையலாம் என்றும், விக்டோரிய டெர்மினஸ் சென்று, மண்மாட் ரயிலை பிடிக்க வேண்டுமென்றும் சொல்லி டிக்கட் வழங்கினார்.

மண்மாட் ரயிலைப் பிடிக்க எலக்டிரிக் ட்ரெயின்மூலம் விக்டோரியா டெர்மினஸ் செல்ல வேண்டும். ஆனால் கூடிய சீக்கிரமே ஒலிபெருக்கியில் எலக்டிரிக் டிரெயின் ஒரு அரைமணி தாமதமாக வரும் என்று சொல்லப்பட்டது. இன்னும் 20 நிமிஷத்தில் விக்டோரியா டெர்மினஸ் அடையவேண்டுமே என்று திகிலுடன் ஸ்டேஷனில் நின்றிருந்தேன். பாபாவை பிரார்த்தனை செய்து கொண்டே. டிக்கட் வாங்கியாகிவிட்டதே, எப்படியும் 20 நிமிடத்தில் மண்மாடு எக்ஸ்பிரஸ்ஸை பிடிக்க கருணை காட்ட வேண்டுமென்று பாபாவையே பிரார்த்தித்தேன். ஒருவர் என்னை தொட்டு எங்கே செல்லவேண்டுமென்று ஆங்கிலத்தில் வினவினார். நான் சீரடி செல்ல மண்மாடு எக்ஸ்பிரஸ்ஸை பிடிக்க இன்னும் 20 நிமிடத்தில் விக்டோரியா டெர்மினஸ் செல்ல வேண்டுமென்று தெரிவித்தேன்.

என்னோடு வாருங்கள் என்று சொல்லி மிக வேகமாக ஸ்டேஷனைவிட்டு வெளியே வந்து டாக்ஸியில் ஏறச் சொன்னார். டாக்சி டிரைவரை சலோ, சலோ என்று விரட்டி தெருவில் பிளாட்பாரமெல்லாம் ஏறி, ரொம்பவும் வேகமாக ஓட்டி 15 நிமிடத்தில் விக்டோரியா டெர்மினலை அடைந்தோம். நான் டிரைவருக்கு 10 ரூபாய் டிப்ஸ் கொடுத்ததை கட் பண்ணி என் ஜோபியில் போட்டு ஸ்டேஷனில் ரயில் தயாராக இருப்பதாகவும், ஓடிச்சென்று ஏறி உட்காரும்படி சொல்லிவிட்டு ஓடி மறைந்து விட்டார். நான் அதிர்ந்துபோனேன். முன்பின் தெரியாதவர் இவ்வளவு அக்கரையாக 15 நிமிடத்தில் டாக்சியில் கொண்டுவந்து விட்டவர் பாபாவைத் தவிர யாராக இருக்க முடியும். அதிர்ச்சியுடன் ரயிலிருக்கும் இடத்திற்கு ஓடிச்சென்று பார்த்தால், கூட்டம் வழிந்திருந்தது. ஏறுவதற்கு கூட வழியில்லை. ஓடிக்கொண்டே எங்கே வழி கிடைக்கும் என்று பார்த்துக்கொண்டே சென்றால் அந்த ரயிலின் கார்டு என்னை நிறுத்தி எங்கே போகிறீர்கள் என்று கேட்டார். சீரடிக்கு என்று சொன்னவுடன் என்னைத் தழுவிக்கொண்டு அணைத்து ஒரு கம்பார்ட்மெண்டில் எல்லோரையும் தள்ளி ஏறவைத்து கடைசி சீட்டில் பயணிகளைத் தள்ளச் செய்து என்னை உட்காரவைத்து மண்மாட்டில் இறங்கி தன்னை பார்க்கும்படி சொல்லி கீழே இறங்கி விசில் கொடுத்தார். வண்டியும் புறப்பட்டது. அதிர்ச்சி மேல் அதிர்ச்சி, கார்டுக்கு எவ்வளவோ ஆயிரக் கணக்கில் பயணிகள் இருக்கும்பொழுது என்னிடம் என்ன அக்கரை? சீரடி என்று சொன்னவுடன் நெருக்கமான பெட்டியில் வழி ஏற்படுத்தி உட்காரவைத்து போகின்றாரே. எல்லாம் பாபாவின் லீலைகள்தான் என்று சந்தோஷப்பட்டு, பாபாவையே தியானித்து பயணத்தை தொடர்ந்தேன். மண்மாட்டில் ரயில் நின்றவுடன் நெருக்கடியிலிருந்து விலகி பெட்டியிலிருந்து இறங்கினேன். அங்கு கார்டு என்னை வரவேற்றார். வேறு பிளாட்பாரத்தில் உள்ள ரயிலை காண்பித்து இன்னும் 1/2 மணியுள்ளது என்றும், நிதானமாக பாலத்தின் மீது நடந்துபோகும்படி சொல்லி அனுப்பி வைத்தார். என்ன அக்கரை இந்த கார்டுக்கு? கொஞ்சம் தைரியமடைந்து கோபர்கான் செல்லும் ரயிலை அடைந்தேன். காலியாக உள்ள பெட்டியில் பாபாவின் நாமத்தை தியானித்துக் கொண்டு ஏறி உட்கார்ந்தேன். யாராவது துணையாக வந்தால் சந்தோஷமாக பாபாவை சீரடியில் சேவித்து வரலாம் என்று தியானித்தேன்.

சிறிது நேரத்தில் ஒரு 15 வயதுள்ள அரை நிக்கர் போட்ட பையன் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான். எங்கு போகிறாய்? என்று ஆங்கிலத்தில் கேட்டேன். மராத்தியில் சீரடி போவதாக சொன்னான். ஆனால் எனக்கு தமிழில் புரிவதுபோல் புரிந்தது. மேலும் இதுதான் முதல்தடவையென்றும், நிறைய பேர்களிடமிருந்து சீரடியைப்பற்றி கேள்விப்பட்டிருப்பதால் கஷ்டமொன்றுமில்லை என்று சொன்னான். எனக்கும் முதல்தடவை, பாஷை தெரியாததால் பயமாக இருப்பதாக சொன்னேன். எல்லாம் பாபா முன்நின்று அழைத்துச் செல்வார், ஒன்றும் கவலைப்படவேண்டாம் என்று மராட்டியில் சொன்னது தமிழ்போல் இனித்தது.

சிறிது நேரத்தில் ரயில் புறப்பட்டது. பாபா ஸ்மரணையில் கண்ணை மூடிக்கொண்டு தியானித்து வந்தேன். பையன் அடிக்கடி எழுந்து சென்று பிறகு வந்தான். கடைசியில் கோபர்கான் வந்து சேர்ந்தோம். பையன் என்னிடம் பஸ் ஸ்டாண்ட் 3 மைல் தூரத்திலிருப்பதாகவும் டாங்காவில் சென்று அடையவேண்டுமென்று சொல்லி ஒரு வண்டியில் ஏற்றி என்னை அமரவைத்து பக்கத்தில் உட்கார்ந்தான். இரண்டு பேருக்கும் 8 அணா என்னிடம் வாங்கி டாங்கா வாலாவிடம் கொடுத்தான். நீ ரொம்பவும் பசியோடு இருக்கிறாய்? இரண்டு டீ சேர்த்து சாப்பிடு. மற்றது உனக்கு பிடிக்காது என்று சொன்னான். நிஜமாகவே சென்னையைவிட்டு கிளம்பிய பிறகு ஒன்றுமே சாப்பிட பிடிக்கவில்லை. பம்பாயில் சுத்தமாக எதுவுமே சாப்பிடாமல் டீ மட்டும் பருகி வந்தேன். டீ சாப்பிட்டுவிட்டு பஸ் ஸ்டாண்ட் வந்தால் பஸ் நிறைந்திருந்தது. எப்படியோ உள்ளே போய் உட்காரவே இடம்பிடித்து கொடுத்தான். அவன் நின்று கொண்டே வந்தான்.

சீரடி போய் இறங்கினவுடன் நேராக ரிசப்ஷன் ஆபீஸ் என்னை அழைத்துப்போனான். அங்குள்ள கிளார்க்கிடம் இவர் மதராஸிலிருந்து வந்துள்ளார். நமது மந்திரின் லைப் மெம்பர். இவர் மனைவி நமது பாபாவின் சிரத்தையான பக்தர். நமது பாபாவைத்தவிர வேறு கடவுளை வணங்கமாட்டார். இவரும் தற்போது நம்பக்கம் திரும்பியுள்ளார். ஆகவே இவருக்கு ஒரு சிங்கிள் ரூம் போட்டு தாருங்கள் என்று மராட்டியில் சொன்னான். எனக்கு தமிழில் பேசுவது போலவே இருந்தது. ரூ. 5 பெற்றுக்கொண்டு ரசீது கொடுத்தார். ரூமுக்குள் சென்று பார்த்தால் ஒரு பெரிய பாபா படம் இருந்தது. எனக்கு

வியர்த்து கொட்டியது. பையன் அலட்சியமாக, சீரடிக்கு வந்தால் பாபாவைத்தவிர வேறென்ன இருக்கும். பசியோடு உள்ளீர்கள், முதலில் சாப்பிட்டு அப்புறம் கோயில் போகலாம் என்றான். நான் அதெல்லாம் முடியாது பாபாவை முதலில் பார்த்துவிட்டுத்தான் ஆகாரம் பண்ணுவேன். உனக்கு பசியாயிருந்தால் சாப்பிட்டு வா. நான் மந்திர் போகின்றேன் என்றேன். பையன் நீங்கள் சாப்பிட்டால், எனது வயிறு நிரம்பிவிடும் என்று சொல்லி சரி, சரி, கிளம்புங்கள் கோயில் போகலாம் என்றான். நான் முதலில் முகத்தையும், கை, கால் அலம்பி விட்டுத்தான் கோயிலினுள் நுழைவேன் என்றேன். அரே பாபா! தண்ணீரா, நானாவிற்குத்தான் வெளிச்சம். சீரடியில் தண்ணீரே கிடையாது. காலையில் மட்டும்தான் கொஞ்ச நேரம் விடுவார்கள், சரி வாருங்கள், ஆபீஸில் வாங்கித் தருகிறேன் என்று ஆபீஸிற்கு அழைத்துச்சென்று அக்கௌண்டெண்டிடம் இவர் மதராஸ். கை, கால் அலம்பாமல் பாபாவை பார்க்க மாட்டாராம். உங்களிடம் உள்ள தண்ணீரை கொடுங்கள் என்றான். அவர் சிரித்துக்கொண்டே நீளமான வாய் உள்ள மண் ஜாடியை கொடுத்தார். சிக்கனமாக அலம்பிக்கொண்டு மந்திருக்குள் சென்றேன்.

பையன் என்னை நேராக பாபா நின்றிருக்கும் மேடையில் இடதுபக்கம் அழைத்துப்போய் இங்கிருந்து பார்த்தால் பாபா உங்களையே பார்ப்பது போல் இருக்கும். இது பெண்கள் வரிசை. இப்பொழுது யாரும் வரமாட்டார்கள். நன்றாக சேவியுங்கள் என்று சொல்லிவிட்டு போய்விட்டான். நான் பாபாவைப் பார்த்து வியர்வையால் நனைந்து மெய்யுருகிப் போனேன். உலகத்தையே மறந்தேன். காலம் போனது தெரியவில்லை.

சுமார் ஒரு மணி நேரம் கழித்து பையன் வந்து என்னை தட்டி இவ்வுலகத்திற்கு கொண்டு வந்தான். என்ன ஒரே முகமாய் பாபாவிடம் ஐக்கியமாகிவிட்டீர்களா? வாருங்கள், உங்களுக்காக மதராஸ் தோசை, சாம்பார் எல்லாம் ஏற்பாடு செய்துள்ளேன். சாப்பிட்டு மறுபடியும் 6 மணி ஆரத்தி பார்த்து மகிழலாம் வாருங்கள் என்று கைபிடித்து அழைத்துப்போய் திருநெல்வேலி மாமி ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றான். மாமியிடம் இவர் ஒரு வாரமாக சாப்பிடாமல் டீ மட்டும் குடித்து வருகிறார். ராத்திரி வரும்பொழுது சாதம், சாம்பார், ரசம், தயிர் இவைகளை தயார் செய்துகொடு. நாளை காலையிலும்

இட்லி, சாம்பார், பொங்கல் தயார் செய்துகொடு. இத்துடன் மதராஸ் போய்தான் சாப்பிடுவார் என்று சொன்னான். எனக்கு மிக ஆச்சரியமாக இருந்தது. என்னைப்பற்றி நான் சொல்லாமலே எல்லாவற்றையும் விவரிக்கின்றானே.

மறுபடியும் மந்திருக்கு அழைத்துவந்துவிட்டு 6 மணிக்கு ஆரத்தியைப் பார்த்துவிட்டு இங்கேயே இருந்து சுமார் 8 மணிக்கு ஹோட்டல் சென்று சாப்பிட்டு மறுபடியும் மந்திருக்குள் நுழைந்து பாபாவை பார்த்திருந்தேன். 10 மணிக்கு சேஜா ஆரத்தியும் சேவித்து ரூமிற்கு சென்றேன். பையன் பாபாவை நமஸ்காரமும் செய்யவில்லை. என்னிடமிருந்த பணம் ரூ. 1000க்கு மேல் அவனிடமே கொடுத்துவிட்டேன். நான் ரூமிற்கு சென்றபிறகுதான் அவன் ரூமிற்கு வந்தான். எங்கு போனாய்? கோயிலுக்கு வந்துவிட்டு பாபாவை நமஸ்காரம் செய்யாமல் எங்கேயோ போய்விட்டு வருகிறாயே? என்று கேட்டேன். நீங்கள் அனுபவிப்பதையெல்லாம் மானசீகமாக நான் அனுபவிக்கின்றேன், சரி காலையில் ஆரத்தி 5 மணிக்கு, நீங்கள் 4 மணிக்கு எழுந்து ஷேவ் செய்துவிட்டு. குளித்துவிட்டு மந்திருக்கு சென்று க்யூவில் நிற்க வேண்டும். கதவு திறந்தவுடன் ஓடிச்சென்று மேடை பக்கத்தில் நின்றால் பாபாவின் சமாதிக்கு பால் அபிஷேகம் செய்யலாம். ஆரத்தி முடிந்தவுடன் அங்கேயே சுவற்றோரமாக நில்லுங்கள், ஒரு பன்னீர் பாட்டிலையும் வைத்திருங்கள். பன்னீர் அபிஷேகம் விசேஷம் வீட்டிற்கு எடுத்துச் செல்லலாம் என்று சொல்லி கட்டிலை தூசி தட்டி என் பக்கத்திலேயே படுத்துக்கொண்டான். காலையில் என்னை எழுப்பி ஷேவ் பண்ண தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான். குளியலறையில் தண்ணீர் வந்தது. ஆனால் லைட் இல்லாமல் ரொம்பவும் திணறினேன். பையன் அவசரமாக வந்து எதையோ பிடித்து ஆட்டி லைட் எரிய வைத்தான். என்னுடன் மந்திருக்கு வந்து க்யூவில் நிற்க வைத்துவிட்டு மறுபடியும் எப்படி அபிஷேகத்திற்கு செல்ல வேண்டுமென்று சொல்லிவிட்டு அவசரமாக எங்கேயோ போய்விட்டான்.

நான் பாபா ஸ்மரணையில் மூழ்கி மகிழ்ச்சியில் திளைத்திருந்தேன். அபிஷேகம் என்றால் எனக்கு உயிர். அதை அனுபவிக்க ரொம்ப ஆனந்தத்துடன் அதையே நினைத்திருந்தேன். அப்பொழுதெல்லாம் கூட்டம் ரொம்பவும் குறைவு. ஆகவே சுலபமாக

ஆரத்தியை அனுபவித்து அபிஷேகத்திலும் கலந்துகொண்டு சமாதிக்கும் பாபாவிற்கும் பால் அபிஷேகம் செய்யும் பாக்கியமும் கிடைத்து மிக்க சந்தோஷமுற்றேன்.

அபிஷேகம் முடிந்தவுடன் பையன் அவசரமாக வந்து என்னை ரூமிற்கு அழைத்துச் சென்று 8 மணிக்கு நேராக மண்மாட்டிற்கு பஸ் இருப்பதாகவும், என் ஆபீஸ் நண்பர்கள் பம்பாயில் காத்திருப்பதாகவும், என்னை அவசரமாக கிளம்பச் சொன்னான்.

அவன் பேசுவது எல்லாமே ஆச்சரியமானதாக இருந்தது. நான் என் நண்பர்களைப்பற்றி ஒன்றுமே அவனிடம் சொல்லவில்லை, ஆனால் காத்திருப்பதாகச் சொல்கிறான். பஸ் ஸ்டாண்டிற்கு அவசரமாக அழைத்து வந்து பஸ்ஸில் ஏற்றி உட்கார வைத்தான். என் பெட்டி அவனிடமே இருந்தது. பணமும் அவனிடம்தான் இருந்தது. மண்மாட் ஸ்டேஷன் பிரிட்ஜ்மீது பஸ் நின்றது. என்னை இறக்கி படியின் மூலமாக ஸ்டேஷனுக்கு அழைத்து வந்து என்னிடம் பணத்தை கொடுத்து டிக்கட் கௌண்டரை காண்பித்து சீக்கிரம் பம்பாயிற்கு டிக்கட் வாங்கி வரும்படி முன்னே அனுப்பினான்.

டிக்கட்டை பெற்றுக்கொண்டு வந்து அவன் நின்று அனுப்பிய இடம் வந்தால் பையனை காணவில்லை. என் பெட்டி மாத்திரம் அந்த இடத்தில் இருந்தது. திடீரென்று இடியே தலையில் விழுந்தாற்போல் உடம்பெல்லாம் சிலிர்த்து வியர்வையால் உடம்பு நனைந்தது. பெட்டி, பணம் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு மறைந்துபோனது பையனல்ல, சாட்சாத் பாபாவேதான். நான் விக்கி விக்கி அழுதேன். ஜனங்கள் கூடிவிட்டார்கள். ஆளுக்கொரு முகமாக கேள்வியால் துளைத்தார்கள். நான் பணத்தை பரிகொடுத்து பரிதாபமாக நிற்பதாக ஒருமித்தமாக எல்லோரும் நினைத்து என்னை கேள்விமேல் கேள்வி கேட்டு துளைத்தார்கள்.

நான் அதிர்ச்சியிலிருந்து மீள சுமார் 20 நிமிடமாகியது. பிறகு அங்கு கூடினவர்களிடம் விஸ்தாரமாக ஆங்கிலத்தில் பையனைப்பற்றி சொன்னேன். அவர்களும் அந்த பையன் பாபாவேதான் என்றும், அவர் எந்த ரூபத்திலும் வந்து பக்தர்களுக்கு உதவுவதாகவும், நான் ரொம்ப கொடுத்துவைத்தவனென்றும், இம்மாதிரி அங்கு அடிக்கடி பாபா லீலைகள் செய்வதாகவும், ஆனால்

இது ரொம்பவும் டாப் என்றும் சொன்னார்கள். இவ்வாறாகத்தான் பாபா பள்ளியில் நான் சேர்ந்தேன்.

பாபாவே நேரில் வந்து என்னை சீரடிக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்ததால் என் பக்தியும் நம்பிக்கையும் திடமாகிவிட்டன. வெவ்வேறு கடவுளை வெவ்வேறு ரூபத்தில் தியானித்து வந்த என்னை பாபா ஆட்கொண்டு ஒரே இடத்தில் பாபாவிடமே பக்தி வைத்து ஆட்கொண்டார். 30 வயது வரை எல்லா கோயில்களிலும் சுற்றி வந்த என்னை பாபாவே கனவில் தோன்றி மற்ற எல்லா கடவுள் தோற்றமும் வெறும் மாயையே என்று சொல்லிய அன்றையிலிருந்து மயிலாப்பூர் பாபா கோயிலுக்கு தினமும் செல்ல ஆரம்பித்தேன். 1986ல் ஆபீஸிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு முழு நாளும் பாபா கோயிலே கதி என்று சுற்றி வந்தேன். அங்குள்ளவர்கள் அபிஷேகம் செய்யும் பாக்கியத்தை எனக்களித்தார்கள்.

ஆக ஒருநாள் விடாமல் காலை 4 மணிக்கெல்லாம் பாபா கோயிலுக்குச் சென்று பாபா அபிஷேகம், துணி அலங்காரம் பண்ணுவது, மாலை சாத்துவது என்பது போன்ற எல்லா வேலைகளும் செய்து வந்தேன்.

இந்த கோயிலை நிறுவியவர் பூஜ்ய ஸ்ரீ நரசிம்ம சுவாமிஜி அவர்கள். அவருடைய சமாதியும் பின்னால் தியான மண்டபத்தில் உள்ளது. அதை காட்டேஜ் என்றழைப்பார்கள். ஆனால் வருடத்திற்கு ஒருமுறைதான் அந்த சமாதிக்கு அபிஷேகம் செய்வார்கள். இதைக் கண்ணுற்ற நான் பாபாவை நமக்கு தெரியப்படுத்தி அபிஷேகம் செய்யும் பாக்கியத்தை கொடுத்தவர் சுவாமிஜிதானே. அவர் சமாதியை சுத்தப்படுத்தி, பன்னீர் போட்டு துடைத்து மேலே விதவிதமான பீதாம்பர வஸ்திரங்களினால் சார்த்தி, மாலைகளை போட்டு வலம் வந்து நமஸ்கரித்த பிறகே பாபாவிற்கு அபிஷேகம் செய்ய ஆரம்பித்தேன்.

இவ்வாறாக செய்வதைப்பார்த்த கோயில் நிர்வாகிகள் என்னிடம் நிவேத்தியம், அன்னதானம் மற்ற பூஜா காரியங்களையும் ஒப்படைத்தார்கள். பாபாவிற்கு வந்த சேஷ வஸ்திரங்களையும் என்னிடமே ஒப்படைத்தார்கள். ஆக விதவிதமாக பாபாவையும், ஸ்வாமிஜி சமாதியையும் அலங்கரித்து சந்தோஷப்பட்டேன்.

ஆறுமாதத்தில் ஒருநாள் பகல் தூக்க கனவில் பூஜ்யஸ்ரீ சுவாமிஜி தோன்றி என் ரூமில் உனக்கு ஒரு உத்தரவு கிடைக்கும். அதன்படி நட, உனக்கு நன்மை கிடைக்கும் என்று சொல்லி மறைந்தார். விழித்தவுடன் அதைப்பற்றி அதிசயப்பட்டு சுவாமிஜி ரூம் எது என்று குழம்பினேன்.

மறுநாள் காலையில் 5 மணிக்கு சுவாமிஜியின் சமாதிக்கு வழக்கம்போல் சேவை செய்துவிட்டு கனவையும் மறந்து வெளியே வந்து Collapsed Gate-l சாத்தும்பொழுது நான் எந்த சமாதியை சுத்தப்படுத்தி பன்னீர் தெளித்து துடைத்து வஸ்திரம் சாத்தி, மாலை போட்டு, வாசனை பத்திகள் ஏற்றிவைத்து வந்தேனோ அந்த சமாதியின் பேரில் ஒரு கசங்கிய காகிதம் எறியப்பட்டு கிடப்பதைப் பார்த்துப் பதறிப்போனேன். எவனோ மடையன் குப்பை பேப்பரை சமாதியின் பேரில் எறிந்துள்ளானே என்று சொல்லிக்கொண்டே கேட்டை திறந்து அந்த பேப்பரை எடுத்தால் அதனுள் ஒரு கற்பூர கட்டி இருப்பதைப் பார்த்து அதிர்ந்து போனேன். உடனே என் காதில் ஆரத்தி, ஆரத்தி, ஆரத்தி என்று மூன்றுமுறை யாரோ சத்தம் போட்டு ஓதினார்கள். உடனே உடம்பெல்லாம் வியர்வையால் நனைந்தது. சுவாமிஜி, இவ்வளவு தூரம் எல்லாம் செய்தும், மங்கள ஆரத்தி செய்தால்தானே பூர்த்தியாகும் என்று சொல்வதுபோல் ஒரு காட்சி கிடைத்தது.

ஆமாம். துடைத்து அலங்காரம் செய்தபின் மங்கள ஆரத்தி எடுத்தால்தானே சுவாமிஜியின் பூஜை பூர்த்தியாகும். இந்த ஒரு சின்ன விஷயம் நமக்கு புரியாமல் சுவாமிஜியே சொன்ன பிறகு அல்லவா புரிகிறது. சுவாமிஜியிடம் மிகவும் மன்னிப்பு கேட்டுக்கொண்டு அன்றையிலிருந்து நெய் ஆரத்தியே சுவாமிஜிக்கு எடுக்கலானேன். இதுவே சுவாமிஜி என்னை அவர் பள்ளியில் சேர்த்துக் கொண்டது.

ஒரு வாரத்திற்குள் சுவாமிஜி மறுபடியும் என் பகல் கனவில் தோன்றி பாபாவைப் போல் தனக்கும் ஒரு சிலை வைக்குமாறும், ஆனால் அச்செலவை நானே செய்யவேண்டுமென்றும், எல்லோருக்கும் அவர் காட்டேஜில் நிறைந்திருந்து நன்மைகள் செய்வதாகவும் கூறினார். எனக்கு ரொம்பவும் சந்தோஷமுண்டாகி மறுநாள் பாபா கோயிலுக்குச் சென்று சுவாமிஜி காட்டேஜை திறந்து

சுத்தப்படுத்தும்பொழுது பழைய காரியதரிசி திரு. விஸ்வநாதன் ஒரு சொம்பு நிறைய பாலுடன் வந்து அன்றிரவு சுவாமிஜி அவர் கனவில் வந்ததாகவும், என்னிடம் ரூ. 500 மட்டும் கொடுத்து சுவாமிஜி சிலைக்கு ஏற்பாடு செய்ய சொல்லுமாறும், ஆனால் வேறு யாரிடமும் பணம் வாங்காமல் மிகுதி முழுக்க நானே செலவு செய்ய வேண்டுமென்றும சொன்னதாகச் சொல்லி என்னிடம் ரூ. 500 கொடுத்தார்.

எனக்கு மெய்சிலிர்த்து. சுவாமிஜி எப்படியெல்லாம் ஏற்பாடு செய்கிறார் என்று வியந்து. ஜெய்ப்பூருக்கு யாரை அனுப்பலாம் என்று யோசித்தேன். 3 பேர்கள் தயாராக வரவே சுவாமிஜி போட்டோ ஏற்பாடு செய்து 3 பேரையும் அனுப்பி வைத்தேன். இம்மாதிரி 3 தடவை ஜெய்ப்பூருக்கு அனுப்பி கடைசியில் ஜெய்ப்பூரிலிருந்து கடை முதலாளியே சுவாமிஜி சிலையுடன் சென்ட்ரல் ஸ்டேஷன் வந்து எனக்கு போன் செய்து கோயிலுக்கு அழைத்துச் செல்லும்படி கூறினார். அதே மாதிரியாக சுவாமிஜி சிலை மிகவும் அழகாக வடிக்கப்பட்டு எல்லோரும் வியக்கும்படி வந்து சேர்ந்தது. ஒரே வாரத்தில் எவ்வளவோ எதிர்ப்புகளையும் சமாளித்து சுவாமிஜியின் அனுக்கிரகம் என் பக்கம் முழுமையாக இருந்ததால் சிலை அவர் காட்டேஜில் மையமாக வைக்கப்பட்டு குடமுழுக்கும் செய்யப்பட்டது. Justice பக்தவச்சலம், சுவாமிஜியின் சிலையை திறந்து வைத்து பாராட்டினார்.

சுவாமிஜி சிலைக்கு தினசரி அபிஷேகம், அஷ்டோத்திரம், நிவேத்தியம் எல்லாம் கிரமப்படி நடந்து வந்தது. 13 வருடங்கள் இவ்வாறு செய்து வந்த நான் சில தவிர்க்க முடியாத காரணங்களால் கோயிலை விட்டு விலக வேண்டியதாயிற்று.

2 நாட்கள் கூட என்னால் அபிஷேகம் செய்யாமல் இருக்க முடியவில்லை. ஒரே அழுகையால் வீட்டில் பாபாவிடம் கதறினேன். 3வது நாளே பாபா கனவில் தோன்றி "உனக்காகவே ஒரு கோயில் கட்டு" என்றார். நான் மெய் சிலிர்த்து "அவ்வளவு பணம் என்னிடம் இல்லை" என்றேன்.

NO EGO. BE A TOOL. TAKE EFFORTS, அதாவது நான்தான் கட்டுகிறேன் என்ற தலைக்னமில்லாமலும், ஒரு கருவியாக

இருந்து முயற்சி செய்தால் சுலபமாக கோயில் கட்டி முடிக்கலாம் என்று சொன்னார்.

எனக்கு ஒரு தைரியம் ஏற்பட்டு பாபாவை வணங்கி நான் கோயில் கட்ட முயற்சிப்பதாகவும் அவரே பக்க துணையாக இருந்து முடித்துத் தரவேண்டுமென்று வேண்டினேன். அவரும் என் தலையில் கைவைத்து ஆசீர்வதித்தார். உடனே விழிப்பு ஏற்பட்டு அது கனவாகவே தோன்றவில்லை. நேரிலேயே பாபா உத்தரவு கொடுத்த மாதிரியே தோன்றியது. அவர் மறைந்த பிறகுதான் அவர் பாபாவே என்றும், ஒரு மின்னல் போன்று ஒன்று என் தலையில் இறங்கி வியர்த்துக் கொட்டியது. பிரத்தியட்சமாக பாபா வந்தும் அவரை தெரிந்து பாதத்தை கெட்டியாக பிடித்துக் கொள்ளாமல் போய்விட்டோமே என்று நினைத்து அழுதேன்.

பாபாவே என்னுடனிருந்து இரவில் அடுத்தநாள் செய்ய வேண்டியதை சொல்வார். அதே மாதிரியாக செய்துதான் பாபா கோயில் உருவாகியது. ஒவ்வொரு கல்லும், ஆர்ட்டும், பெயிண்டும் எல்லாமே பாபா சொல்படி வைக்கப்பட்டிருக்கிறது. வாஸ்து பார்க்காமலேயே கட்டினேன். பாபா உடனிருந்து செய்யும்பொழுது வாஸ்து எதற்குப் பார்க்க வேண்டும். ஒருவரிடமும் கை நீட்டாமல் வேண்டியவற்றை பாபா அப்போதைகப்போது கொடுத்து உதவினார். அப்படி வந்த கோயிலில் பாபா பிரத்தியட்சமாக எழுந்தருளியுள்ளார்.

சீரடியிலிருந்து வந்த லஷ்மண் சியாம்கர்ணா சருஹானா என்பவர் நம் சிலையைப் பார்த்து மகிழ்ந்து சீரடி சிலையைவிட அழகாக இருப்பதாகவும். நரம்பு, கண் ஒளி, ருத்ரம், சாந்தம், மந்தஹாசம் இவைகள் எல்லாம் இயற்கையாக, தத்ரூபமாக அமைந்திருப்பதாகவும் சீரடி மந்திரில் சொல்லி பாபா பழைய குடையை வாங்கித் தருவதாக சொல்லிப் போனார்.

ஒவ்வொருநாளும் ஒவ்வொரு லீலையை பாபா நடத்திக் காண்பிக்கின்றார். ரொம்பவும் பக்தர்களுக்கு வேண்டியதை வழங்கி வருகிறார். எல்லா நோயையும் நொடியில் போக்குகிறார். கேன்ஸர் நோயையும் 10 நாட்களில் குணப்படுத்தியுள்ளார். இவரால் முடியாதது ஒன்றுமில்லை.

உங்கள் கையிலிருக்கும் இப்புத்தகத்தின் நகல் பாபாவால் சொல்லப்பட்டு என்னால் எழுதப்பட்டது. சுமார் 40 வருடங்களாக என்னிடம் உள்ளது. கைவந்தபடி பிரித்து பக்தர்களின் பிரச்சனைக்கு தீர்வு சொல்லி வந்தேன். மேலும் பக்தர்கள் ஏராளமாக என்னிடம் வந்து தமிழில் சத்சரிதம் கேட்டு விரக்தியுடன் திரும்புகிறார்கள். ஆவலாக படிக்கக் கேட்டும் நம்மால் கொடுக்க முடியவில்லையே என்று வருந்தினேன். பாபாவின் பிரச்சாரத்திற்காக பாபாவிடம் பக்தி செலுத்தி பக்தர்கள் முன்னேற்றமடைய இதை இலவச வெளியீடாக வெளியிட்டிருக்கிறேன். இதற்குண்டான செலவை சில பக்தர்கள் தானாகவே முன்வந்து ஏற்றிருக்கிறார்கள். அவர்களுக்கு எல்லா பாக்கியங்களும், செல்வங்களும் வேண்டிய யாவும் கிடைத்து ஆரோக்கியத்துடன் தீர்க்காயுசாக இருக்க பாபாவை பிரார்த்திக்கின்றேன்.

இப்புத்தகத்தை நீங்கள் எல்லோரும் ரசித்து படித்து பாபாவின் கருணையால் எல்லா பாக்கியங்களும் கிடைக்கப்பெற்று இன்புற பாபாவிடம் பிரார்த்திக்கின்றேன்.

பக்தர்கள் இப்புத்தகத்தை ஏகதின சப்தஹமாக படித்து அதாவது ஒரே நாளில், காலையில் ஆரம்பித்து இரவு 8 மணிக்குள் முடித்து விடலாம். மத்தியில் 3 வேளை பாபாவிற்கு பிரசாதமாக ஏதாவது அளித்து ஆரத்தி செய்யவும். எல்லாவித பிரச்சனைகளையும் முன் வைத்து இந்த ஏகதின சப்தஹம் செய்து நிறைவு பெறலாம் என்று நிச்சயமாகச் சொல்லி இந்த முன்னுரையை முடிக்கின்றேன்.

## ஒரு பக்தரின் விமர்சனம்

ஓம் ஸ்ரீ சாய்ராம்

சமர்த்த சற்குரு ஸ்ரீசாயிநாத் மஹராஜ், யோகிராஜர் சகல தேவதா ஸ்வரூபி, சீரடியில் 60 ஆண்டுகளுக்கும் மேலாக வாழ்ந்து 1918ல் மகாசமாதி அடைந்தார். அன்றும் இன்றும் தமது உண்மையான பக்தர்கள் நிறைந்த மனதுடன் வேண்டுவோரை தகுதியான அளவு காப்பாற்றி வருகின்றார் என்றும், காப்பாற்றுவார் என்றும், மற்றவர்களது பாவங்களை தான் ஏற்றுக் கொள்வதற்காக பிச்சை எடுத்து வாழ்ந்து வந்தார். எல்லா உயிர்களையும் சமமாக பாவித்து வந்தார். எந்த விலங்காயினும், பறவையாயினும், மனிதனானாலும் அவற்றினுள் உறையும் ஆன்மா ஒன்றுதான். இது கடவுளின் உயர்ந்த படைப்பு என எல்லா மக்களும் உணர்தல் வேண்டும் என அறிவுறுத்தினார். அவர் யாரையும் தமது சிஷ்யனாக ஏற்கவில்லை. தமது அடுத்த அவதாரம் என்ன என்ற விவரம் யாதும் கூறவில்லை. தமது மதம் யாது என கூறவில்லை. அதனை ஆராய முனைந்தோர்க்கு தெளிவான விடை இல்லை. எம்மதமும் சம்மதம் என்ற உயர்ந்த கருத்துதான் அவர்களுக்கு அளித்த பதில். பூமியில் பிறந்த ஒவ்வொருவரும் எங்ஙனம் பிறர்க்கு சேவை செய்து பிறவியின் காரணத்தை பயனுள்ளதாக, அன்பு நிறைந்ததாக வாழ வேண்டும் என்பதனை தான் வாழ்ந்து காட்டியதன் மூலம் உணர்த்தியவர். நாம் அனைவரும் இயன்ற அளவு தவறாமல் கடைபிடிக்க வேண்டியது அவசியம். அவர் எந்தவிதமான தத்துவங்களையும், அறிவுரைகளையும் மக்களுக்கு புத்தக வடிவில் அமைத்துக் கொடுக்கவில்லை. அவரது வாழ்க்கையே பூரண தத்துவம். கூர்ந்து உணர்ந்தவர்களுக்கு நன்கு புரியும். அவரது பக்தர்கள் அவரை வற்புறுத்தி இணங்க வைத்து அவரது ஆசியுடன் எழுதிய வரலாறுதான், இன்றைய தலைமுறையினராகிய நமக்கெல்லாம் கிடைத்தற்கரிய பொக்கிஷம். அவர் வாழ்ந்த காலத்தில் நாம் காண இயலாத அருஞ்செயல்களை அவரது புத்தகங்களை படிப்பதனால் மனதில் திரை மூலம் காணலாம், கண்டு மகிழலாம், தத்துவங்களை

உணரலாம். சாயிநாதர் வாழ்வின் தத்துவங்களை பல்வேறு பக்தர்கள் பல்வேறு விளக்கங்கள் மூலம் நமக்கு அளித்துள்ளனர். அவை யாவற்றையும் படித்து பயனடைதல் நமது பாக்கியம்.

அவர் மகாசமாதி அடைந்த பின்னர் தோன்றிய அநேக பக்தர்கள் இடைவிடாது அவரது தியானத்தின் பெயரில் சாயிநாதரது பூரண அருள்பெற்று யோகியாய் வாழ்ந்துள்ளனர். இன்னும் பலர் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் மூலமாக சாயிநாதர் தனது பக்தர்களின் குறைகள், கவலைகளை போக்கி வருகின்றார். பரிபூரண நம்பிக்கையும் மிக மிக அவசியம். அங்ஙனம் நடந்து கொண்டால் நிச்சயம் வேண்டுவனயாவும், அவர்கள் தகுதிக்கேற்ப அருள்புரிவார்.

அவர் வாழ்ந்த காலத்தில் சீரடி ஒரு கிராமம். சீரடி ஒரு பெரிய புண்ணிய ஷேத்திரமாகவும், உயர்ந்த மகான்கள் வருகை இடமாயும், லட்சக்கணக்கான மக்கள் வரும் புண்ணிய பூமியாகவும் மாறும் என்று கூறப்பட்டது. ஆனால் அந்த நாட்களில் அக்கூற்றை யாவரும் உண்மையாகும் என நம்பவில்லை. காரணம் சீரடி ஒரு குக்கிராமம். மேலும் சாயிநாதரின் பரிபூரண சக்தியை அனைவரும் உணரவில்லை. ஆனால் இன்று அக்கூற்று நூற்றுக்கு நூறு சதம் உண்மை என அனைவரும் உணர்ந்துவிட்டனர். உயர்ந்த மாணிக்கமான சாய்நாதர் வாழ்ந்த ஒரே காரணம்தான் சீரடிக்கு இத்தகைய உயர்வு. 2000ம் ஆண்டு ஜனவரி 1-ம் (புத்தாண்டு) தினத்தன்று நாங்கள் சீரடியில் சாயிநாதரின் தரிசனத்திற்கு சென்றபோது மக்கள் வரிசை சீரடி கிராமத்தையே சுற்றி வந்தது கண்டு மெய்மறந்து போனோம். என்னே மக்களின் நம்பிக்கை ! பக்தி ! அனுபவங்கள் ! இவையாவும் நாளுக்குநாள் வளர்ந்து கொண்டே இருக்கின்றது. அத்தனை லட்சோப லட்சம் மக்களின் கவலைகளை போக்குகின்றார். காப்பாற்றி வருகின்றார்.

சீரடியில் ஆலயத்தை சுற்றிலும் மற்ற இடங்களிலும் அநேக உயர்ரக சிற்றுண்டி சாலைகளும் தங்குமிடங்களும் யாத்ரீகர்களின் வசதிக்காக தோன்றி உள்ளன. அவ்வளவு முன்னேற்றம் அந்த குக்கிராமத்தினில். எவ்வளவு இடங்களில் சாயிநாதரின் கோவில்கள்

தோன்றி வருகின்றன. அவ்வளவும் நிறைந்த பக்தியுடனும் சேவையுடனும் நடத்தப்பட்டு வருகின்றன. நம் நாட்டிலும் அயல் நாட்டிலும் அநேக இடங்களில் சாயிநாதரின் கோயில்கள் தோன்றியுள்ளன. அதுவே அவரது பக்தர்களின் வளர்ச்சிக்கு பூரண எடுத்துக்காட்டு.

அநேக மகான்கள் வாழ்ந்து மகாசமாதி அடைந்துள்ளனர். ஆனால் சாயிநாதரின் பக்தர்களின் வளர்ச்சியும், ஆட்கொள்ளும் விதமும் அளவிடமுடியாத அளவு உயர்ந்து வருகின்றது.

**பகவத்கீதை** : ஸ்ரீகிருஷ்ண பகவானால் அர்ஜுனருக்கு புகலப்பட்டது. உலக மக்களுக்காக உயர்ந்த தத்துவங்கள் அடங்கியது. எளிய மக்களால் புரிந்து கொள்வது கடினம். கடைபிடிப்பது கடினம்.

ஆனால் சாயிநாதரின் வாழ்க்கை அனைவரும் எங்ஙனம் வாழ வேண்டும் என்பதை எளியமுறையில் உணர்த்துகின்றது.

**ஸ்ரீமத்ராமாயணம்** : உயர்ந்த பக்திக்கும் ஏகபத்தினி விரதத்திற்கும் வழிகாட்டும் உயர்ந்த நூல். ஆனால் சாய்நாதரின் வாழ்க்கை சரித்திரம் எல்லாவகையிலும் மனிதன் கடைபிடிக்க வேண்டிய நெறிகளை எளிய முறையில் காட்டுகின்றது.

**மகாபாரதம்** : சுற்றமும் நட்பும், பொன், பொருள் ஆசையின் காரணமாய் எங்ஙனம் இருத்தல் கூடாது என்பதனை விளக்குகிறது. முடிவினில் எத்தகைய அழிவு ஏற்படும் என்று காட்டுகிறது. தர்மத்தினை காப்பதற்காக பகவான் அதர்மத்தின் வழியில் சென்ற அழகினை விளக்குகின்றது. ஆயின் சாயிநாதரின் வாழ்க்கை அதர்மம் என்ற சொல்லுக்கே இடமில்லாமல் அநேக தர்மங்களை நமக்கு விளக்குகின்றது.

**விஷ்ணு சஹஸ்ரநாமம்** : பீஷ்மரால் (பிதாமகர்) பகவானைப் பார்த்து பாடப்பட்ட புனிதமான பாடல்கள். அனைவரும் படிக்க வேண்டிய நூல் என்று சாயிநாதரால் அறிவுறுத்தப்பட்டது. எளிய மக்கள் சிரமப்பட்டு புரிந்து கொள்ளக் கூடியது.

ஆனால் சாயிநாதரின் வாழ்க்கை எந்தவித கஷ்டமுமில்லாமல் பாமர மக்களும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய தத்துவங்கள் அடங்கிய புத்தகம்.

**ஆதித்ய ஹிருதயம்** : அகத்திய முனிவரால் ஸ்ரீராமபிரானுக்கு போரின் வெற்றிக்காக போதிக்கப்பட்ட உயர்ந்த நூல். பகவானுக்கே பூவுலகில் வழிகாட்டி. ஆனால் பாமர மக்கள் முயற்சியுடன் தான் புரிந்து கொள்ள முடியும்.

ஆனால் சாயிநாதரோ ஹோமம், யாகம் ஒன்றும் சிரமப்பட்டு நடத்த வேண்டாம். எனது நாமஜபம் ஒன்றே போதும். அனைத்து அருளும் கிடைக்கும் என்றார். என்னே கருணை! அருள்! எளிய மக்களும் உயர்ந்த பலன் அடைய சுலபமான வழி அவரது நாம ஜபமே போதும். இன்றைய தேதியிலும் உணரப்பட்டுவரும் உயர்ந்த உண்மை.

**அவரது வாழ்க்கை**
**எல்லா தத்துவ நூல்களைக் காட்டிலும்**
**நமக்கு சிறந்த வழிகாட்டி.**

எளிய மக்களாகிய நாம் அனைவரும் அவரது வாழ்க்கை தத்துவங்களை புரிந்துகொண்டு கடைபிடித்து பூரண அருளுக்கு பாத்திரங்களாய் அமைந்து நமது வாழ்க்கையை இனிதே கடப்போம்.

அத்தகைய சாயிநாதரின் ஆலயம் கௌரிவாக்கத்தில் (தாம்பரம், சென்னை) அழகிய விதமாய் அமைத்து எல்லாவிதமான பூசைகளையும் முறைப்படி நடத்தி வரும் திரு. குலசேகர பெருமாள் அவர்கள் நீண்ட ஆரோக்கியத்துடன் சாயிநாதரின் சேவை தொடர மென்மேலும் வளர பாபாவின் பரிபூரண ஆசிகள் கிடைக்க பிரார்த்திப்போம். நாம் அனைவரும் கோவில் நிகழ்ச்சிகள் அனைத்திலும் பங்கேற்று நிறைந்த அருள் பெறுவோம்.

அருள்மிகு சாயிநாதர் தமது பக்தர்களை ஆட்கொண்ட வரலாறுகளும், அருள்புரிந்த வரலாறுகளும் இன்றைய தேதியில் நாம் அனைவரும் அறிந்து கொள்ளவேண்டும் என்ற உயர்ந்த நோக்குடன் திரு, குலசேகர பெருமாள் அவர்கள் இந்த புத்தகத்தை இலவசமாய் வெளியிடுகின்றார். அனைவரும் இனிதே படித்துப் பயன் பெறுவோம்.

OM SRI SAI RAM

**Mercurysun Publications**

Gowrivakkam, Chennai - 73.



## சமய சஞ்சீவி

# ஸ்ரீமத் சாயி ராமாயணம்

## காகா சாகேப் தீக்ஷிதர்

ஸ்ரீ சாயி பாபாவின் பக்தர்களில் மிகச் சிறந்தவர் காகா சாகேப் தீக்ஷிதர். எல்லாவற்றையும் துறந்து, பணம் குவிந்து கொண்டிருந்த வக்கீல் தொழிலையும் விட்டு, ஸ்ரீ சாயி பாபாவே கதி என்று பாபா மகாசமாதி அடைகின்ற வரையில் பாபாவுடனே இருந்து வலது கைபோல் உதவி வந்தார். பாபாவிடம் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தார்.

சீரடியில் வந்து சேர்ந்ததினால் வருமானம் இல்லாமல் நின்று போய்விட்டது. சொந்தமாக 5 பங்களாக்கள் இருந்தும் வரும்படி குறைந்து ஒரு மார்வாடியிடம் 30,000 ரூபாய் கடன் வாங்கியிருந்தார். அந்த மார்வாடி பணத்தைத் திருப்பிக் கேட்கவே, ஒருநாள் தவணை குறிப்பிட்டு திருப்பித் தருவதாக வாக்களித்தார். ஆனால் வருமானமே இல்லாததினால் கொடுக்கும் வழி ஒன்றும் புலப்படவில்லை. பாபாவின்

பேரிலுள்ள நம்பிக்கையினால் தவணை நாள் குறிப்பிட்டு மார்வாடியின் தொந்தரவுக்காக ஒத்துக் கொண்டார். வேறு வழி ஒன்றும் தோன்றாமல் பாபாவையே பிரார்த்தித்து வந்தார். ஆபீஸ் அறையிலேயே உட்கார்ந்து பாபாவைத் தியானித்து வந்தார். இதன் மத்தியில் ஒரு கனவு ஏற்பட்டது. மார்வாடி மிகவும் தொந்தரவு செய்வதாகவும், அதற்கு தீக்ஷிதர் தனக்கு சர்ஸிமன்லால் போன்ற மிகப்பெரிய பணக்காரர்கள் சிநேகிதர்களாக இருப்பதால் மார்வாடி கவலைப்பட வேண்டாமென்றும், சிநேகிதர்களிடமிருந்து வாங்கி கொடுப்பதாகச் சொன்னதாக கனவு கண்டார். உடனே விழிப்பு ஏற்பட்டு பாபாவின் படத்தின் முன்பாக ஒவென்று கதறி அழுதார். கனவில் கூட பாபாவே உதவி செய்வதாக அல்லவா தோன்ற வேண்டும். பணக்கார நண்பர்களை நம்பினால் சமயத்தில் கை விரிப்பார்களல்லவா. கனவில் பாபாவை நம்பாமல் பணக்காரர்களை நம்பினதாகத் தோன்றியதற்கு பாபாவிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டார். ஆனாலும் தவணைநாள் வரையில் ஒரு முயற்சியும் செய்யாமல், தன் ஆபீஸ் நாற்காலியிலேயே உட்கார்ந்திருந்து பாபாவின் நாமஸ்மரணத்தில் ஈடுபட்டார்.

தவணைநாளும் வந்தது. தீக்ஷிதர் துளியும் கவலைப்படாமல் பாபா கண்டிப்பாக உதவுவார் என்று எண்ணி பேசாமலிருந்தார். மார்வாடி, தீக்ஷிதர் சொன்னபடி பணம் தரவில்லையே, போய் கேட்டு வரலாம் என்று தீக்ஷிதர் வாடாவிற்கு கிளம்பினார். அதே சமயத்தில் தீக்ஷிதரைத் தேடிக் கொண்டு தீக்ஷிதரின் பழைய நண்பரின் (பணக்காரர்) மகன் வாடாவிற்கு வந்து தீக்ஷிதரைப் பார்த்து, தன் தகப்பனார் இறந்து விட்டதாகவும் ஏராளமான சொத்துக்களை வைத்து எப்படி பாதுகாப்பது என்பதை வழி தெரிந்து கொள்ள தகப்பனார் உயிருடன் இருந்தபோது சொன்ன மாதிரி, தீக்ஷிதரை ஆலோசனை கேட்க வ்ந்திருப்பதாகவும் சொன்னான். தீக்ஷிதருக்கு பாபாவின் லீலையை உணர்ந்து விக்கித்துப் போனார். சிறிது நேரம் ஒன்றும் பேச முடியாமல் கண்களில் நீர் பெருக பாபாவின் லீலையைப் போற்றி மௌனமாக இருந்தார். நண்பரின் மகன் தன் தகப்பனார் மறைவுக்காக தீக்ஷிதர் அழுவதாக நினைத்து 30,000 ரூபாயை

உடனே முதலீடு செய்தால் போதுமென்றும் மிகுதி சொத்துக்களுக்கு பிற்பாடு ஆலோசனை கூறலாம் என்று சொன்னான்.

தீக்ஷிதர் தன்னுடைய க்ஷீணதசையைக் கூறி, தனக்கும் 30,000 ரூபாய் ஒரு தவணையை கொடுக்க உடனே வேண்டுமென்றும், சொத்துக்கள் இருந்தும் வரும்படி இல்லாததால் திருப்பிக் கொடுப்பதில் தாமதம் ஏற்படலாமென்றும் சொன்னார். தன் தகப்பனாரின் நண்பருக்கு சமயத்தில் உதவுவதே சாலச் சிறந்ததாகும் என்று சொல்லி 30,000 ரூபாயை தீக்ஷிதரிடம் கொடுத்துவிட்டு போய்விட்டான். மார்வாடி வந்தவுடன் பணத்தை கொடுத்ததும் மார்வாடிக்கு ஆச்சரியம் ஏற்பட்டு நடந்ததைக் கேள்விப்பட்டு பாபாவின் லீலையை அறிந்து சந்தோஷமடைந்தார்.

## நானா சாகேப் சந்தோர்க்கர்

நானா சாகேப் சந்தோர்க்கர் டெப்டி கலெக்டராக பணியாற்றி வந்தார். ஜமாபந்திக்கு புறப்பட்ட கிராம அதிகாரி பாபாவை சேவிக்க வந்தபோது பாபா, நானா சந்தோர்க்கரை தான் வரச் சொன்னதாக சொல்லும்படி சொன்னார். அந்த கிராம அதிகாரி "பாபா, ஒரு பெரிய பதவியிலிருப்பவரை எப்படி நான் நமது கிராமத்திற்கு அழைக்க முடியும். தங்கள் பெயரையே கேள்விப்பட்டிருக்க மாட்டார். மேலும் கீழ் உத்தியோகஸ்தன் கூப்பிட்டால் தனக்கு சாதகமாக ஏதோ காரியத்தை சாதித்துக் கொள்ளவே கூப்பிடுவதாக நினைப்பார்" என்று சொன்னார். பாபா "பயப்படாமல் என் பெயரைச் சொல்லி நான் அழைத்ததாகச் சொல், கண்டிப்பாக வருவான்" என்றார். அதே மாதிரியாக கிராம அதிகாரி ஜமாபந்தியில் நானா சந்தோர்க்கரை மிகவும் வினயமாக, பாபா அழைத்ததாகச் சொன்னார். நானா தனக்கு அந்த பக்கீரைத் தெரியாதென்றும், கிராம அதிகாரி தன்னுடைய சொந்த நலனுக்காகவே இப்படியொரு நாடகமாடுவதாக வசை மொழிந்தார். கிராம அதிகாரி நடந்ததை பாபாவிடம் சொன்னார். மறுபடியும் பாபா, கிராம அதிகாரி மூலமாக அழைத்தார். அப்பொழுதும் அதே பதில்தான். கடைசியாக மூன்றாவது தடவையாக அழைத்தனுப்பினபோது நானா யோசித்து வருவதாக வாக்களித்தார்.

ஒரு நாள் நானா, பாபாவை தரிசிப்பதற்கு சீரடிக்கு வந்தார். ஒரு மகானை பார்ப்பதற்கு ஏதாவது கொண்டுவராமல் வந்து விட்டோமே என்று நினைத்து ஜோபியை தொட்டுப்பார்த்ததில் தன்னைப் பார்ப்பதற்காக ஒருவர் கொண்டு வந்து கொடுத்த பாதாம் கொட்டையும், கல்கண்டு பொட்டலமும் இருப்பதைக் கண்டு சந்தோஷித்து பாபாவிடம் மசூதிக்குச் சென்று வணங்கினார். பாபா விடாமல் சொல்லியனுப்பவே வந்தாரேயல்லாமல் இச்சையுடன் வரவில்லை. பாபா நானாவைப் பார்த்ததும் சந்தோஷித்து வரவேற்றார். நானா பாபாவைப் பார்த்து, தன்னை அழைத்ததின் காரணத்தை வினவினார். பாபா நானாவை தனக்கு அநேக ஜன்மங்களாக தெரியுமென்றும், இந்த ஜன்மத்திலும் பரிச்சயம் விடக்கூடாது என்பதற்காகவே அழைத்ததாகச் சொன்னார். இனி அடிக்கடி வந்துபோகும்படி சொன்னார். அவ்வாறு செய்ய நானாவிற்கு மனமில்லாவிடினும், பாபாவிடம் முன் ஜன்மங்களைப் பற்றி தனக்கு தெரியாதென்றும், நேரமிருந்தால் வருவதாகவும் சொல்லி விடை பெற்றார். பாபாவும் ஆசீர்வதித்து விடை கொடுத்தார்.

ஆனால் நானாவிற்கு தன்னை அறியாமலேயே பாபாவிடம் ஒரு பற்றுதல் ஏற்பட்டு அடிக்கடி தரிசனம் செய்ய சீரடிக்கு வந்தார். புறப்படும் வரையில் சீரடி செல்வதாக எண்ணம் இல்லாவிடிலும், திடீரென்று புறப்பட்டு சீரடிக்கு வந்து சேருவார். பாபாவிடம் அன்யோன்யமான பக்தியும், நம்பிக்கையும் நானாவிற்கு பாபாவின் மேல் வளரலாயிற்று.

ஒருநாள் அரிச்சந்திர மலையின் உச்சியிலிருக்கும் தேவியின் கோயிலுக்குச் சென்று தரிசித்துவர ஒரு நண்பருடன் கிளம்பினார். நானாவிற்கு ஸ்தூல சரீரம். வெய்யில் மிக உக்கிரமாக காய்ந்தது. ஆக நானாவிற்கு மலைமேல் ஏற, ஏற மூச்சு வாங்கிற்று, வியர்வை பொழிந்தது, நாக்கு வரண்டு, தாகத்திற்கு தண்ணீருக்காக ஏங்கினார். ஒன்றும் முடியாமல் ஒரு பாறை மீது உட்கார்ந்துவிட்டார். உடன் வந்த நண்பர், தண்ணீர் கிடைக்காது என்றும் முடியாவிட்டால் கீழே இறங்கி விடலாம் என்றும் சொன்னார். நானா பாபாவை நினைத்து, பாபா இருந்தால் நிச்சயமாக தண்ணீருக்கு ஏற்பாடு செய்வார் என்றார். நண்பர் பாபா அங்கு இல்லையென்றும், வீணாக பேசி அலட்டிக்

கொள்ளாமல், மலையை விட்டு இறங்குவதே மேல் என்றார். (இதே சமயத்தில் பாபா மசூதியில் அருகிலிருந்தவரிடம் "நானா தாகமாயிருக்கிறான், தண்ணீர் கொடுப்போம் என்றார்") அப்பொழுது அங்கு ஒரு வேடுவன் தலையில் 'கட்டை சுமையுடன்' தோன்றினான். நானா அவனைப் பார்த்து, ஐயா, இங்கு தண்ணீர் கிடைக்குமா என்று வினவினார். வேடுவன் "தாங்கள் அமர்ந்திருக்கும் பாறையினடியிலேயே தண்ணீர் உள்ளது" என்று சொல்லிவிட்டு ஓடி விட்டான். நானாவும், நண்பரும் பாறையை புரட்டிப் பார்க்க, சிறிதளவு ஊற்றுத்தண்ணீர் இருப்பதைப் பார்த்து ஆனந்தத்துடன் தாகம் தீரப் பருகினார்.

உடனே நானாவிற்கு பாபாவை நினைத்தவுடன் தண்ணீர் இருக்குமிடத்தை வேடுவன் மூலமாக காண்பித்து மறைந்தாரே என்று ஆச்சரியப்பட்டு, அன்று முதல் நம்பிக்கையோடு பாபாவை வணங்க ஆரம்பித்தார். தன்னுடைய உத்யோகஸ்தர்களுக்கும் இன்னும் அவர் செல்லும் இடங்களில் உள்ள எல்லா ஜனங்களிடமும், பாபாவின் லீலைகளை சொல்லி சீரடிக்குச் சென்று பாபாவை தரிசனம் செய்ய வைத்தார். இம்மாதிரியாக பாபாவிடம் வந்து சேர்ந்தவர் தான் தாஸ்கணு மகராஜ் என்பவரும்.

## தாஸ்கணு மகராஜ்

தாஸ்கணு மகராஜ் நானா சந்தோர்கரிடம் போலீஸ் கான்ஸ்டபிளாக வேலை பார்த்து வந்தார். அதிகமாக படிப்பில்லாவிடினும், கிராமத்தில் லாவண்ய மெட்டில் பாட்டுகள் அமைத்து, கூத்துக்கள் நடத்தி, தானும் அதில் பங்கெடுத்து நடித்து வந்தார். பிராமண வகுப்பை சேர்ந்தவராதலால், நானா சந்தோர்க்கர் பாபாவிடம் சென்றபோது, தன்னுடன் தாஸ்கணுவை அழைத்துக் கொண்டு போனபோது, சங்கடத்துடன் மசூதிக்குச் சென்றார். தாஸ்கணுவையும் தன்னுடைய பள்ளியில் சேர்க்க பாபா இவ்வாறு சீரடிக்கு வரச் செய்தார். சீரடியில் பாபாவின் லீலைகளைப் பார்த்து தாஸ்கணு படிப்படியாக பக்தரானார். பாபாவிற்கு தாஸ்கணு கான்ஸ்டபிள் வேலையை விட்டு மேலும் கூத்து முதலியவற்றிற்கு

பாட்டெழுதுவதை அறவே நிறுத்தி கீர்த்தனைகள் செய்யும்படி செய்வதற்கு அற்புத லீலைகளினால் மாற்றினார். தாஸ்கணுவிற்கு வேலையை விட விருப்பமேயில்லை. எப்படியாவது இன்ஸ்பெக்டராகிவிட வேண்டுமென்றும், அதற்கான பரீட்சையிலும் சேர்ந்தார். ஆனால் பாபா கண்டிப்பாக அவ்வேலை தாஸ்கணுவிற்கு கிடையாது என்று சொல்லிவிட்டார். தாஸ்கணு வேலையை ராஜினாமா செய்ய வைத்த லீலையை கவனிப்போம்.

தாஸ்கணுவிற்கு யாத்திரை செய்து க்ஷேத்திரங்களை சேவிப்பதில் பிரியம் அதிகம். ஒருநாள் கோதாவரியின் மறுகரையில் ஒரு க்ஷேத்திரத்திற்கு சென்று தரிசனம் செய்துவிட்டு திரும்புகிற சமயத்தில், அதிகாரியின் உத்திரவில்லாமல் வேறு இடத்திற்கு போய் வந்ததால் இவரைப் பிடிப்பதற்கு அதிகாரி தயாராக காத்திருந்தார். ஒரு படகோட்டியின் மூலமாக செய்தியறிந்த தாஸ்கணு, செய்வதொன்றறியாமல் தனக்கு நிச்சயம் தண்டனை கிடைக்கும், உத்தியோகமும் போய்விடும் என்று வருந்தி கோதாவரியில் இறங்கி பாபாவைப் பிரார்த்தித்தார். கைகளில் தண்ணீரை நிரப்பி, பாபாவிடம் பிரார்த்தித்து சத்தியம் செய்து பாபா இம்முறை காப்பாற்றிவிட்டால் நானே வேலையை ராஜினாமா செய்து விடுகிறேன் என்று பிரார்த்தித்தார். தாஸ்கணு பாபா நாமஸ்மரணையுடன் கரையேறியதும் ஒரு சிறிய கும்பல் ஒன்று ஓடப் பார்த்தது. தாஸ்கணு அவர்களை மடக்கி விசாரித்ததில், ஒரு இடத்தில் திருடிவிட்டு அப்பொருளை பங்கு போடும்பொழுது தாஸ்கணு கான்ஸ்டபிள் வரவே பயந்து ஓட ஆரம்பித்தாகத் தெரிந்து, அந்த திருட்டுப் பொருளை கைப்பற்றி, அத்திருடர்களுடன் ஸ்டேஷனுக்குச் சென்று தான் அத்திருட்டை கண்டுபிடிக்கவே அதிகாரியிடம் அறிவிக்காமல் போனதாகச் சொல்லி தப்பினார். அதிகாரியிடம் நல்ல பெயரும் கிடைத்தது.

இவ்வாறு பாபாவின் அபார சக்தியினால் காப்பாற்றப்பட்டும் வேலையை ராஜினாமா செய்ய மனம் வரவில்லை. மறுநாள் வேறொரு வேலையாக குதிரை மீது ஏறிச் சென்றார். சீரடியைக் கடந்து வேறொரு ஊருக்கு போக வேண்டியிருந்தாலும் சீரடியில் இறங்கி பாபாவை தரிசனம் செய்யாமலே போக நினைத்தார்.

ஏனென்றால் பாபா வேலையை ராஜினாமா செய்யவில்லையா என்று கேட்பாரே என்ற பயம். ஆனால் பாபாவிடம் தப்பிக்க முடியுமா? சீரடியை கடக்கும்பொழுது பாபா குதிரையின் எதிரில் தோன்றி தாஸ்கணுவை கீழிறங்கச் செய்தார். தாஸ்கணு பயந்து இறங்கி பாபாவின் காலில் விழுந்தார். பாபாவிடம் கொஞ்சமும் தப்பிக்க முடியாததை நினைத்து பயந்து நின்றார்.

பாபா "அடேய்! தாஸ்கணு! கோதாவரி தீர்த்தத்தை கையில் வைத்து யார் சத்தியம் செய்தது? செய்தாற்போல் நடந்து கொண்டாயா என்று கேட்டார். தாஸ்கணு மறுபடியும் வணங்கி, பாபா உத்தியோகத்தை விடத்தான் போகின்றேன். கொஞ்சம் பொறுங்களேன்" என்றார். பாபா "அடேய்! வந்த கண்டம் மறையவே உனக்கு கொழுப்பாகிவிட்டது. உன்னை வழிக்கு கொண்டு வர, இந்த பக்கிரிக்குத் தெரியும் என்றார். தாஸ்கணுவும் பாபாவிடம் மன்னிப்புக் கேட்டு இன்னும் கொஞ்ச நாளில் விட்டுவிடுவதாகச் சொல்லி விடைபெற்றார்."

தாஸ்கணுவிற்கு வேலையை விட்டுவிட மனமில்லை. ஆனால் பாபாவிற்கோ தாஸ்கணுவை பக்தி மார்க்கத்தில் கீர்த்தனை செய்து நல்வழிபடுத்த நினைத்தார். பாபாவின் எண்ணம், தன் பக்தர்களை நல்வழிப்படுத்துவதிலேயே இருந்தது. ஒரு சமயம் தாஸ்கணுவை காணாபீல் என்கிற கொள்ளைக்காரனைப் பிடிப்பதற்கு பிரத்தியேகமாக ஏற்பாடாகியது. தாஸ்கணுவும் இன்னும் இரண்டு கான்ஸ்டபிள்களுடன் லோல்வாணி என்கிற கிராமத்திற்கு வந்து, அந்த கொள்ளைக்காரனை பிடிப்பதற்கு முயற்சி செய்தனர். சீக்கிரத்திலேயே அந்த இரண்டு கான்ஸ்டபிள்களும் கொள்ளைக்காரனால் கொலை செய்யப்பட்டு விட்டார்கள்.

தாஸ்கணு தனியாக மாட்டிக்கொண்டு, இதிலிருந்து தப்ப முடியாமல் பயந்து பாபாவே கதியென்று, ஒரு ராமர் கோயிலில் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அந்த கொள்ளைக்காரன் ராமர் கோயிலுக்கு வந்து, தாஸ்கணுவைச் சுட முயற்சித்தான். உடனே தாஸ்கணு பாபாவை நினைத்து ராமர்

பாதத்தில் விழுந்து கதறினார். கொள்ளைக்காரனுடைய மனது மாறி, தாஸ்கணுவிற்கு அபயம் கொடுத்து, இனி தன் வழிக்கு வர வேண்டாமென்று புத்தி கூறி, உடனே வேலையை விட்டு விலகச் சொல்லி சென்றான். தாஸ்கணுவிற்கு பாபாவின் புத்திமதி ஞாபகத்திற்கு வந்து உடனே தன் வேலையை ராஜினாமா செய்தார். பாபாவிடம் பூர்ணமாக தஞ்சமடைந்து, வேண்டிய வசதிகளைப் பெற்று முன்னேற்றமடைந்தார்.

## மகல் சபதி

பாபாவை சீரடியில் முதன்முதலில் பார்த்து வரவேற்றது மகல்சபதி என்பவர். தட்டார் வேலை செய்பவர்; மிகவும் ஏழை; முதலில் பாபாவை மகம்மதியனாக நினைத்து கந்தோபா கோயிலில் தங்கவிடாமல் விரட்டி மசூதியில் தங்கச் செய்தார். படிப்படியாக பாபாவிடம் பக்தியுடன் பழக ஆரம்பித்தார். பாபா மகா சமாதி அடைகிற வரையில் பாபாவுடன் இரவில் மசூதியில் படுத்து வந்தார். இரவு வெகு நேரம் வரையில் பேசி பாபாவின் மார்பின் மீது கைவைத்து உறங்காமல் பாதுகாத்து வந்தார். பாபா ஏராளமான தக்ஷிணை வாங்கி மற்ற எல்லோருக்கும் விநியோகித்து வந்தும், மகல் சபதிக்கு ஒன்றும் கொடுக்காமல் ஏழையாகவே வைத்திருந்தார். ஒருநாள் ஹன்ஸ்ராஜ் என்கிற மார்வாடி, ஒரு வெள்ளித்தட்டு நிறைய பணத்தைக் கொண்டு வந்து பாபாவின் எதிரில் மகல்சபதிக்கு கொடுக்க வந்தபோது பாபா தடுத்து, மகல்சபதியை ஒன்றையும் எடுத்துக் கொள்ளாமல் திருப்பி விட்டார். ஏழ்மையே இறைவனிடம் சீக்கிரம் சேர்ப்பிக்கும் என்பார். பாபாவுடன் எப்பொழுதும் இருந்து சேவை செய்து வந்தார். மகல்சபதிக்கு மகன் பிறக்காததினால் பாபா ஒருநாள் மகல்சபதியை அழைத்து, சில நாட்கள் வீட்டிலேயே படுக்கைக்கு ஏற்பாடு செய்து ஒரு மகன் பிறக்கும்படி அருளினார்.

ஒருநாள் மகல்சபதியின் வீட்டில் ஒரு மணி அரிசியும் இல்லை. மகல்சபதியின் மனைவி தவித்தாள். பாபா மகல்சபதியிடம் தான் அன்று வீட்டிற்கு வருவதாகவும், திருப்பி அனுப்பாமலிருக்கும் படியும் சொன்னார். மகல்சபதி ஆச்சரியத்துடன் வீட்டுக்குச் சென்று பார்த்ததில்,

அவர் பெயருக்கு மணியார்டர் 10 ரூபாய் யாரோ அனுப்பியது வந்திருந்தது. பாபா திருப்பி அனுப்பக்கூடாது என்று இதை ஏற்கனவே குறிப்பிட்டதால், அப்பணத்தில் அரிசி முதலியன வாங்கி நாள் தள்ளினார். கடைசி வரையில் ஏழ்மையாகவே இருந்தார். பாபா 72 மணிநேரம் தன் உடலைவிட்டு பிரிந்திருந்த போது மகல்சபதி அவ்வுடலை தன் மடியின் மீது வைத்து மற்றவர்கள் எதிர்ப்பினும், தீவிரமாக காப்பாற்றி பாபா திரும்பவும் அவ்வுடலில் வருமளவு சேவை செய்தார்.

பாபா மகாசமாதியடைந்து சில மாதங்களுக்குப் பிறகு தன் தந்தையின் சிரார்த்தம் நாள் அன்று சீக்கிரமே எல்லா அனுஷ்டானங்களையும் முடித்து, உறவினர்களை சீக்கிரமாக சாப்பிடச் செய்து, நல்ல நேரத்தில், வெறும் லங்கோட்டியுடன் உட்கார்ந்து சாயி ஸ்மரனை செய்து கொண்டே உயிரை விட்டார். பாபா கண்டிப்பாக அவருக்கு மோக்ஷத்தை அளித்திருப்பார் என்பதில் என்ன சந்தேகம்.

மகல்சபதி தன் நண்பர்களான திரு. காசிராம், சிம்பி, அப்பா ஜக்ளே என்பவர்களையும் பாபாவின் சிறந்த பக்தர்களாக்கினார். காசிராம் பாபாவை மனம், வாக்கு காயம் ஆகியவற்றால் கடவுளாகவே வணங்கி வந்தார். பாபா ஆரஞ்சு கலரில் சொக்காய் அணிந்து வந்ததை பச்சை நிறத்தில் சொக்காய் தைத்து பாபாவை அணியச் செய்தார். பிறகு வெள்ளை குப்னியையே பாபா விரும்பி அணிந்தார். காசிராம் தினமும் பாபாவிற்கு புகை பிடிப்பதற்கு புகையிலையும், துனியில் போடுவதற்கு விறகும் சில சமயங்களில் பணமும் கொடுத்து உதவி செய்தார். மாதந்தோறும் காசிராம் தான் சம்பாதித்த பணங்கள் எல்லாவற்றையும் பாபாவின் முன் வைத்து எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளச் சொல்லி வற்புறுத்துவார். அப்பொழுது பாபாவிற்கு தக்ஷிணை வாங்கும் பழக்கமில்லாததால் பாபா அறவே பணத்தை வெறுத்து வந்தார். வற்புறுத்தலுக்காக பாபா ஒன்று அல்லது இரண்டு காசுகளை எடுத்துக் கொள்வார். அவ்வாறு சில நேரங்களில் பாபா பணம் எடுக்க மறுத்த போது, காசிராம் தேம்பித்தேம்பி அழுவார். இம்மாதிரியான வகையும் ஒரு விதத்தில் தற்பெருமையைத் தருவதாகும். பாபாவிற்கு தன்னால் எவ்வளவு

வேண்டுமானாலும் பணம் தரமுடியும் என்ற தற்பெருமை பாபாவினால் சிறிது காலத்தில் நீக்கப்பட்டது. காசிராமின் வியாபாரம் க்ஷீணித்து பாபாவிற்கு ஒன்றுமே கொடுக்க முடியாமல் பிறகு படிப்படியாக நல்ல நிலைமைக்கு வந்தார். தன்னால் எதையும் பாபாவிற்கு தரும் சக்தி உண்டு என்று நினைத்ததினால் சிறிது காலம் காசிராம் அவதிப்பட்டார்.

காசிராம் ஒரு துணி வியாபாரி. ஆகவே ஒவ்வொரு நாளும் மற்ற கிராமங்களுக்குச் சென்று சந்தையில் துணிகளை விற்று வந்தார். ஒருநாள் சீரடிக்கு திரும்பும் சமயம் கொள்ளைக்காரர்களால் தாக்கப்பட்டார். காசிராம் குதிரை மீது வந்ததைப் பார்த்த கொள்ளைக்காரர்கள், மற்ற வண்டிகளை விட்டு, காசிராமை சுற்றிக் கொண்டார்கள். காசிராம் தன்னிடமிருந்த ஒரு சிறு பொட்டலத்தைத் தவிர, எல்லாவற்றையும் கொடுத்து விட்டார். அப்பொட்டலத்தில் சர்க்கரைத்தூள் எறும்புகளுக்கு ஆகாரமாக போடுவதற்கு வைத்திருந்தார். அதை ஏதோ அபூர்வப் பொருள் என்று நினைத்து கொள்ளைக்காரர்கள் அதைப் பலவந்தமாக பிடுங்கினார்கள். காசிராம் விடாமல் இழுத்துப் பிடிக்கவே கொள்ளைக்காரர்கள் ஆத்திரத்துடன் தாக்க முற்பட்டனர். அப்பொழுது சீரடியில் பாபா ஓவென்று கூச்சலிட்டு காசிராம் பயப்படாதே "துணிந்து நில்" என்று சத்தமிட்டார். காசிராம் கீழே கிடந்த ஒரு கத்தியை எடுத்து மிக தைரியமாக இரண்டு கொள்ளைக்காரர்களை வெட்டி வீழ்த்தினார். கொள்ளைக் காரர்களில் ஒருவன் காசிராம் தலையில் பின்புறமாக ஒரு இரும்புத்தடியால் அடிக்கவே, காசிராம் மூர்ச்சித்து விழுந்தார். காசிராம் இறந்ததாக நினைத்து கொள்ளைக்காரர்கள் ஓடி விட்டனர். காசிராம் ஆஸ்பத்திரியில் சேர்க்க முற்பட்டபோது, காசிராம் தடுத்து தன்னை சீரடியில் பாபாவிடம் கொண்டுபோகச் சொன்னார். பாபா காசிராமிற்கு தைரியமளித்து, தானே காசிராமுக்கு கத்தியை கொடுத்ததாகவும் பயமில்லை என்றும் சொன்னார். சிறிது நாட்களில் காசிராம் குணமடைந்தார். அரசாங்கமும் காசிராமின் தைரியத்தை மெச்சி, ஒரு கத்தியை பரிசாகக் கொடுத்தது. பாபாவின் அனுக்கிரகமும், உதவியும் இல்லாமலிருந்திருந்தால் காசிராம் கொள்ளைக்காரர்களிடம் தப்பியிருக்கவே முடியாது. பக்தர்களை காப்பதில் பாபா எப்பொழுதும் விழிப்பாக இருந்து காப்பாற்றுகின்றார்.

## பாபாவின் தெய்வீக சக்திகள்

பாபா சீரடியில் காலடி எடுத்து வைத்தபோது தேவதாஸ் என்கிற சாது, பாபா என்கிற காந்த சக்தியால் இழுக்கப்பட்டு பாபாவிடம் சென்று வணங்கி நின்றார். தேவதாஸிடம் அநேக மகான்கள் வந்து போவது வழக்கம். மேலும் சீரடி கிராமம் ராமேஸ்வரம், பண்டரிபுரம் செல்லும் மிகப்பெரிய சாலையில் அமைந்திருப்பதால் அநேக மகான்கள் சீரடியில் தங்கி புனிதமடையச் செய்திருக்கின்றார்கள். ஒரு சமயம் ஜானகிதாஸ் என்கிற பெரிய மகான், சீரடிக்கு வந்து பாபாவை தரிசித்தார். பாபாவுடன் அநேக நாட்கள் தங்கியிருந்து பாபாவுடன் அளவளாவி வந்தார். கங்காகீர்பாபா என்பவரும் பாபாவிடம் வந்து அளவளாவினார். கங்காகீர்பாபா வந்தபோது பாபா கைகளில் மண்பானையில் தண்ணீர் சுமந்து செல்வதைப் பார்த்து, ஆகா இது ஒரு வைடூரியம். இவருடைய மதிப்பு அளவிட முடியாதது. இந்த கிராமத்தின் அதிர்ஷ்டம், இப்பெரிய மகான் இங்கு வந்து வசிக்கும் புண்யத்தை பெற்றது என்று சொல்லி பாபாவை நமஸ்காரம் செய்தார். இவ்வாறே ஆனந்த மகராஜ் என்னும் மகான் சீரடிக்கு அருகிலுள்ள நெவர்கோ என்னும் கிராமத்திற்கு வந்து தங்கினார். இவரை தரிசிக்க சீரடியிலிருந்து சாமா, நந்தாராம், சிவராம் மார்வாடி, பகந்சந்த் மார்வாடி ஆகியவர்கள் ஒரு மாட்டுவண்டியில் நெவர்கோவிற்கு சென்றார்கள். தரிசனம் முடிந்தவுடன் சீரடிக்கு மாட்டுவண்டியில் திரும்புகையில் ஆனந்தமகராஜ் ஓடிவந்து வண்டியில் ஏறிக் கொண்டு சீரடிக்கு தானும் சென்று பாபாவை தரிசிப்பதாகச் சொன்னார். நெவர்கோ கிராமத்தார்கள் அவர் பிரிவை தாங்காமல், போக வேண்டாம் என்று தடுத்தார்கள். ஆனால் விடாப்பிடியாக பாபாவை வந்து தரிசித்து, "ஆகா இது ஒரு மாணிக்கம், இவருடைய உண்மையான மதிப்பு உங்களுக்கு புரியாது. அவர் பார்ப்பதற்கு பக்கிரியாக இருந்தாலும், போகப்போக அவர் ஒளி வீசுவதைக் காணலாம்" என்றார்.

சில சமயங்களில் பாபா லெண்டியில் ஓடக்கரையில் உட்கார்ந்திருப்பார். பிறகு கிராமத்தில் வேப்ப மரத்தடியில் உட்காருவார். பயிர் செய்யும் நிலத்திலும் உட்கார்ந்திருப்பார். உடைகள் கிழிந்து தொங்கும். சில நேரத்தில் கோபத்தினால் கண்கள் ஜ்வலிக்க

கர்ஜிப்பார். பைத்தியம் பிடித்தவர் போல் பிதற்றுவார். சாந்தமாகவும் இருப்பார். ஆனால் போகப்போக பாபாவின் தனித்தன்மை, கடவுளின் அவதாரம் முதலியன நன்கு விளங்களாயிற்று. எல்லோரையும் சமமாகவே பாவித்தார். கிராமத்தில் ஏதாவது அபாயம் நேர்ந்தாலும் அல்லது தனிப்பட்டவருக்கு ஆபத்து நேர்ந்தாலும், பாபா உடனே கிராமத்தின் ஜனங்களுக்கு அறிவிப்பு கொடுத்து எச்சரிக்கை செய்வார். அவ்வாறு பாபாவின் எச்சரிக்கையை உணர்ந்தவர்கள் ஆபத்திலிருந்து மீண்டவர்களாவார்கள். கிராமத்தார்கள் எல்லோருக்கும் பாபாவிடம் நம்பிக்கையிருந்தாலும், ஒரு சிலரே பாபாவிடம் நெருங்கி பழகி வந்தார்கள். பாபாவின் முன் ஒரு சிலரே அடிக்கடி வர ஆரம்பித்தார்கள். மாதவராவ் தேஷ்பாண்டே மசூதியின் அடுத்த கட்டிடமான பள்ளியில் வாத்தியாராக இருந்தார்.

அவர் முதலில் பாபாவை பைத்தியக்கார பக்கிரியாக கருதி, பிறகு அவருடைய தெய்வீக தன்மையை புரிந்து, அடிக்கடி மசூதிக்கு வர ஆரம்பித்தார். பாபாவிற்கு புகை பிடிப்பதற்கு உதவி செய்து, தானும் புகை பிடித்து வந்தார். இவ்வாறு சிலகாலம் சென்றவுடன் சாமா என்கிற மாதவராவ், பாபாவிடம் ஐக்கியமாகி மற்ற காரியங்களை விட்டு பாபாவிற்கே உழைத்து வந்தார். பாபாவின் பக்தர்களுக்கு உதவி செய்வதையே உழைப்பாகக் கொண்டார். சீரடிக்கு வரும் எல்லோருக்கும் பாபாவின் தரிசனம் கிடைக்கச் செய்து சாப்பாட்டிற்கும், தங்குவதற்கும் உதவி செய்து மிகப் பேருதவி செய்து வந்தார்.

நானா சாகேப் டாங்ளே என்பவர் நிமகோனில் வசித்து வந்தார். அவருக்கு குழந்தைகள் இல்லாமலிருந்தது. இரண்டு மனைவிகள் இருந்தும், பிள்ளைப்பேறு இல்லாததால் வருத்தமுற்றார். அவருடைய அண்ணா பாபா சாகேப் டாங்ளே, பாபாவின் பக்தர். நானா சாகேப் டாங்ளேவிற்கு பாபாவின் மகிமையைச் சொல்லி சீரடிக்கு அனுப்பி வைத்தார். பாபாவின் ஆசீர்வாதத்தால் ஒரு மகன் பிறக்கவே சந்தோஷமுற்று, நானா சாகேப் எல்லா நண்பர்களுக்கும், கவர்ன்மென்ட் உத்தியோகஸ்தர்களுக்கும் பாபாவைப்பற்றி புகழ்ந்து அவர்களை பாபாவிடம் அனுப்பி நன்மை அடையச் செய்தார். கலெக்டரின் நேர்முக உதவியாளரான அண்ணா சாகேப், காட்கில்,

பாபாவின் பிரத்தியட்ச சக்திகளை அறிந்து தன் நண்பர்களுக்கு சொல்லி பாபாவின் புகழ் பரவச் செய்தார்.

## பாபாவின் முறையிடுதல்

ஓம் ஸ்ரீ சாயிபாபா, யோகேஸ்வரா, தத்தாத்ரேயின் அவதாரமே, கருணையுள்ளவரே, உருகும் உள்ளத்தை உடையவரே, அமிர்தவர்ஷினி, ஆனந்தத்தை கொடுக்கும் தெய்வமே, அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகா, ஆபத்பாந்தவா, தீனதயாளா, நீங்கள் எங்கு சென்று விட்டீர்கள்? உங்கள் கருணை அளவிட முடியாததல்லவா? உண்மையின் சொரூபம், எல்லாம் அறிந்தவர். என்னோடு பேசுங்கள் தேவா! என்னை ஏன் இப்படி கஷ்டப்படுத்துகிறீர்கள்? எண்ண முடியாததும், முடிவில்லாததுமான கஷ்டங்கள் எனக்கு ஏன் ஏற்பட வேண்டும். கருணையில் இமயத்தை ஒத்தவரே, கருணை காட்டுங்கள். உங்கள் ஆசீர்வாதத்தை கொடுங்கள். இரக்கம் காட்டுங்கள். என்னால் இப்பாறைகளையொத்த கஷ்டங்களை தாங்க முடியவில்லை. உங்களிடம் சரணம் அடைந்தவரிடம் காட்டும் கருணையா இது? உங்கள் லீலைகளும், அதிசய நிகழ்ச்சிகளும், அற்புத காரியங்களும் வெறும் கதைகள்தானா அல்லது உங்களை புகழ்வதற்காக சொல்லப்பட்டதா? சீரடியில் வாழ்ந்த வரையில்தான் உங்கள் லீலைகளை நடத்த முடிந்ததா? பாபா உங்களுடைய பதினோரு கட்டளைகள் என்னாயிற்று. அவைகளுக்கு இப்பொழுது உயிரில்லையா, செல்லாததா? நீங்கள் அழுத்தம் திருத்தமாக பக்தர்களுக்கு சொன்னீர்களே? உங்கள் சுமைகளை என்னிடம் ஏற்றுங்கள். நான் சுமக்கிறேன். என்னிடம் சரணடைந்தவனையும், என் நிழலில் தங்குகிறவனையும், என்னுடைய உதவியை நாடுகிறவனையும், நான் காபாற்றுகிறேன்" என்று சொன்னீர்களே இவையெல்லாம் பொய்யா, நம்ப முடியாததா, நிலைத்து நிற்காததா, பாபா நீங்கள் உபதேசித்தவற்றின் உண்மை எங்கே? பக்தர்களின் குறைந்தபட்ச தேவையைப் பூர்த்தி செய்வேன் என்று சொன்னீர்களே, என்னாயிற்று? கஷ்டங்களை தவிர்ப்பேன் என்றீர்களே என்னாயிற்று? எல்லாம் மறைந்து விட்டதா? எல்லாம் பொய்யாக மாறிவிட்டதா? என் மனது வேதனையாகிவிட்டது.

என்னுடைய எல்லா அகங்காரங்களையும் உங்கள் பாதத்தில் வைத்து விட்டேன். என்னுடைய எல்லா கஷ்டங்களையும் உடனே அகற்றுங்கள். மனநிம்மதியைக் கொடுங்கள். பொறுமை, நம்பிக்கையை பலப்படுத்துங்கள் பக்தியை வளருங்கள். சதா தங்களையே ஸ்மரணை பண்ணும்படியாக அனுக்கிரகியுங்கள். என் குரு, தாய், தந்தை, தெய்வம் எல்லாம் தாங்கள்தான்.

ஏன் பேசாமலிருக்கின்றீர்கள்? நான் தங்களிடம் உறுதியான, நம்பிக்கையான பக்தியை செலுத்தவில்லையா? பிறகு ஏன் மௌனமாகயிருக்கின்றீர்கள். பிறகு ஏன் தரிசனமளிக்கவில்லை? ஏதாவது தவறு இருந்தால் வெளிப்படையாக சொல்லுங்கள், சரியான பாதையில் வையுங்கள். என்னுடைய கஷ்டங்களைத் தொலையச் செய்யுங்கள். மன அமைதியைக் கொடுங்கள். எல்லா அவதாரங்களும் (சிவா, கிருஷ்ணா, ராமர், விட்டல் எல்லாம்) தாங்கள்தானே. தங்களுக்கே பணிசெய்ய என்னை மாற்றுங்கள். எப்பொழுதும் தங்கள் தாமரை போன்ற பாதங்களையே நினைக்கச் செய்யுங்கள். என் எண்ணமெல்லாம் உங்களையே சுற்றிவரச் செய்யுங்கள். ஏமாற்றம், அவநம்பிக்கை, கெட்ட எண்ணங்கள், துர்நடத்தை இவற்றை தடுத்து ஆட்கொள்ளுங்கள் தங்களைத் தவிர வேறு எவற்றின் மீதும் பற்றில்லாமல் செய்யுங்கள். எல்லாம் தாங்களே; என் உள்ளம் நிறைந்து அமருங்கள். வேறு கெட்ட எண்ணங்களில் மனது அலையாமல் இருக்கச் செய்யுங்கள். இவ்வாறிருந்தும் இவ்வளவு கஷ்டங்கள் கொடுத்து என்னை அலைக்கழிப்பது நியாயமா. பேசுங்கள் பாபா, என்னால் தாள முடியவில்லை. உடனே கஷ்டங்களை போக்கி அமைதியைக் கொடுங்கள். சதா உங்கள் நினைவே வரும்படி செய்யுங்கள். தேவாதி தேவா, சரணம், சரணம், சரணம்.

## சரணாகதி

மன்னித்து விடுங்கள் தேவா, என்னவெல்லாம் பிதற்றிவிட்டேன். கடுமையாக உங்களை ஏசிவிட்டேனே. எனது கஷ்டங்கள், என்னை இப்படி பேச வைத்தன. மன்னித்துவிடுங்கள் தேவா, நான் உங்களது மலத்தின் புழு, பாதத்தின் தூசி, நிரந்தர அடிமை, தங்களது குழந்தை மிக உரிமையோடு உங்களை நிந்தித்து

விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள் தேவா ஒரே தெய்வம் தாங்கள்தான். பக்தர்களுக்காக தங்கள் உடம்பை வாட்டிக் கொள்ளும் கருணைவுடையவரல்லவா தாங்கள்! எனது எல்லா கஷ்டங்களிலும் தக்க சமயத்தில் கைகொடுத்து காப்பாற்றியுள்ளீர்கள். தங்கள் கருணையே இல்லாமலிருந்தால் இந்நேரம் நான் நரகத்தில் அல்லவா வாடியிருக்க வேண்டும். நரகத்தில் வீழ்ந்திருப்பேன் தேவா, தாங்கள்தான் என்னை மனிதனாக உலாவ வைத்துள்ளீர்கள், சந்தேகமே இல்லை. பிரத்தியட்ச தெய்வமே! என்னை மன்னித்து விடுங்கள். இனி இம்மாதிரியெல்லாம் பிதற்றமாட்டேன். பொறுமையுடனும், நம்பிக்கையுடனும் காத்திருப்பேன். தாங்களும் இதை கடைபிடிக்க உதவி புரியுங்கள். எல்லா கஷ்டங்களையும் தவிர்த்து நிம்மதியை அளியுங்கள். பாபா சரணம், சரணம், சரணம், சரணம்.

ஒரே தெய்வமாக தாங்களே நின்று என்னை காப்பாற்றுங்கள் ஏதாவது நன்மை ஏற்பட்டால் தங்களால்தான் ஏற்பட வேண்டும். எனக்கு நன்மை செய்யும் மகாபிரபு தாங்கள்தான். எல்லாவற்றிற்கும் மூலகாரணம் தாங்கள். எனக்கென்று தனித்தன்மையோ, தனி எண்ணமோ, தனிச் செயலோ கூடவே கூடாது. எது நடந்தாலும் தாங்கள் கருணையினால்தான் ஏற்பட வேண்டும். எத்தனை எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும் தாங்களே எனக்கு குருவாகவும், தெய்வமாகவும் வாய்க்க வேண்டும். தங்கள் பேரிலுள்ள நம்பிக்கை துளியும் குறையக் கூடாது தேவா. எனது சொல், செயல், சிந்தனை எல்லாவற்றையும் தங்கள் பாதத்தில் வைத்து விட்டேன். எல்லாமாக தாங்களே இருந்து என்னை காப்பாற்றுங்கள். இன்று உள்ள கஷ்டங்களை அகற்றி சம்சாரத்திலிருந்து விடுதலை அளியுங்கள். பாபா சரணம், சரணம், சரணம்!

## பாபாவின் லீலைகள்

ஒரு படித்த பெண்மணி, வசதியுள்ளவள், பாபாவின் சிறந்த பக்தையாக இருந்தாள். ஒருநாள் சீரடிக்குச் சென்று பாபாவின் பாதத்தில் நமஸ்காரம் செய்து அருகில் அமர்ந்தாள். அப்பொழுது அங்கு ஒரு குஷ்டரோகமுள்ள வியாதியஸ்தர் வந்தார். அவருக்கு

வியாதி முற்றி துர்நாற்றம் வீசும் உடம்போடு மிகவும் தள்ளாடி, மெதுவாக பாபாவிடம் வந்து சேர ரொம்பவும் நேரமாகியது. ஆக தரிசனம் செய்ய மிகவும் நாழியாயிற்று. அந்த பெண்மணிக்கு அம்மனிதனின் துர்நாற்றம் தாங்க முடியாமல் எப்பொழுது தொலைவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியில் மெதுவாக இறங்கி, ஒரு அழுக்குத் துணி மூட்டையுடன் சென்றார். தொலைந்தான் ஒருவழியாக என்று அந்த பெண்மணி நினைத்து சந்தோஷத்துடன் பாபாவிற்கு மனதிற்குள்ளாக நன்றி செலுத்தினாள். இதை குறிப்பாக உணர்ந்த பாபா, அப்பெண்மணியை கூர்ந்து பார்த்து அவளுடைய எண்ணத்தை தெரிந்து கொண்டு உடனே ஒரு பையனை அனுப்பி மறுபடியும் அந்த குஷ்டரோக வியாதியஸ்தரை அழைத்து வரச்செய்தார். முன்போலவே மெதுவாக ஏறி வந்தார். துர்நாற்றம் அப்பெண்மணியால் தாங்க முடியாமல் மூக்கை கெட்டியாக மூடிக் கொண்டார். வியாதியஸ்தர் மறுபடியும் பாபாவை வணங்கினார். பாபா அவரிடமிருந்து, அழுக்கு மூட்டையை வாங்கி "இது என்ன" என்று கேட்டு திறந்தார். அதில் பேடாக்கள் இருந்தன. பாபா அதில் ஒன்றை எடுத்து அப்பெண்மணிக்கு கொடுத்து சாப்பிடு என்றார். "இந்த அழுகல் குஷ்டரோகி கொண்டு வந்ததை சாப்பிடுகிறதா? என்ன பயங்கரம்" ஏதாவது வியாதி தொற்றிக் கொள்ளுமோ என்று பயந்தாள். பாபாவும் ஒரு துண்டை சாப்பிட்டார். மீதி பிரசாதத்துடன் அம்மனிதனை அனுப்பி விட்டார். எவ்வளவோ பேரிருந்தபோதிலும், அந்த அம்மையின் மனதை அறிந்து அவளுடைய தாழ்மை மனதை மாற்றவே, இம்மாதிரி லீலையை பாபா நடத்திக் காண்பித்தார். சகோதர பாவம், கருணை, பொறுமை, நம்பிக்கை, இவைகளை அப்பெண்மணிக்கு புகட்டி அகங்காரத்தை அழிக்கவே இந்நாடகம் பாபாவால் நடத்தப்பட்டது. இப்பெண்மணிக்கு ஒருசமயம் கண் உபத்திரவத்தினால் அவதிப்பட்டு பாபாவின் எதிரில் மிக்க வலியுடன் கண்களில் நீர்வடிய சென்று உட்கார்ந்தாள். பாபா அவளை நிமிர்ந்து பார்த்தார். உடனே அவள் கண்களில் நீர் வடிவது நின்றது. வலியும் மறைந்தது. ஆனால் பாபாவின் கண்களில் நீர் வடியலாயிற்று. பார்வையினாலேயே அவர் வியாதியை அறிந்து அதை தான் ஏற்று பக்தையை வலியினின்று காப்பாற்றி அருளினார்.

குப்னி சொக்காய் செய்வதற்கு வியாபாரியிடத்தில் துணியை விலை பேசி வாங்குவார். கஜம் எட்டணாவிலிருந்து ஐந்தணாவிற்கு கொண்டு வருவார். நாற்பது, ஐம்பது கஜம் விலைக்கு வாங்குவார். ஆனால் காசு கொடுக்கும்பொழுதோ பேசின விலைக்கு 4 அல்லது 5 மடங்கு அதிகமாகவே காசு கொடுப்பார். வியாபாரியும் சந்தோஷமாக போய்விடுவான்.

1925-ல் ஒரு அம்மைக்கு ஒற்றைத் தலைவலி உண்டாகி எந்த மருந்துக்கும் சொஸ்தமாகாமல் அதிக வலியால் துடித்து வந்தார். கடைசியில் சீரடிக்குச் சென்றால் குணமாகுமென்று நினைத்து தனது கணவருடன் கிளம்பி கோபர்கான் வந்து சேர்ந்தார். கோதாவரி நதியை கடக்கும்பொழுது அதில் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று தோன்றியது. குளிர் ஜலத்தில் ஸ்நானம் செய்தால் தலைவலி அதிகமாகி உயிர் விட வேண்டியதுதான். உயிரோடு இருப்பதை விட சாவே மேலானது அல்லவா. வலியால் அவஸ்தைப்படுவதைவிட சாவே நல்லதென்று நினைத்து கோதாவரியில் மூழ்கி ஸ்நானம் செய்தாள். என்ன ஆச்சரியம்! கோதாவரியில் மூழ்கி எழுந்தவுடன், தலைவலி இருந்த இடம் தெரியாமல் பறந்தோடி விட்டது. அதுமுதல் அந்த வியாதி அடியோடு நீங்கியது. இது நிச்சயம் பாபாவின் கருணையல்லவா.

## திரு. ரேகேவின் அனுபவங்கள்

திரு. ரேகே என்பவர் இந்தூரில் ஹைகோர்ட் ஜட்ஜாக பணியாற்றியவர். பாபாவிடம் ஐக்கியமாகி பலன்களை நேரில் அனுபவித்தவர். பாபாவே எல்லாமாக எண்ணி வாழ்ந்தவர். ஒரு குரு பௌர்ணமியன்று சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கினார். அப்பொழுது பக்தர்கள் ஒவ்வொருவரும் ரோஜா மாலைகள் கொண்டு வந்து பாபாவிற்கு போட்டு வணங்கினார்கள். ரேகே, தான் அம்மாதிரி மாலை கொண்டு வராததைப்பற்றி துக்கித்தார். இதை மானசீகமாக அறிந்த பாபா உடனே ரேகே பக்கம் திரும்பி “இவ்வளவு மாலைகளும் உன்னுடையதே” என்றார். ரேகேவிற்கு மெய்சிலிர்த்து பாபாவின் கருணையை நினைத்து கண்ணீர் வடித்தார்.

ரேகேவின் நண்பரொருவர் பாபாவைப்பற்றி கேள்விப்பட்டு பாபாவை தரிசிக்க விரும்பினார். ஆனால் அவர் சிறு வயதிலேயே வேறொரு குருவிடம் உபதேசம் பெற்றவர். ஆகவே சாயிபாபாவை தரிசித்தால் தன் குருவிற்கு துரோகம் செய்ததாகுமோ? என்று தடுமாறினார். ரேகே தன் நண்பருக்கு பாபா தெய்வத்தையொத்தவர், ஆகவே அவரை தரிசிப்பது துரோகமாகாது என்று சொல்லி தைரியப்படுத்தினார்.

1914-ல் கிறிஸ்துமஸ் லீவில் சீரடி போவதாக தீர்மானித்தனர். இரண்டு நாட்களுக்கு முன்பாக நண்பர் கிளம்ப முடியாமல் ஆபீஸில் பாக்கியிருக்கும் தீர்ப்புகளை எழுதிவிட்டுத்தான் கிளம்பலாம் என்று உத்தரவு வந்தது. ரேகே பாபாவை விடாமல் தியானம் செய்ததின் பலனாக எப்படியோ விரைவில் தீர்ப்புகளை எழுதி முடித்து விட்டார்.

இருவரும் போகின்ற வழியில் தடங்கல் நேர்ந்தது. அப்பொழுது மஹாயுத்த ஆரம்பமானதால் எல்லா ரயில் வண்டிகளும் ராணுவத்தினருக்கே பயன்பட்டு வந்தது. ஆனால் இவர்கள் உட்கார்ந்திருந்த வண்டி மிகவும் சிறியதாகையால், ராணுவ அதிகாரி தொந்தரவு செய்யாமல் விட்டுவிட்டார். மிக்க சந்தோஷத்துடன் வழி முழுவதும் பாபா பஜனை செய்து கொண்டே சீரடி அடைந்தார்கள்.

சீரடியை அடைந்து பாபாவை தரிசனம் செய்தபோது பாபா நண்பரை ஒரு பைத்தியம் என்றும் ரேகேயைப் பார்த்து “இவன் தனியே வராமல் பிறரையும் அழைத்து வரவேண்டுமாம்” என்று சொன்னார். ரேகே, நண்பர் வராமல் தனியே சீரடி போவதில்லையென்று விரதம் கொண்டு பிறகு பாபாவை பூஜித்ததினால் தீர்ப்பு சீக்கிரமாக எழுதி முடிக்கப்பட்டு அனுகூலம் அடைந்ததை இப்படி சுட்டிக் காட்டினார். பிறகு இராணுவ அதிகாரிகளால் நேர்ந்த சம்பவத்தை நினைப்பூட்டி “அவர்கள் இவர்களை இறக்கிவிட முயற்சித்தனர். ஆனால் இவர்கள் என்னைச் சார்ந்தவர்கள் என்று இராணுவத் தலைவருக்கு சொல்லி தடையின்றி இங்கு வருவதற்கு ஏற்பாடு செய்தேன்” என்று சொன்னார். பிறகு வழி முழுவதும் பஜனை செய்ததை குறித்து “இவர்கள் என்னைத்

தூங்க விடவில்லை. இரவு முழுவதும் "பாபா" "பாபா" என்று நான் சயனித்த இடத்தைச் சுற்றி பெருங்கூச்சல்" என்றார்.

ரேகேயின் நண்பருக்கு பாபாவின் எல்லாம் அறிந்த தன்மையைப் பார்த்து பரவசமடைந்தார். பகல் ஆராதனைக்கு, நண்பர் ஒரு அன்ன உருண்டையை கைச்சொம்பில் மறைத்து மசூதிக்கு எடுத்துச்சென்று, இதை பாபா பிண்டமாக ஏற்றுக் கொண்டால் பாபாவை தரிசிப்பது குரு துரோகம் ஆகாது என எண்ணினார். மசூதியின் படியேறி நண்பர் பாபாவை நாடியதும், பாபா கைகளை நீட்டி, கொடு பிண்டத்தை, நான் நீ வேண்டுமிடத்தில் சேர்ப்பிக்கின்றேன் என்றார்.

இந்த நிகழ்ச்சி நண்பருக்கு பரவசமூட்டியது. பாபாவை உற்று நோக்கி உன்மத்தர் போலேவே ஆகிவிட்டார். இரவு அவர் நிலைமை மிக கவலைக்கிடமாகி விட்டது.

பாபாவை, ரேகே பிரார்த்தித்ததும் நண்பர் அமைதியாக இருந்தார். பாபா அடுத்தநாள் ரேகேயிடம் "உன் நண்பனை உடனே வெளியேற்று" என்றார். அவ்வாறே இருவரும் ஊருக்குத் திரும்பினார்கள். இதனால்தான் பாபா நண்பரை பைத்தியம் என்று முதலிலேயே குறிப்பிட்டார்.

ஒருநாள் துவாரகமாயில், ரேகே மற்ற பக்தர்களோடு பாபாவை தரிசித்த போது ஒரு பக்தர் ஒரு கூடை நிறைய செவ்வாழைப் பழங்களை கொண்டு வந்து வைத்தார். ரேகேவிற்கு செவ்வாழைப்பழம் என்றால் உயிர். ஆக, பாபா பங்கிடும்போது தனக்கும் இரண்டு பழங்கள் கிடைக்கும் திருப்தியாக உண்ணலாம் என்று நினைத்தார். உடனே பாபா இதை அறிந்து, ஒரு பழத்தை உரித்து தோலை ரேகேவிடம் எறிந்து "சாப்பிடு" என்றார். பாபாவின் உத்திரவை மீற முடியாமல், ரேகே, தோலை சாப்பிட்டார். இம்மாதிரி மூன்று பழங்களை உரித்து வேறு பக்தருக்கு பழத்தைக் கொடுத்துவிட்டு தோலை சாப்பிடும்படியாகச் செய்தார். பிறகு பாபா புன்முறுவலுடன் "ரேகே, உனக்கு பழம் தரவில்லையா" என்று சொல்லி ஒரு பழத்தை உரித்து தான் கொஞ்சம் கடித்து ரேகே கொஞ்சம் சாப்பிட செய்தார். இது

ஒரு வஸ்துவின் மீது அதிக விருப்பம் கொள்வதை அழிக்கவே இம்மாதிரி லீலைகளை செய்து புத்தி புகட்டினார்.

1915-ம் வருடம் ரேகே ஸ்ரீ ராமநவமி தினத்தன்று பாபாவிற்கு என்று ஒரு நைஸ் மஸ்லின் துணியை வாங்கி வந்தார். அதை சிறியதாக மடித்து ஜேபியில் வைத்துக் கொண்டார். துணிகளை கொண்டு வரும் பக்தர்கள் துணிகளை பாபா மீது போடுவார்கள். கடைசியில் ஒரு வேலையாள் அவைகளை களைந்து, யாருடையது என்று கேட்டு, திருப்பி கொடுத்து விடுவது வழக்கம். ரேகே தான் கொண்டு வந்த மஸ்லின் துணியை பாபாவே உபயோகப்படுத்த வேண்டும், திருப்பிதரக் கூடாது என்று நினைத்து பாபாவை வணங்கும்பொழுது பாபாவின் ஆசனத்தின் அடியில், மெத்தையில் துணியை சொருகி விட்டார். வழக்கம்போல் பாபாவின் பேரில் போடப்பட்ட துணிகள் அவரவர்களுக்கு திருப்பி தரப்பட்டன. மஸ்லின் துணியை யாரும் கவனிக்கவில்லை. உடனே பாபா எழுந்திருந்து ஆசனத்தை எடுத்து சுத்தப்படுத்தச் சொன்னார். அதனடியிலிருந்த மஸ்லின் துணியை பாபாவே எடுத்து "இது என்ன, அருமையான மஸ்லின்" மிகவும் நேர்த்தியாக இருக்கிறது. திருப்பிக் கொடுக்கமாட்டேன் "இது என்னுடையது" என்று சொல்லி அதைப்பிரித்து தம்மீது போர்த்திக் கொண்டார். பிறகு ரேகேயை நோக்கி "இப்பொழுது நான் எவ்வளவு அழகாக இருக்கிறேன் பார்" என்றார். ரேகேவிற்கு தான் நினைத்த மாதிரியே துணியை பாபா திருப்பித்தராமல் பாபாவே எடுத்துக் கொண்டதை பார்த்து பூரித்துப் போனார்.

1914-ம் ஆண்டு ரேகே தன் மனைவியுடன் சீரடிக்குச் சென்று தரிசனம் செய்தார். அப்பொழுது ரேகேவின் மனைவி கர்ப்பமாக இருந்தாள். அவளை சுட்டிக்காட்டி ரேகேவிடம் தன்னுடைய பொருள் ஒன்று இருப்பதாகச் சொன்னார். பிரசவமான பிறகு குழந்தையுடன் தம்பதியர் வந்து சேர்ந்தபோது பாபா குழந்தையை மிகவும் பிரேமையோடு தொட்டு ரேகேவைப் பார்த்து "இவன் உன்னுடையவனா அல்லது என்னுடைய பொருளா?" என்று கேட்டார். ரேகே அக்குழந்தை பாபாவின் பொருளே என்று இருமுறை அழுந்தச் சொன்னார். பாபா "சரி அப்படியென்றால் இவனை எனக்காக உன் பொறுப்பில்

வைத்திரு" என்று சொன்னார். ஒன்றரை வருடம் கழிந்தபிறகு, அக்குழந்தைக்கு கபவாத சுரம் கண்டு உயிரோடு போராடியது. ரேகே பாபாவின் படத்தின் முன்பாக குழந்தையை வைத்து "ஓ பாபா இக்குழந்தை உன்னுடைய பொருள், ஆகவே இவ்வுயிரை எடுத்துக்கொண்டு சாந்த நிலை அருளும்", "அவன் உற்பத்திக்கு நானே காரணமாதலால் அவனுடைய கர்மாவை நானே ஏற்றுக் கொள்கிறேன்" என்று சொல்லி குழந்தையின் சிரசில் கை வைத்தார். குழந்தை புன்முறுவலுடன் பிராணனை விட்டான். உயர்ந்த யோகிகளைப் போல் உயிர் சிரசின் மார்க்கமாக நீங்கிற்று.

இரண்டு மாதங்கள் கழித்து ரேகே சீரடிக்குச் சென்று பாபாவின் பாதங்களில் உட்கார்ந்தார். பாபா ரேகேவை சுட்டிக் காட்டி இவன் யார்? எங்கிருப்பவன்? என்று அங்குள்ளவரை கேட்டார். அவர் ரேகேவைப் பற்றியும் ஊரைப்பற்றியும் விவரித்தார். பாபா தவறு என்று சொல்லி ரேகே எப்பொழுதும் தன்னுடனே இருப்பதாக சொன்னார். பிறகு ரேகேவிற்கு குழந்தைகள் உண்டா என்று கேட்டார். அங்கிருந்த ஒருவர் சமீபத்தில் குழந்தை பிறந்து காலமாகி விட்டதைச் சொன்னார். பாபா மறித்தா விட்டது. இல்லை, அக்குழந்தை என்னுடைய பொருள், இவன் அப்பொருளை என் பொருட்டு வைத்திருக்க சம்மதித்தான். ஒருநாள் அக்குழந்தையை என்னை எடுத்துக் கொள்ளும்படி வேண்டி அக்குழந்தையின் கர்மாவை தான் ஏற்றுக் கொள்வதாகச் சொன்னான். அதற்கிணங்கி அந்த ஜீவாத்மாவை நான் எடுத்துக் கொண்டேன். அது என்றும் என்னிடமே இருக்கும் என்றார். இவ்வாறாக ரேகேவை தேற்றினார்.

பாபாவிற்கு முஸ்லிம் வேற்றுமை கிடையாது. 1916-ம் வருடம் இரண்டு ரோஹில்லர்கள் பாபாவிடம் வந்து பக்தர்களானார்கள். பெரியவன் இரவில் பாபாவின் அருகில் குரான் வாசிப்பான். அவன் பாபாவை நபி என்று வணங்கி வந்தான். ஆனால் பாபாவின் கொள்கைகளை அதாவது, மத்தியான வேளையில் மசூதியில் சங்கீதத்துடனும் சத்தத்துடனும் பாபா தன்னை ஆராதனை செய்ய அனுமதி தந்ததையும், விக்கிரக ஆராதனை செய்து நிவேதனம் செய்த உணவை பாபா உட்கொண்டதையும் வெறுத்தான். பாபாவிடம்

நேரிடையாக எதிர்த்து நின்றான். பாபா எல்லா கடவுளும் அல்லாவே என்று சொல்லிவிட்டார். ரோஹில்லா பாபாவை கொன்றுவிட தீர்மானித்து ஒரு நாள் பாபா வெளியே உலாவப் போகையில், ஒரு பெரிய தடியுடன் அவர் பின்னாலேயே சென்றான். அவன் அருகில் வந்ததும் பாபா திரும்பி அவனது மணிக்கட்டைப் பிடித்து உற்றுப் பார்த்தார். உடனே பெரிய ரோஹில்லா மூர்ச்சையுற்று கீழே விழுந்தான். பாபா அவனை அப்படியே விட்டு விட்டு போய்விட்டார். பிறகு ரோஹில்லா தன் தவறை உணர்ந்து பாபாவிடம் சென்று வணங்கி விடைபெற்று சென்று விட்டான். மறுபடியும் வரவேயில்லை.

ரேகே ஒரு சமயம் தக்ஷிணேஸ்வரத்திற்கு யாத்திரையாக சென்று உள்ளூர்வாசியான ஒருவனை அங்குள்ள விசேடங்களை சுற்றிக்காண்பிக்க அமர்த்திக் கொண்டு ராமகிருஷ்ண பரமஹம்சர் வழிப்பட்ட காளி கோயிலுக்குச் சென்றார். உள்ளூர் வாசியும் ரேகேவிற்கு காளி முதலிய விக்கிரங்களை காட்டிக்கொண்டே போனான். ராமகிருஷ்ண பரமஹம்சருடன் உயிருள்ள குழந்தைபோல் விளையாடிய ராம்லால் விக்கிரகத்தை காண்பிக்கும்படி ரேகே கேட்டபோது உள்ளூர்வாசி ஒரு பெரிய விக்கிரகத்தைக் காட்டி இதுதான் ராம்லால் என்றான். ரேகே அது அல்ல என்று சொன்னபோது உள்ளூர்வாசி நிச்சயமாக அதுதான் என்றான். இச்சமயத்தில் காளி கோயிலின் பூசாரி ஒருவர் அவசரமாக வந்து ரேகேவிடம் "*தாங்கள் தக்காணத்திலிருந்தா வந்திருக்கிறீர்கள்*" என்றார். ரேகே ஆமாம் என்று சொன்னதும் ரேகேவிற்கு அங்குள்ள விக்கிரகங்களை காண்பிக்கும்படி கனவில் ஒரு பெரியவர் வந்து சொன்னதாகவும் ஆகவே தம்முடன் வரும்படி அழைத்தார். அப்படியே தொடர்ந்து செல்லும்பொழுது காளிகோயிலின் கர்ப்பக் கிரஹத்திற்கு ரேகேயை அழைத்துச்சென்று, காளியை தொட்டு தரிசிக்கச் செய்தான். பிறகு ராம்லால் என்கிற சிறிய விக்கிரகத்தை எடுத்து ரேகேயின் மடியில் வைத்தார். உடனே ரேகேவிற்கு அந்த விக்கிரகம்தான் ராமகிருஷ்ண பரமஹம்சருடன் உயிருள்ள குழந்தைபோல் விளையாடியிருக்க வேண்டும் என்று உறுதி செய்து அவர் எண்ணத்தை பூர்த்தியாவதற்கு பாபாவே அப்பூசாரியின் கனவில் தோன்றி அருள்புரிந்தார் என்று புரிந்து கொண்டார்.

1923-ம் ஆண்டு ரேகே நாகபுரி சென்றபோது, ஸ்ரீதாஜீடீன் என்ற சந்தியாசியை சந்திக்க தீர்மானித்தார். ஆனால் அவர் ஒரு சிற்றரசரின் மாளிகையில் தங்கியிருந்ததால் அவரை காணுவது கஷ்டமாக இருந்தது. மக்கள் பெருங்கூட்டமாய் காத்திருந்தார்கள். ரேகே ஒரு மரத்தடியில் காத்திருந்து 4 மணி வண்டியை பிடிக்க வேண்டியிருந்ததால் 3 மணிவரை தரிசனத்திற்கு காத்திருக்க எண்ணி பாபாவை பிரார்த்தித்தார். 3 மணிக்கு சில நிமிஷங்களுக்கு முன் தாஜிடீனால் அனுப்பப்பட்ட ஒருவர் ரேகேவிடம் வந்து அழைத்து சென்று தாஜிடீ சந்நியாசியை தரிசிக்கச் செய்தார். தாஜிடீன் 10 நிமிஷங்கள் ரேகேவிடம் பேசி பிறகு அனுமதியளித்தார்.

ஒருமுறை ரேகேவின் பிரயாணம் ஒன்றின் மத்தியில் ஒரு ஜனத்திரளைக் கண்டார். விசாரித்ததில் அக்கூட்டம் சீலநாத் மகராஜ் அவர்களின் குழாங்கள் என்று தெரிந்தது. அவரைச் சென்று ரேகே தரிசித்தபோது மஹராஜ் ரேகேயுடன் அவர் வீட்டிற்கு வருவதாகக் கிளம்பினார். அதுவரை மஹராஜ் அவருடைய முக்கிய சிஷ்யர்களின் வீட்டிற்கும் சென்றதில்லை. ஆகவே ரேகே மிகவும் சந்தோஷமுற்று மஹராஜை தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். வீட்டிற்கு வந்ததும் நேரே சாயிபாபா படம் வைத்திருந்த இடத்திற்குச் சென்று வணங்கினார். ரேகே கொடுத்த பால், பழம் எவற்றையும் விரும்பாமல் தேத்தண்ணீர் கேட்டார். தாம் சிறிது பருகிவிட்டு சேஷத்தை ரேகேவிற்கு கொடுத்து சாப்பிடச் செய்தார். பாபா விடாமல் நச்சரித்ததால்தான் ரேகேயின் வீட்டிற்கு வந்ததாக மகராஜ் சொன்னார்.

திரு. ஜி.ஜி. நார்கே என்பவர் கோடீஸ்வரரான பூட்டியின் மாப்பிள்ளை. அதிகம் படித்தவர். பாபாவிடம் மிக்க பக்தியுடையவர். ஒரு நாள் ஆரத்தியின்போது பாபா அதிக கோபத்துடன் யாரையோ திட்டிக் கொண்டிருந்தும் பயங்கரமாக சீரியும் விழுந்தார். ஒரு காரணமுமின்றி பாபா கோபிப்பதைப் பார்த்து நார்கேவிற்கு பாபா பைத்தியமா என்று எண்ணினார். ஆரத்தி முடிந்தவுடன் சாந்தமடைந்து, நார்கேவைப் பார்த்து, தான் பைத்தியம் அல்ல என்று சொன்னார். நார்கேவின் உள்ளத்தை அறிந்து அவர் எண்ணிய எண்ணங்களை வெளியிட்டதைப் பார்த்து, நார்கேவிற்கு பயம் உண்டாகி, பாபாவிடம்

அம்மாதிரி நினைத்ததற்கு மன்னிப்புக் கோரினார். பாபா உடனே நார்கேவைப் பார்த்து அவருடைய மாமனார் ஒரு கோவில் கட்டுவாரென்றும் அக்கோவில் நார்கேவின் நிர்வாகத்திலிருக்கும் என்றும் சொன்னார். அம்மாதிரியான செய்கை அப்பொழுது எண்ணத்திலேயே இல்லாமலிருந்தும், பாபாவின் வாக்குப்படி, பாபாவின் மகாசமாதி கட்டிடம் ஸ்ரீமான் பூட்டியால் கட்டப்பட்டு 1918-1919ல் நார்கே அதன் நிர்வாகத்தில் ஒருவரானார்.

## காகாதீக்ஷிதரின் குறிப்புகள்

பாபா சமாதி அடைந்த இரண்டு நாளுக்குள்ளாக சாந்தா குருசில் வசித்து வரும் திரு. பிரதானின் மைத்துனியின் கனவில் பாபா தோன்றி "உன்னுடைய பெட்டியில் பீதாம்பரத்துணி மஞ்சள் கலரில் வைத்திருக்கின்றாய். அதை சீரடிக்கு அனுப்பு, என்னுடைய சமாதியின் பேரில் போர்த்தும்படியாகச் சொல்" என்று கூறி மறைந்தார்.

உள்ளபடியே அவ்வாறு ஒரு மஞ்சள் துணி இருப்பதை அம்மாது அடியோடு மறந்திருந்தாள். உடனே பெட்டியை அலசிப் பார்த்ததில் 5 வருடங்களுக்கு முன்பு வைக்கப்பட்ட மஞ்சள் பீதாம்பரத்துணி கிடைத்தது. உடனே பிரதான் அவர்கள் அதை சீரடிக்கு அனுப்பி வைத்தார். அந்நாளிலிருந்து இன்றுவரை அடிக்கடி அந்தத் துணியானது விசேஷ நாட்களில் பாபாவின் சமாதிக்கு போர்த்தப்பட்டு வருகின்றது.

திரு. பிரதானின் மூத்த மகனுக்கு ஒருசமயம் விடாமல் ஜுரம் அடித்தது. எல்லா மருந்துகளும் உபயோகமில்லாமல் போய்விட்டன. அவருடைய புரோகிதர் ஒரு தெலுங்கு பிராமணர். தத்தாத்தரேயின் உபாசகர். குழந்தைக்கு ஜுரம் குறையாதிருப்பதற்கு காரணம் பிரதான் தத்தாத்தரேயரை விட்டு யாரோ மகம்மதிய பக்கீரை வணங்குவதின் அனர்த்தம்தான் என்று சொன்னார். அதற்கு பிரதான் பாபாவே, தத்தாத்தரேயராவார் என்று சொன்னார். உடனே புரோகிதர் அவ்வாறானால் இன்னும் ஐந்து நிமிடத்தில் குழந்தை பால் குடித்தானானால் பாபாவே தத்தாத்தரேயர் என்று நான் ஒத்துக் கொள்வேன். மேலும் நாளையிலிருந்து ஜுரம் குறைந்து, குழந்தை

விளையாட ஆரம்பித்தால் நானே சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கி ரூ. 125 தட்சிணை கொடுப்பேன் என்று உறுதியளித்தார்.

அம்மாதிரியாகவே ஐந்து நிமிடங்களில் குழந்தை பாலைக் குடித்தது. அடுத்த நாளே ஜுரம் குறைந்து குழந்தை விளையாட ஆரம்பித்தான். புரோகிதர் மிகவும் சந்தோஷமுற்று சீரடிக்குச் சென்று பாபாவை தரிசித்து ரூ. 125 தட்சிணை கொடுத்தார். மறுபடியும் பகல் 3 மணிக்கு பாபாவை தரிசித்தபோது, பாபா புரோகிதரை 5 ரூபாய் தட்சிணை கேட்டார். உடன் இருந்த சாமா பாபாவிடம், "காலையில் தான் 125 ரூபாய் மிகப் பெரிய தொகையாக தட்சிணை கொடுத்தாரே, இப்போது ஏன் 5 ரூபாய் கொடுக்க வேண்டும்" என்று கேட்டார். அவனுடைய தத்தருக்காக ரூபாய் 125 கொடுத்தான், எனக்கா கொடுத்தான் என்றார். பாபா எவ்வளவு அழகாக புரோகிதர் பிரதிக்ஞையை வெளிப்படுத்தி எல்லோரையும் ஆச்சரியப்படுத்தினார். புரோகிதர் ஒத்துக்கொண்டு, பாபாவிற்கு 5 ரூபாய் தட்சிணை கொடுத்தார்.

தானாவிலிருந்து ஒரு கனவான் பாபாவை சென்று சேவித்தார். அவருடைய ஒரே மகன் காணாமல் போய்விட்டதை நினைத்து கண்கள் கலங்க பாபாவை மனதினாலேயே பாதங்களில் நமஸ்கரித்தார். இதை அறிந்த பாபா "நிஜமாகவே நீ உன்னுடைய பையனை உடனே சந்திப்பாய்" என்று சொன்னார். இரண்டு நாட்கள் கழித்து பாபாவிடம் விடைபெற்று ஊருக்கு கிளம்பினார். மண்மாட்டிலிருந்து தாணாவிற்கு ஸ்டேஷனில் இறங்கியவுடன் எதிரே பம்பாயிலிருந்து தாணாவிற்கு ஒரு வண்டி வந்து நின்றது. என்ன ஆச்சரியம்! அவ்வண்டியிலிருந்து அவருடைய மகன் இறங்குவதைப் பார்த்து ஓடிச்சென்று கட்டித்தழுவி மகிழ்ந்தார். பாபாவின் வார்த்தை நூற்றுக்கு நூறு நிஜம் என்பதை அறிந்தார்.

ஒரு நாள் சாமாவின் கனவில் பாபா தோன்றி "கோபர்தன்தாஸின் தாய் இறந்து விட்டாள். உடனே நீ சென்று விசாரித்து வா" என்று கூறி மறைந்தார். உடனே சாமா கோபர்தன்தாஸ் வீட்டிற்கு சென்றபோது பாபா கனவில் சொன்ன மாதிரியே கோபர்தன்தாஸின் தாயார் இறந்திருப்பதை அறிந்தார்.

திரு. பிரதான் அவர்கள் சீரடிக்குச் சென்று பாபாவை ஒருநாள் நமஸ்கரித்தபோது அவருடைய மாமனார் எழுதிய கடிதம் பாபாவிடம் சமர்ப்பித்தார். அதில் திரு. பிரதான் அவர்கள் மனைவி உடம்பு அசௌகரியமாக இருப்பதை தெரிவிக்கப்பட்டிருந்தது. பாபா கடிதத்தை கையில் மேலும் கீழுமாக அசைத்து "அவள் போகின்றாளா?" என்று சொன்னார். இதை தீக்ஷிதர் கேட்டு மிகவும் வருத்தமுற்றார். ஆனால் ஒருவருக்கும் தெரிவிக்கவில்லை. பிரதான் அவர்கள் எப்பொழுது தன்னுடைய மனைவியை சீரடிக்கு அழைத்து வரலாம் என்று கேட்டார். பாபா அவளே இன்னும் நான்கு நாட்களில் வந்து சேருவாள் என்று சொன்னார். அதே மாதிரியாக நான்கே நாட்களில் அந்த அம்மை இறந்து விட்டாள்.

ஒரு குருபூர்ணிமா அன்று தபோல்கர் குடும்ப சகிதமாக சீரடிக்குச் சென்றார். சீக்கிரமாகவே அவர் கொண்டு வந்த பணம் முழுக்க தீர்ந்துவிட்டது. இரண்டு நாளைக்கு பிறகு தீக்ஷிதரும், பிரதானும் சீரடிக்குச் சென்றார்கள். எப்படியோ பிரதான் தான் கொண்டு வந்த பணமும் முழுக்க தீர்ந்து விட்டதை உணர்ந்தார். அப்பொழுது பாபா அவரை தக்ஷிணை கொடுக்கும்படி கேட்டார். தன்னிடம் பணம் தீர்ந்து விட்டதைச் சொன்னார். பாபா "தபோல்கரிடம் சென்று வாங்கிவா" என்றார். பிரதானுக்கு தபோல்கரிடம் பணம் தீர்ந்துவிட்டது தெரியும். ஆனாலும் பாபாவின் உத்திரவின்படி தபோல்கரிடம் சென்று பணம் கேட்டார். சில நிமிடங்கள் முன்பாக அவர் சொந்த ஊரிலிருந்து வந்த மனிதன் தபோல்கரிடம் வேண்டிய பணத்தை கொடுத்துப் போனது யாருக்கும் தெரியாது. ஆகவே தன்னிடம் பணம் இருப்பது எப்படி தெரிந்தது என்று பிரதானைக் கேட்டார். தனக்கொன்றும் தெரியாதென்றும் பாபாவின் உத்திரவின்படி கேட்க வந்ததாகவும் சொன்னார். பாபாவிற்கு தெரியாதது ஒன்றுமே இல்லை.

சஹதாவில் ஒரு பிராமணனுக்கு தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. அவருக்கு முகம்மதிய நண்பன் ஒருவர் இருந்தார். அந்த நண்பருக்கு பாபாவின் மீது மிகுந்த பக்தியுண்டு. அவர் சீரடிக்குச் சென்று தன்னுடைய பிராமண நண்பனுக்கு கிடைத்த தூக்குத் தண்டனையை பாபாவிடம் சொல்லி காப்பாற்றும்படி

பிரார்த்தித்தார். பாபா "இன்னும் நான்கு நாட்களில் கடவுள் ஆசீர்வதிப்பார்" என்று சொன்னார். சரியாக நான்காவது நாள் அந்த பிராமணனுக்கு அப்பீலில் விடுதலை கிடைத்தது. சிதம்பரராவ் கட்ஜில் என்பவர் ஒரு கணேச பக்தர் பாபாவை கணேசராக பாவித்து வணங்கி வந்தார். 1911ல் ஒரு நாள் பாபாவை கணேசராக பாவித்து வணங்கும் பொழுது பாபா சொன்னார் "இந்த மனிதன் மிகவும் தந்திரசாலி என்னுடன் ஒரு எலியையும் சேர்த்து வைக்கின்றான்". கணேசருக்கு வாகனம் மூஷிகம் என்பதையே இதில் வெளிப்படுத்தினார்.

ஒருநாள் தீக்ஷிதரிடம் பாபா சுமார் பகல் 2 மணிக்கு பிரதான் வந்தாரா என்று கேட்டார். தீக்ஷிதரும் இல்லை என்று சொல்லி அவரை அழைத்து வரச் சொல்லவா என்று கேட்டார். பாபா பிரதானுக்கு உதியை அனுப்பச் சொன்னார். அதே சமயம் பம்பாயில் பிரதான் அவர்கள் ஹைகோர்டில் மயக்கமாக கீழே விழுந்து விட்டார். ஆனால் பாபாவையே ஸ்மரணை செய்து கொண்டே கீழே விழுந்தார். அவருடைய நண்பர்கள் அவரை தூக்கி ஜலத்தை தெளித்து மயக்கம் தெளிய வைத்தார்கள். பாபாவிடம் இருந்து உதியுடன் அடுத்தநாள் பாபா சிம்பி பிரதானிடம் வந்து பாபா பிரதானை நேற்று பகல் 2 மணிக்கு விசாரித்ததாகவும் உதியை கொடுத்தனுப்பச் சொல்லவே தான் நேரில் வந்ததாகவும் சொன்னார். பிரதானுக்கு ஆச்சரியமாகி பாபாவின் லீலையை போற்றி மகிழ்ந்தார்.

பந்தாராவில் ஆதம் தவாலி என்கிற தரகர் வசித்து வந்தார். மற்ற தரகர்களுடன் ஒரு வியாபார விஷயமாக போலீஸில் மாட்டிக் கொண்டு ஜெயிலுக்கு அனுப்பப்படுவோம் என்று சம்சயத்துடன் கலக்கமடைந்திருந்தார். ஒரு நாள் மாஜிஸ்ட்ரேட் கோர்டுக்கு போவதற்கு முன்பாக டெண்டூல்கர் வீட்டிற்குச் சென்று பாபாவின் படத்தின் முன்பாக வணங்கி "பாபா என்னைப் பார்த்து விழிக்கின்றீர்கள். ஜெயிலுக்கு போனாலும் உங்களை விடமாட்டேன். என்னை சிறையில் அடைப்பார்கள் என்று நினைக்கின்றேன். ஆனால் உங்களுக்குத் தெரியும் நான் நிரபராதி என்று அதனால் நீங்கள் என்னை விடுவிக்கும்படி கருணை காட்ட வேண்டும்" என்று வேண்டினார். பிறகு டெண்டூல்கர் காலிலும், அவரது மனைவி சாவித்திரிபாய்

காலிலும் விழுந்து வணங்கி அழுதார். கொஞ்ச நேரத்திற்கு பிறகு சாவித்திரிபாயை தெருவில் சந்தித்து அவள் காலைப் பிடித்துக் கொண்டு "தயவுசெய்து பாபா உன்னை விடுதலை செய்ய கருணை காட்டுவார்" என்று உங்கள் வாயால் சொல்லுங்கள் என்று மன்றாடினார். அந்த பெண்மணியும் பாபா கண்டிப்பாக விடுவிப்பார் என்று சென்னாள். பிறகு கோர்ட்டுக்கு சென்றார். பாபா ஆதம்தவாலியை விடுதலை செய்வித்து மற்றவர்களுக்கு தண்டனை வழங்க அருள்புரிந்தார். மிக்க சந்தோஷத்துடன் பாபாவின் படத்தின் முன்பாக நின்று பாபாவின் காலை கெட்டியாக பிடித்து அழுது புலம்பி நன்றி சொன்னார்.

அதேநாள் மாலையில் ஒரு பக்கீரை வீதியில் பார்த்து தன்னுடன் தேநீர் சாப்பிட கடைக்கு கூப்பிட்டார். பக்கீரும் சந்தோஷமாக ஒப்புக் கொண்டார். ஆதம் சிறிது தூரம் சென்றவுடன் பக்கீர் வருகின்றாரா என்று திரும்பிப் பார்த்தால் பக்கீர் மறைந்து விட்டதைப் பார்த்து எங்கு தேடியும் கிடைக்காமல் பாபாவே காட்சியளித்ததை எண்ணி வந்தார். அடுத்த நாள் சீரடிக்குச் சென்று பாபாவை போற்றி வணங்கினார்.

ஒருநாள் இரண்டு நண்பர்கள் தீக்ஷித்வாடாவில் ஏசு கிறிஸ்துவைப் பற்றி விவாதித்தார்கள். முக்கியமாக தீமைகளையே அதிகமாக பேசினார்கள். தீக்ஷிதரும் இதில் கலந்து கொண்டு சில கெடுதல்களைப் பற்றி பேசினார். சிறிது நேரத்திற்குப் பிறகு தீக்ஷிதர் பாபாவின் தரிசனத்திற்கு மசூதிக்குச் சென்றார். பாபாவை நமஸ்காரம் செய்தபோது பாபா காலை இழுத்துக் கொண்டு தன் கோபத்தை வெளிப்படுத்தி நமஸ்காரத்தை ஏற்கவில்லை. உடனே தீக்ஷிதருக்கு பாபாவின் போதனைகளை மீறி ஏசு கிறிஸ்துவைப்பற்றி தவறாக பேசியதற்கு பாபா கோபமாக இருப்பதை அறிந்து மானசீகமாக இனி தான் அவ்வாறு பேசுவதில்லை என்று மன்னிப்புக் கோரினார்.

பாபா உடனே தீக்ஷிதரைப் பார்த்து "காகா அருகில் வா" என்று தன் காலை நீட்டி தீக்ஷிதரை பிடிக்கச்செய்து ஒருவரைப் பற்றி புகழவும் வேண்டாம், மோசமாகவும் பேச வேண்டாம். மற்றவர்களை இகழ்வதே சில பேருக்கு அவசியமாகிறது. இதை

ஒழித்துக்கட்டு என்று கூறினார். பாபா எப்பொழுதும் தன் பக்தர்களின் பக்கத்திலிருந்து தீமை செய்யாமல் பாதுகாக்கின்றார்.

ஒருநாள் பாபாவின் தரிசனத்திற்காக சில மாணவர்கள் சீரடிக்குச் சென்றனர். பாபாவை படம் எடுப்பதற்காக அவர்களுடன் ஒரு காமிராவையும் வைத்திருந்தனர். பாபாவின் அனுமதிக்காக சாமாவை வேண்டினார்கள். பாபா லெண்டித் தோட்டத்திலிருந்து சாதே வாடாவிற்கு வரும்பொழுது பாபாவை சிறிது நேரத்திற்கு படம் எடுப்பதற்காக வேண்டி நிற்க வைத்து படம் எடுத்து முடிக்க வேண்டும் என்று சாமா மாணவர்களிடம் சொல்லி அம்மாதிரியே தயாராக காமிராவுடன் வாடாவில் காத்திருந்தனர். பாபா வாடாவிற்கு வந்து சாமாவைப் பார்த்து "இவையெல்லாம் என்ன?" என்று கேட்டார், சாமாவும் "தேவா, இந்த மாணவர்கள் உங்கள் படத்தை எடுப்பதற்கு விரும்பியுள்ளார்கள். ஆகவே இங்கே காத்திருக்கின்றார்கள்" என்றார். பாபா "போட்டோ எடுக்க வேண்டாம்" என்று இப்பையன்களிடம் சொல். நமக்கு முன்னே மறைந்திருக்கும் சுவரை இடித்து தள்ளினால் போதுமென்று சொல்" என்று சொல்லி உடனே அவ்விடத்தைவிட்டு அகன்றார். பாபாவை இந்த 3 1/2 முழத்தில் மட்டும் பார்க்காமல் எல்லா வஸ்துக்களிலும் ஜீவன்களிலும் காண்பதே அதிக அவசியம் என்பதை விளக்கவே பாபா இவ்வாறு சொன்னார்.

ஒரு போட்டோ கம்பெனியில் வேலை செய்யும் ஒருவர் சீரடிக்கு வந்து பாபாவை தரிசனம் செய்தார். அவரும் தன்னுடன் காமரா கொண்டு வந்திருந்தார்.

பாபாவை கேட்காமலே படம் பிடித்து பம்பாயிக்குச் சென்று கழுவிப் பார்த்ததில் பாபாவிற்கு பதிலாக அவருடைய குருவின் உருவம் இருப்பதை அறிந்து தன்னுடைய குருவிடத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை வைக்க வேண்டும் என்று அறிந்து கொண்டார்.

## குல்கர்னி என்கிற நண்பர் பாபாவின் சக்தியை விளக்குகிறார்

பாபாவின் ஆசீர்வாதத்தையும், கருணையையும் அனுபவித்து இதை எழுதுவதில் மிகப் பெருமையடைகிறேன். கடந்த 33

வருடங்களாக தினமும் பாபாவை பூஜித்து வருகின்றேன். நானும் என்னுடைய குடும்பத்தாரும் தினமும் சீரடி உதியை நெற்றியில் பூசி வருகிறோம். நான் சீரடி சமஸ்தானின் உறுப்பினன். ஆதலால் வருடத்தில் மூன்று முறை சீரடியிலிருந்து உதி எனக்கு கிடைக்கின்றது. பாபா என்னை எல்லா கஷ்டங்களிலிருந்தும் காப்பாற்றி வருகிறார். பாபா என்னை ஒரு உண்மையான பக்தனாக ஏற்றுக் கொண்டதாகவே உணருகின்றேன். கஷ்டங்களிலிருந்தும், பாவ காரியங்களிலிருந்தும் என்னைக் காப்பாற்றி நல்வழிப்படுத்துகின்றார். பூர்வ ஜன்மத்தின் கர்மாவினால் அனுபவித்தே ஆக வேண்டிய கஷ்டங்களை பாபா குறைந்த அளவில் அனுபவிக்கச் செய்கின்றார். தீய சக்திகளை தன்னுடைய கருணை நிறைந்த பார்வையால் நிவர்த்தி செய்கின்றார். மற்றபடி அனுபவித்தே ஆக வேண்டிய கஷ்டங்களை சமாளிக்கவும் அவரே கருணை காட்டுகிறார்.

தினசரி வாழ்க்கையிலும் பாதுகாத்து, தேவைகளை பூர்த்தி செய்து காப்பாற்றுகின்றார். ஏராளமாக என்னுடைய அனுபவங்களை சொல்ல முடியும்.

ஒன்றை மட்டும் சொல்லுகின்றேன். என்னுடைய பிறந்த தேதி 14-10-1908. இப்பொழுது எனக்கு 70 வயது. 69வது பிறந்த தேதி 14-10-1976 அன்று ஆரம்பம். வழக்கமாக என்னுடைய பிறந்தநாளில் என்னுடைய குடும்பத்தினர் எனக்கு பரிசுகளை கொடுத்தும் விருந்து நடத்தியும் சந்தோஷமாக கொண்டாடுவார்கள். ஆனால் 14-10-1976 அன்று நான் எனது கடைசி மகள் வீட்டில் தொம்பிவாலியில் தங்கியிருந்தேன். என்னுடைய பிறந்தநாள் கொண்டாட்டம் நடத்துவதாகவே அன்று அடையாளமே தெரியவில்லை. என்னுடைய மகள் வழக்கம் போல் காலேஜிற்கு (லெக்சரர்) சென்று விட்டாள். மருமகளும் வேலைக்கு (டீச்சர்) பள்ளிக்கு சென்று விட்டாள். இருவரும் மாலை 4 மணிக்கு திரும்பி வந்தனர். எனக்கு பிறந்தநாளை கொண்டாடவில்லை என்று வருத்தமாகவும் மனது மிகவும் கஷ்டமாகவும் இருந்தது. வெளியே காண்பித்துக் கொள்ளாமல் எனது தேவாதி தேவனான பாபாவின் முன் உட்கார்ந்து வணங்கினேன்.

என்னுடைய மனவருத்தத்தை துடைக்கும்படியாக உருக்கமாக பிரார்த்தித்தேன். அம்மாதிரியான கஷ்டங்களை தாங்கும்படியான சக்தியை அளிக்கும்படி பாபாவை பிரார்த்தித்தேன்.

அவ்வாறு நெடுநேரம் உட்கார்ந்திருந்தபோது எனது மகளும், மருமகளும் என்னிடம் வந்து அப்பொழுதுதான் என்னுடைய பிறந்தநாள் ஞாபகத்திற்கு வந்ததாகவும் அதைக் கொண்டாட விருந்து ஏற்பாடு செய்திருப்பதாகவும் சொல்லி சில பரிசுகளையும் என்னிடம் நீட்டினர்.

பாபா எவ்வாறு அவர்களுக்கு ஞாபகமூட்டினார் என்றால் என்னுடைய பெரிய மகள் வேறு தேசத்தில் உத்தியோகமாக இருப்பவள். பிறந்ததின வாழ்த்துக்களை அதே நாளில் சேரும்படியாக அனுப்பி வைத்திருக்கின்றாள். ஐந்து பவுண்டு போஸ்டல் ஆர்டர் பிறந்த தின பரிசும் அனுப்பியிருந்தாள். இது எனது கடைசி மகளுக்கு வீட்டிற்கு மாலை 4 மணிக்கு மேல்தான் கிடைத்தது. ஆகவே இம்மாதிரியாக தக்க சமயத்தில் ஞாபகமூட்டி மிக மகிழ்ச்சிகரமாக பிறந்தநாள் விழாவை கொண்டாட கருணை காட்டினார். பாபாவின் கருணையால் எனது மனக்கஷ்டங்கள் சந்தோஷமாக மாறிற்று. நிச்சயமாக இது பாபாவின் கருணையால் தான் என்பது எனக்குத் தெரியும். பாபாவின் ஆசீர்வாதத்திற்கு நான் நன்றியுள்ளவனாக இருக்கின்றேன். திருப்தியான வாழ்க்கையை எனக்கு அமைத்து உதவியுள்ளார். அவருடைய கடாட்சத்தால் இந்த தள்ளாத வயதில் மிகவும் சந்தோஷமாகவும் நிம்மதியாகவும் வாழ்க்கை நடத்துகின்றேன்.

பாபாவிற்கு தெரியாமல் படம் எடுக்க ஒருவர் ஆவல் கொண்டார். அம்மாதிரியாகவே பாபா லெண்டி தோட்டத்திற்கு மற்றவர்களுடன் நடந்து செல்லும்பொழுது படம் எடுத்துவிட்டார். ஆனால் படம் கழுவி பார்த்தபோது பாபாவுடன் வந்த எல்லோரும் தெரிந்தார்கள். ஆனால் பாபாவின் பாதம் மட்டும் விழுந்திருந்தது. ஆக பாபாவின் பாதத்தில் நமது பாரத்தை இறக்கி நாம் நிம்மதியாக இருக்க வேண்டுமென்று இதனால் தெரிகிறதல்லவா, பாபாவின் பாதங்களில் நம்பிக்கையுள்ளவன் வாழ்க்கையில் கஷ்டப்படமாட்டான்.

ஒரு நாள் பாபா சாப்பிடும்பொழுது ஒரு நாய் ஓடி வந்து மோர் வைக்கப்பட்ட டம்ளரில் வாயை வைத்தது. பக்கத்திலிருந்த பக்கீர் பாபா, ஒரு பையனிடம் அந்த நாயை விரட்டச் சொல்லி அந்த மோரையும் கீழே ஊற்றச் சொன்னார். பையன் அந்த தம்ளரை எடுத்து மோரை கீழே சாய்த்தபோது பாபா தடுத்து நிறுத்தி என்ன சமாசாரம்? எதற்காக மோரை கீழே கொட்டுகிறான் என்று கேட்டார். பக்கீர் பாபா, நாய் வாய் வைத்ததினால் கீழே கொட்டச் சொல்வதாகச் சொன்னார். பிறகு பாபா, அரே பாபு, மோர் மிகவும் நன்றாக உள்ளது. வீட்டிற்கு எடுத்துச்செல். சாதம் வடித்து, இதே மோரை ஊற்றி பிசைந்து மத்தியானவேளை சாப்பாட்டிற்கு கொண்டு வா நான் சாப்பிடுகிறேன்! என்றார். அதே மாதிரியாக பக்கீர்பாபா மோர் சாதம் பிசைந்து எடுத்து வந்ததை துளியும் கூசாமல் சந்தோஷமாக பாபா சாப்பிட்டார்.

சீரடியில் வசித்துவரும் கிர்வாந்திகார் என்கிற பிராமணனுடைய 3 வயது பெண் சாந்தி என்பவள் ஒரு நாள் சாத்தே வாடாவில் உள்ள கிணற்றில் தவறி விழுந்து விட்டாள். சிறிது நேரத்தில் அவளை கிணற்றிலிருந்து மேலே கொண்டு வந்து பார்த்ததில் ஆச்சரியமாக அவளுக்கு ஒரு சிறிது காயமும் படவில்லை. அவளை கேட்டபோது பாபா என்னை தாங்கிக் கொண்டு பத்திரமாக இறக்கி வைத்தார் என்று சொன்னாள். ஆக பாபா எந்நேரமும் காப்பாற்றுவதில் சிறிது கூட பிறழமாட்டார் என்பது தெரிகிறதல்லவா.

தீக்ஷிதருடைய நண்பர் ஒருவர் பாபா தரிசனத்திற்கு சீரடிக்குச் சென்று பாபாவின் பாதத்திலமர்ந்து பாபாவின் பாதங்களை மாலிஷ் போட்டுக் கொண்டிருந்தார். அவ்வாறு செய்து கொண்டிருக்கும்பொழுது பாபா திடீரென்று காலை இழுத்துக் கொண்டு "மாலிஷ் போட வேண்டாம் தூர விலகிச் செல்" என்று சத்தம் போட்டார். நண்பர் உடனே விலகி தூர உட்கார்ந்து இரண்டு கண்களிலும் ஜலம் பெருக உருகினார். மறுபடியும் பாபாவிடம் சென்று மாலிஷ் போட ஆரம்பித்தார். ஆனால் பாபா இந்த தடவை மறுக்கவில்லை. எல்லோரும் வாடாவிற்கு திரும்பியவுடன் அந்த நண்பர் சொன்னார் என் எண்ணங்கள் காமத்தில் லயித்து அசுத்தமானதால் பாபா என்னை விரட்டினார். பிறகு பாபாவிடம் மானசீகமாக இனி அம்மாதிரி தவறு

செய்வதில்லை என்று உறுதியெடுத்துக் கொண்டு பாபாவிடம் மன்னிப்புக் கேட்டதால் மறுபடியும் மாலிஷ் போட பாபா சம்மதித்தார். இதனால் பாபா அந்தர்யாமி, பாபாவிற்கு தெரியாததொன்றுமில்லை என்று தெரிகிறதல்லவா?

சங்கர்ராவ் தீக்ஷிதர் என்கிற அதிகாரி பாபாவிடம் சென்று தரிசித்தபோது பாபா அவரிடமிருந்து எல்லா பணத்தையும் தட்சணையாக வாங்கிக் கொண்டார். வாடாவிற்கு திரும்பிய போது அங்குள்ள ஒருவர் சங்கர்ராவை "ஊர் திரும்ப காசு உள்ளதா என்று கேட்டார், சங்கர்ராவ் பாபா கொடுப்பார்" என்று உறுதியுடன் பதிலளித்தார். அதேநாளில் மாலையில் ரஹதாவைச் சேர்ந்த போஸ்ட் மாஸ்டர் அவருடைய நண்பருடன் சீரடிக்கு பாபாவை தரிசிக்க வந்தார். அந்த நண்பருக்கு சுமார் 2 வருடங்களுக்கு முன்பாக சங்கர்ராவ் 20 ரூபாய் கடன் கொடுத்திருந்தார். அந்த நண்பர் சங்கர்ராவிற்கு அன்றே அந்த 20 ரூபாயை திருப்பி கொடுத்து கடனை அடைத்தார். இதுவே சங்கர்ராவ் ஊருக்கு திரும்ப மிகவும் போதுமானதாக இருந்தது.

1913-ம் வருடம் தீக்ஷிதர் சீரடியில் வசித்து வந்தார். சில மாதங்களுக்குப் பிறகு அவருடைய குடும்பமும் சீரடியில் வசித்து வந்தது. ஆனால் அவருடைய மகனும், பேத்தியும் பந்தாராவில் படிப்புக்காக ஒரு நண்பருடன் வைக்கப்பட்டிருந்தார்கள். சில மாதங்களில் தீக்ஷிதருடைய மகனுக்கு காய்ச்சல் கண்டு தீக்ஷிதரை குடும்பத்துடன் பந்தாராவிற்கு வரும்படி கடிதம் எழுதினார். பாபாவின் உத்திரவில்லாமல் சீரடியிலிருந்து யாரும் வெளியேறக் கூடாதல்லவா. தீக்ஷிதரும் பாபாவை கலக்காமல் எதையும் செய்ய மாட்டார். ஆகவே அந்த கடிதத்தை பாபாவிடம் கொண்டு போனார். அதை பார்க்காமலே பாபா யாரும் சீரடியை விட்டு போகக்கூடாது என்றும், பையனை சீரடிக்கு தருவிக்கும்படி சொன்னார். பையனுக்கு பரீட்சை நேரம் நெருங்கவே தீஷிதர் தன் மனைவியை மட்டும் அனுப்ப எண்ணி மறுபடியும் பாபாவை சென்று பார்த்தார். மறுபடியும் பாபா பையனை தருவிக்கவே சொன்னார். அதே மாதிரியாக பையனும் சீரடிக்கு வந்து சேர்ந்தான். மிகவும் இளைத்தும் மார்வலியினாலும் பையன்

கஷ்டப்பட்டான். பேத்தியும் தோல் வியாதியினால் கஷ்டப்பட்டாள். ஆனால் பாபாவின் கருணையினால் இருவரும் சீக்கிரமே குணமடைந்தார்கள். பிறகு பந்தாரா நண்பர் தீக்ஷிதருக்கு நவம்பர் 2ந் தேதி பரீட்சை நடப்பதாகவும் பையனை அனுப்பும்படி கேட்டிருந்தார். பாபாவிடம் கடிதத்துடன் சென்றபோது "பொறு, பார்க்கலாம்" என்று சொல்லிவிட்டார். பந்தாரா நண்பர் மறுபடியும் ஒரு கடிதத்தில் பரீட்சை ஏதோ காரணத்திற்காக நவம்பர் 6ம் தேதி தள்ளி வைத்திருப்பதாகவும் பையனை உடனே அனுப்பும்படியும் கேட்டுக் கொண்டார். மறுபடியும் பாபா "பார்க்கலாம்" என்று சொல்லி விட்டார். மறுபடியும் பந்தாரா நண்பர் 13-ம் தேதி நவம்பர் மாதம் பரீட்சை தள்ளி வைத்திருப்பதாகவும் எப்படியும் பரீட்சை நடந்தே தீரும் என்றும் தெரிவித்திருந்தார். ஒரு ஆளையும் அனுப்பி பையனை அழைத்து வரச்சொல்லியிருந்தார். அந்த மனிதன் 11-ம் தேதி சீரடிக்கு வந்து சேர்ந்து பாபாவின் உத்திரவுப்படி 12ந் தேதி பையனை அனுப்பி வைத்து 13, 14, 15 தேதிகளில் பரீட்சை நடந்து அமோக வெற்றி பெற்றான் என்று சொல்லவும் வேண்டுமா?

ராமச்சந்தரபடீல் சீரடியிலிருந்து பம்பாயிற்குச் சென்றார். இரண்டு நாள் முன்பாக நானா குல்கர்னியும் ஒரு கல்யாணத்திற்கு பம்பாய் சென்று ஒரு நண்பர் வீட்டில் விருந்தாளியாக தங்கியிருந்தார். அந்த நண்பரின் வீடு கிராண்ட் ரோட்டில் இருப்பது என்பது மட்டும் படீலுக்குத் தெரியும். எப்படியாவது குல்கர்னியை கண்டுபிடிக்க வேண்டுமென்று படீல் பம்பாயில் விசாரித்தபோது முழுமையான விலாசம் இல்லாமல் கண்டுபிடிக்க முடியாது என்று சொல்லி விட்டார்கள். ஆனாலும் படீல் "எனது பாபா கருணையுள்ளவர். நிச்சயமாக குல்கர்னியை கண்டுபிடிக்க உதவுவார் இதில் கொஞ்சமும் சந்தேகமில்லை என்று" உறுதியாகச் சொன்னார். அதே மாதிரியாக கிராண்ட் ரோட்டில் சிறிது தூரம் நடந்தவுடன் எதிரில் குல்கர்னி வருவதைப் பார்த்து பாபாவை நினைத்து அவர் கருணையைப் போற்றி மகிழ்ந்தார். உறுதியான நம்பிக்கை பாபாவிடமிருந்தால் எதையும் சாதித்து விடலாம்.

நாராயன் மகாதேவ் தோஷர் என்கிற சாயிபக்தர் வில்லேபார்லேயில் வசித்து வந்தார். அவர் ஹனுமான் உபாசகர் ஆகவே அதிக சிலவில் வில்லே பார்லேயில் ஒரு கோயில் கட்டி அதில் ஹனுமான் பிரதிஷ்டை செய்தார். இது 1-4-1918ல் நடந்தது. "ஸ்ரீ சாயி" என்கிற வார்த்தை கோயிலில் பொறிக்கப்பட்டிருந்தது. பாபாவையே ஹனுமான் ரூபத்தில் வணங்கி வந்தார். இதே நாளில் சீரடி மசூதியில் பாபா எல்லோருக்கும் தன் கையினாலேயே தித்திப்புகளை வழங்கினார். அதேநாளில் மசூதியில் சாயி சத்ய விரதமும் கொண்டாடப்பட்டு எல்லோருக்கும் பிரசாதம் வழங்கப்பட்டது. ஆக ஹனுமான் பிரதிஷ்டையை பாபா அனுக்கிரகித்தார் என்று தெரிகிறதல்லவா!

தாஜேவாமன் சித்தாம்பர் என்கிற புது தலைமை ஆசிரியர் சீரடியில் ஒரு நாள் தீக்ஷிதரை சந்தித்து "இதுவரையில் ஒரு உபாத்தியராக வெகு நல்ல பெயர் எடுத்திருந்தேன். ஆனால் சீரடியில் வந்தவுடன் அந்த நல்ல பெயர் போய்விடும் போலிருக்கிறது. ஏனென்றால் பிள்ளைகள் படிக்காமல் பொழுது போக்குகிறார்கள். கேட்டால் பாபாவின் உதியைப் பூசிக்கொண்டு பரீட்சை எழுதினால் தானாக பரீட்சையில் பாஸ் செய்து விடுவோம் என்று சொல்கின்றார்கள்." என்ன பைத்தியகாரத்தனம்! என்றார். தீக்ஷிதரும் ஒன்றும் கூறாமலிருந்து விட்டார். ஆறு மாதத்திற்கு பிறகு அதே தலைமை ஆசிரியர் தீக்ஷிதரை சந்தித்து உதியின் மகிமை தெரியாமல் பேசி விட்டேன். பிள்ளைகள் உதியைப் பூசி பரிட்சை எழுதி எல்லோரும் பாஸ் செய்து பள்ளிக்கு நல்ல பெயரை உண்டாக்கி விட்டார்கள் என்று மன்னிப்புக் கேட்டார்.

நாக்பூரில் கோவிந்தராவ் என்பவரின் சகோதரி மகனுக்கு விடாமல் ஜுரம் அடித்து டாக்டரின் மருந்துக்கும் குறையவில்லை. அப்பொழுது கோவிந்தராவ் பாபாவிடம் பிரதிக்ஞை செய்து குழந்தை ஆரோக்கியமானவுடன் சீரடிக்கு அழைத்து வருவதாக வேண்டிக் கொண்டார். அடுத்தநாளே குழந்தையும் சரியாகி விட்டது. ஆனால் பிரதிக்ஞை நிறைவேற்றவில்லை. சகோதரியும், மாமனார் வீட்டிற்கு குழந்தையுடன் சென்று விட்டாள். ஒரு வருடத்திற்குப் பிறகு சகோதரி

நாக்பூருக்கு திரும்பி வந்தாள். அப்பொழுது கோவிந்தராவே ஜுரத்துடன் போராடிக் கொண்டிருந்தார். ஒரு மருந்திற்கும் கேட்கவில்லை. அப்பொழுது ஒரு வியாழக்கிழமை பஜனை கோஷ்டி பாபாவின் லீலைகளை பாடினர். உடனே கோவிந்தராவிற்கு தன் பிரதிக்ஞை ஞாபகம் வந்து, பாபாவிடம் தான் சரியானவுடன் குழந்தையுடன் சீரடிக்கு தவறாமல் வருவதாக வேண்டிக் கொண்டார். அம்மாதிரியாகவே ஆரோக்கியமடைந்து குழந்தையுடன் சீரடிக்கு சென்று பாபாவை தரிசித்தார்.

அகஸ்தே என்பவரும், கோவிந்தராவ்டாக் என்பவரும் பாபாவின் தரிசனத்திற்கு சீரடி சென்று இரண்டுநாள் தங்கி திரும்பும்பொழுது பாபாவின் படங்களை வாங்கி எடுத்துச் சென்றனர். வழியில் கோவிந்தராவ் இன்னொரு படமும் வாங்கியிருந்தால் தன்னுடைய உறவினர் ஒருவருக்கு கொடுக்கலாமே என்று நினைத்தார். நண்பர்கள் பிரியும்பொழுது படங்களை பிரித்துப் பார்த்தபோது இரண்டுக்கு பதிலாக மூன்று படங்கள் இருப்பதைப் பார்த்து மிகவும் மகிழ்ந்து பாபாவின் லீலையை வியந்து பாராட்டினர்.

தீக்ஷிதருக்கு பம்பாயிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் பாலுகாகா என்பவளும், கரம்பேல்கருடைய மனைவியும் அபாயகரமான நிலையில் உள்ளனர் என்று தெரிவிக்கப்பட்டிருந்தது. இதை பாபாவிடம் தீக்ஷிதர் அறிவித்தார். உடனே பாபா பாலுகாகா சரியாகி விடுவாள் என்று சொல்லி காம்பேல்கர் மனைவி வந்திருக்கின்றாளா என்று கேட்டார். தீக்ஷிதர் அவள் வரவில்லை என்றும் அவளை அழைத்து வர சொல்லலாமா என்றும் கேட்டார். பாபா ஆமாம் என்று சொன்னார். அதே மாதிரியாக காம்பேல்கருடைய மனைவி இறந்து விட்டாள். பாலுகாகா சரியாகி விட்டாள்.

அமீர்தானுபாவா என்கிற வேதாந்த புத்தகம் மிகவும் கடினமான நூல். புரிந்து கொள்வது கஷ்டம். சிலரே படித்து பயன் பெற முடியும். தாஸ்கணு அதை விரிவாகவும், சுலபமாகவும் எழுதி எல்லோரும் படிக்க உதவ ஆசைப்பட்டார். தாதாமகராஜ் என்பவர் இதில் மிக்க தேர்ச்சி பெற்றவர். ஆகவே தாஸ்கணு, அவரிடம் தான் விரிவுரை எழுதப் போவதை பிரஸ்தாபித்தார். தாதா மகராஜ்

தாஸ்கணுவை பயமுறுத்தி அது அவ்வளவு சுலபமாக எழுதக்கூடியதல்ல என்று சொல்லி, அப்படி எழுத ஆசைப்பட்டால் தன்னுடன் தாஸ்கணு சில மாதங்கள் தங்கி அதைப் புரிந்து கொண்டு எழுத ஆரம்பிக்கலாம் என்றார். தாஸ்கணு அதற்கு உடன்படாமல் "பாபா எழுத வேண்டுமென்று நினைத்தால் அவரே என் மூலமாக எழுதி விடுவார்". யாருடனும் தங்கி நான் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை என்று சொல்லிவிட்டார். இருந்தாலும் தாதாமகராஜ் தாஸ்கணுவிற்காக பாபாவிடம் வேண்டினார். இரண்டு அத்தியாயங்களுக்கு விரிவுரை எழுதியதும் தாஸ்கணு தாதாமகராஜிடம் தான் எழுதியதை படித்துக் காண்பித்தார். அதைக் கேட்டவுடன் தாதாமகராஜ் சந்தோஷப்பட்டு "பாபா சகலமும் அறிந்தவர், அவரால் ஆகாததொன்றுமில்லை. அவருடைய கருணையே இவ்வாறு உன்னை எழுத வைத்தது. வேறொருவரும் உனக்கு துணை தேவையில்லை" என்று குறிப்பிட்டார்.

தீக்ஷிதருடைய நண்பரின் மகளுக்கு புத்திபேதலித்து நாள் முழுவதும் பிதற்றிக் கொண்டும் ஜன்னல் வழியாக சாமான்களை வெளியே எறிந்து உபத்திரவப்படுத்தி வந்தாள். இந்த அழகில் அவள் கர்ப்பமுற்று 9 மாதங்கள் நிறைந்தன. டாக்டரும் அவளை பரிசோதித்து பிரசவம் மிக்க கஷ்டமாக இருக்கும் என்று சொல்லி ஒரு மருத்துவச்சியும் வேலைக்கு ஏற்பாடு செய்தார். ஆனால் அவளை பாபா ஆசீர்வதித்து உதியைத் தடவி சுலபமான பிரசவத்திற்கு வாக்களித்தார். அதே மாதிரியாக அவளுக்கு வலி எடுத்தவுடன் டாக்டரை அழைத்து வர ஒரு ஆளும், மருத்துவச்சிக்காக ஒரு ஆளும் பறந்தனர். ஆனால் பாபாவின் கருணையினால் மிகச் சுலபமாக குழந்தை பெற்று தாயும் சௌக்கியமானாள். டாக்டர் வந்து ஆச்சரியமுற்று பாபாவின் லீலையை கேள்வியுற்று அதிசயப்பட்டார்.

## தீக்ஷிதருக்கு கிருஷ்ணாஜி நாராயன் என்பவர் எழுதிய கடிதத்தின் சாராம்சம்

பாபாவின் கருணையினால் கீழ்கண்டபடி என் நோய் குணமாயிற்று. எதை சாப்பிட்டாலும் உடனே வாந்தியில் அவ்வளவும் வெளியே வந்துவிடும். இதைக் குணப்படுத்த ஏராளமான மருந்துகளை

சாப்பிட்டும் பயனில்லாமல் போய்விட்டது. கொஞ்சமும் குணமாகவில்லை. சில நாட்களுக்குப் பிறகு என்னுடைய தகப்பனாரின் நண்பர் சதாசிவ் ராமச்சந்திர பக்தர்தாஸ் என்பவர் ஒரு பெரிய வைத்தியரை அனுப்ப அவரிடம் சிகிச்சை பெற்றால் கண்டிப்பாக குணமாகும் என்று சொன்னார். வைத்தியர் மிகவும் வயதானவர். ஹார்தாவிற்கு வந்து மருந்துகள் தயாரித்தார். இரண்டு பொட்டலங்கள் தயார் செய்து ஒன்றை காலையிலும், மற்றொன்றை சாயந்திரமும் சாப்பிடச் செய்தார். மத்தியானம் 3 மணியிலிருந்து ஒரே வயிற்று வலியினால் துடித்துப் போனேன். இரவு 8 மணி வரையில் அநேக தடவை பேதியாகி என்னால் படுக்கையை விட்டு அசைய முடியாமலாகிவிட்டது. வைத்தியரும், குடும்பத்தாரும் மிகவும் பயந்து விட்டனர். வைத்தியர் என்னுடைய பூஜை அறைக்குச் சென்று கடவுளை தியானம் செய்து பிறகு பேதியை நிறுத்த மருந்தொன்றை கொடுத்தார். இரவு 11 மணியளவில் பேதி நின்றது. பிறகு வைத்தியர் எனது தகப்பனாரிடம் இதற்கு மருந்தே கொடுக்க வேண்டாம். சத்குரு ஆசீர்வதித்தால் சரியாகிவிடும் என்றார். ஆகவே எல்லா மருந்துகளையும் நிறுத்தி விட்டு சில நாட்களுக்குப் பிறகு சீரடிக்குச் சென்று பாபாவை தரிசித்தேன். நானோ என்னுடன் வந்தவர்களோ பாபாவிடம் என்னுடைய வியாதியைப் பற்றி பேசவேயில்லை. அடுத்த வருடம் குருபூர்ணிமா அன்று சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கினேன். விழா முடிந்தவுடன் நானும் எனது தமையனாரும் பாபாவை சென்று வணங்கினோம். பாபாவின் பாதத்தில் உட்கார்ந்திருந்தோம். அப்பொழுது மௌசிபாய் என்கிற வயதானவள் வந்தாள். பாபா அவளைப் பார்த்து "தாயே! ஏன் தாமதம் என்று கேட்டார். மௌசிபாய் தான் ஒக்காளத்தினால் அவதிப்படுவதாகவும், அதனால் தாமதாயிற்று என்றும் சொன்னாள்.

பாபா சிரித்து "நீ நிறைய அளவுக்கு மீறி சாப்பிடுவதால் இந்த ஒக்காளம் வந்தது" என்றார். பிறகு மௌசி இந்த வியாதியை குணப்படுத்த வேண்டினாள். பாபா சிறிது நேரம் பேசாமலிருந்தார். பிறகு என்னை சுட்டிக் காண்பித்து "இந்த மனிதனும் அதிக நாட்களாக அதே வியாதியால் கஷ்டப்படுகிறான்" என்று சொன்னார். உடனே என்னுடைய தமையனார் "எல்லா மருந்துகளுக்கும் பயன் இல்லாமல்

இன்னமும் கஷ்டப்படுகிறான்" என்றார் பாபா. "இனி எந்த மருந்தும் வேண்டாம். திரும்பவும் அந்த வியாதி வராது" என்றார். அந்த நாளிலிருந்து அந்த வியாதி அடியோடு மறைந்து விட்டது. பன்னிரண்டு வருடங்களாக ஆட்டி வைத்த அந்த வியாதி பாபாவின் ஒரே வார்த்தையில் குணமாகி இருக்கிற இடம் தெரியாமல் போய்விட்டது. பாபாவின் வார்த்தைக்குத்தான் எவ்வளவு சக்தி.

## பாபாவின் அற்புத லீலைகள்

ஒருநாள் வாஜ் என்பவரைப் பார்த்து பாபா "என்ன வேலை செய்கிறாய்" என்று கேட்டார். வாஜ் "மசூதியில் ஏதாவது வேலையிருந்தால் தான் செய்வதாகச் சொன்னார்". பாபா மசூதியில் வேலை நிறைய இருக்கிறது. செய்ய ஆரம்பி என்றார். அதே மாதிரியாக மசூதியில் வேலை செய்து வந்த பண்டிட் என்பவர் உடம்பு அசௌக்கியமடைந்து படுக்கையில் கிடந்தார். அவர் செய்து வந்த வேலைகளை வாஜ் செய்ய வேண்டியதாயிற்று. பண்டிட் சரியாகப் போகும் வரையில் வாஜிக்கு நிறைய வேலை மசூதியிலிருந்தது.

டாக்டர் மேத்தா என்பவர் தீக்ஷிதரிடம் சென்று அவர் பேரில் கோர்ட்டில் கேஸ் ஒன்று இருப்பதாகவும், தான் பணம் வாங்காமலே ரூ. 3000க்கு பிராமிஸரி நோட் எழுதிக் கொடுத்ததால் அந்த மனிதன் கோர்டில் தாவா போட்டிருப்பதாகவும், தீக்ஷிதர் அவருக்காக கோர்டில் ஆஜராக வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். தீக்ஷிதர் பிராக்டிசை விட்டுவிட்டதால், தன்னுடைய நண்பர் மணிர்லால் என்கிற வக்கீலுக்கு கடிதம் கொடுத்து அனுப்பினார். மணிர்லாலும், பணம் வாங்காமல் எப்படி பிராமிஸிரி நோட் எழுதிக் கொடுத்தார் என்று கேட்டு சாட்சியுள்ளதா என்று கேட்டார். "சாட்சியா, இதை எழுதும்பொழுது, பிளெயிண்ட்டிப்பும் நானும் தவிர வேறொருவரும் சாட்சியில்லை" என்று சொன்னார். மணிர்லால், மேத்தாவிற்கு சமாதானமாக போவதைத் தவிர வேறு வழியில்லை என்று சொன்னார்.

டாக்டர் மேத்தா "நீங்கள் எனக்காக கோர்டில் ஆஜரானால் போதும், பிறகு பாபாவின் கருணை என்னைக் காப்பாற்றும்" என்று சொன்னார். விடாமல் தொந்தரவு செய்யவே, மணிர்லாலும் கோர்ட்டில்

கேஸை தொடுத்தார். ஆனால் டாக்டர் கோர்டிற்கு ஒருவாரம் வரவேயில்லை. மணிர்லால் தன்னுடைய குமாஸ்தாவை அனுப்பி டாக்டரை அழைத்து வரச் சொன்னார். ஆனால் டாக்டர் உடம்பு சரியில்லாமல் வேறு எங்கோ ஆஸ்பத்திரியில் கிடப்பதாக குமாஸ்தா திரும்பி விட்டார். மணிர்லால் பிறகு டாக்டரிடம் சென்று எப்படியாவது சமாதானம் செய்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்று வற்புறுத்தினார். அப்படியில்லாவிடில் கோர்டில் டிக்ரியாகி எல்லா பணமும் கொடுக்க வேண்டிவரும் என்று நிர்பந்தம் செய்தார். ஆனால் டாக்டர் மேத்தா எனக்கு எப்படி சமாதானம் ஆவதென்று தெரியவில்லை. நான் ஒரு காசும் கொடுக்க வேண்டியதில்லை. எது நடந்தாலும் என்னுடைய கௌரவம் காப்பாற்றப்படும்; இது நிச்சயம். சில நாளைக்கு முன்பு சாயிபாபா கனவில் தோன்றி "நான் உன்னுடைய கௌரவத்தை காப்பாற்றுவேன்" என்று உறுதியளித்துள்ளார். பாபாவின் வார்த்தை எப்பொழுதும் பொய்யாகாது ஆக நீங்கள் கேஸுக்கு கோர்டில் ஆஜரானால் போதும். மிகுதி பாபா கவனித்துக் கொள்வார்" என்று வக்கீலிடம் வேண்டினார். அதே மாதிரியாக வக்கீலும் இரவு 8 மணி வரை உட்கார்ந்து ஒரு சாராம்சத்தை தயாரித்தார். அடுத்தநாள் டாக்டரை அழைத்து வரச் செய்தார்.

ஆனால் அதற்குள்ளாக ஒரு நண்பர் டாக்டர் வீட்டிற்குச் சென்று நான் இந்த வழக்கை ஒரு மாதிரியாக செட்டில் செய்துவிட்டேன். கண்டிப்பாக இதற்கு நீ இணங்க வேண்டும். அப்படியில்லாவிடில் நான் இந்த இடத்தைவிட்டு நகர மாட்டேன். 800 ரூபாய் மாத்திரம் பிலெயிண்டிப்புக்கு கொடுத்தால் போதும். அதுவும் மொத்தமாக கொடுக்க முடியாவிடில் மாதத்திற்கு 50 ரூபாய் கொடுத்தால் போதும். அவரவர் செலவை அவரவரே ஏற்க வேண்டும். இது மாதிரியாக எழுதி இருவரும் கையெழுத்திட்டு கோர்டில் அதே மாதிரியாக பாஸ் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதே மாதிரியாக நண்பரின் தொந்தரவினால் ஒத்துக்கொண்டு கையெழுத்திட்டு கோர்டிலும் உத்திரவாகியது. மாதம் குறைந்த தொகையே கொடுக்க வேண்டியிருந்ததால் சுலபமாக தீர்த்து வைத்தார். ஆக பாபாவின் வார்த்தை நூற்றுக்கு நூறு உண்மையானது.

கணபத்தோண்டு என்பவர் 1914-ல் மனைவியுடனும் மகளுடனும் சீரடிக்கு தரிசனத்திற்கு கிளம்பினார். நாஸிக்கிலிருந்து வண்டி வேகமாக ஓடும்பொழுது 15 வேடுவர்கள் ஒருவர்பின் ஒருவராக வண்டியில் ஏறி தோண்டுக்கு அருகில் அமர்ந்தார்கள். இவர்கள் மூவரைத் தவிர வேறு பிரயாணிகள் இல்லை. அப்பொழுது தோண்டு ஹரி பக்தபாராயணம் வாசித்துக் கொண்டிருந்தார். வேடுவர்கள் பாராயணம் விரும்பி கேட்கவே தன்னருகில் அமர்ந்திருக்கிறார்கள் என்று நினைத்து உரக்க வாசிக்க ஆரம்பித்தார். ஐந்து நிமிடம் கழித்து வேடுவர்கள் ஒருவர்பின் ஒருவராக ஓடும் வண்டியிலிருந்து குதித்து ஓடியதை தோண்டு புத்தகம் படிப்பதை நிறுத்தி கதவுக்கருகில் நின்று பார்த்தார். பிறகு வண்டியில் பார்த்தபோது ஒரு வயதான பக்கீர் கையில் தடியுடன் அமர்ந்திருப்பதை பார்த்தார். வண்டி புறப்படும்பொழுது பக்கீர் ஏறவில்லையே? இப்பொழுது எப்படி திடீரென்று வண்டியில் அமர்ந்துள்ளார்! என்று ஆச்சரியப்படுகையில், பக்கீர் திடீரென்று மறைந்து விட்டார். தோண்டுக்கு குழப்பம் அதிகமாகி உடனே வேடுவர்கள் கொள்ளையடிக்கவே வந்து பக்கீரின் தோற்றத்தைப் பார்த்து பயந்தே ஓடிவிட்டனர் என்று புரிந்து கொண்டு அந்த பக்கீர் பாபாவைத் தவிர வேறு யாராக இருக்க முடியுமென்று நினைத்து பாபாவை புகழ்ந்து பாடினார். சீரடிக்குச் சென்று பாபாவை தரிசித்தவுடன் பாபா சிரித்துக் கொண்டே "பத்திரமாக வந்து சேர்ந்தாயா?" என்று கேட்டார். கொள்ளைக்காரர்கள் பாபாவின் தோற்றமில்லாவிடில் தோண்டின் நிலைமை என்னவாகியிருக்கும் என்று நினைத்து பாபாவிற்கு நன்றி கூறினார்.

தீக்ஷிதர் சீரடியில் ஒரு துண்டு நிலத்தை லக்ஷ்மண்பட்டிடமிருந்து வாங்க நினைத்து பேரம் பேசினார். ரூ. 200 பட் கேட்டபோது தீக்ஷிதர் ரூ. 150க்கே வேண்டும் என்றார். பட் மசூதிக்கு சென்றபோது பாபா பட்டைப் பார்த்து நிலத்தின் விவரத்தைக் கேட்டார். தீக்ஷிதரின் விலையை பாபாவிடம் சொன்னபோது பாபா "இருவருக்கும் பொதுவாக ரூ. 175 வாங்கிக் கொள். அதற்கு குறைவாக கொடுக்காதே" என்றார். லக்ஷ்மண்பட் இதை தீக்ஷிதரிடம் சொல்லவில்லை. கடைசியாக ரூ. 150க்கு சம்மதித்து சப்ரிஜிஸ்ட்ரார்

எதிரில் தீக்ஷிதர் ரூ. 150யை கொடுத்தார். பட் வீட்டிற்கு வந்து பணத்தை எண்ணியபோது ரூ. 175 இருப்பதைப் பார்த்து பாபா சொன்ன விலையே தீக்ஷிதர் அறியாமல் கொடுத்திருப்பதைப் பார்த்து ஆச்சரியமடைந்தார்.

1915ல் கோபீஸ்வரரான பாபுசாகேப் பூட்டிற்கு டைபாய்ட் ஜுரம் வந்து அவஸ்தைப்பட்டார். ஒரு மாதத்திற்கு மேலாக எவ்வளவோ மருந்துகள் சாப்பிட்டும் ஜுரம் 103லிருந்து 105 வரை குறையாமல் தினமும் அவஸ்தைப்பட்டார். படுக்கையைவிட்டு எழுந்திருக்கவும் முடியவில்லை. கடைசியாக பாபா அவரைத் தன்னெதிரில் கொண்டு வரச்செய்து ரவையினால் செய்த சீரா என்கிற இனிப்பை தினமும் கொடுத்து குணப்படுத்தினார். தினந்தோறும் சாமாவே பூட்டியை தோளில் தூக்கி வருவார். மருந்தை நிறுத்தி பாபாவின் உதியாலும் ஆசீர்வாதத்தாலுமே குணப்படுத்தப்பட்டார். பாபாவும் ஜுரத்தினால் அவஸ்தைப்பட்டார். பூட்டி குணமடைந்தவுடன் பாபாவும் குணமடைந்தார். இதுவே பக்தர்களின் வியாதியை தான் அநுபவித்து பக்தர்களை பாதுகாக்கும் பாபாவின் பரந்த உள்ளம்.

தீக்ஷிதர் ஒருநாள் மண்மாட் ஸ்டேஷனில் கோபர்கான் செல்லும் வண்டியில் உட்கார்ந்திருந்தார். கடிதங்கள் எழுதிக் கொண்டிருக்கும்போது மூன்று ராணுவ சிப்பாய்கள் வண்டியிலேறி தீக்ஷிதரை வேறு வண்டிக்கு மாற்றிச் சென்று உட்காரச் சொன்னார்கள். தீக்ஷிதர் முடியாது என்றும் தான் அங்குதான் உட்கார்ந்திருக்கப்போவதாகவும் அறிவித்தார். அந்த சமயம் கடிதம் எழுதுவது முடிந்து போகவே அதை போஸ்ட் செய்ய வண்டியிலிருந்து இறங்கி பெட்டியை நோக்கிச் சென்றார். அப்பொழுது பாபாவை ஸ்மரணை செய்து "பாபா நான் சண்டை போட வேண்டுமென்பது உங்கள் விருப்பமா. ஆகட்டும் அதுவே நடக்கும்" என்று சொல்லி கடிதத்தை போஸ்ட் செய்துவிட்டு திரும்பவும் வண்டியிலேறினார் என்ன ஆச்சரியம்! அந்த ராணுவ வீரர்கள் அவர்களது சாமானை தூக்கிக் கொண்டு வேறு ஒரு பெட்டிக்குச் செல்வதைப் பார்த்து பாபாவை நினைத்து உருகினார்.

ஒருநாள் மாலை தீக்ஷிதர் ஆபீஸிலிருந்து வீட்டிற்கு திரும்பும்போது ஒரு யவ்வன பிச்சைக்காரன் தீக்ஷிதரிடம் வந்து சிரித்து சில காசுகளைக் கேட்டான். தீக்ஷிதருக்கு அவன்மேல் பிரீதிவுண்டாகி சில காசுகளைக் கொடுத்தனுப்பினார். அவன் போவதையே பார்த்திருந்தார். வேறு யாரிடமும் காசு கேட்காமல் நேராக சென்று மறைந்து விட்டான். அதே நாள் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கி, "நீங்கள் தான் பிச்சைக்காரப்பையனாக வந்து காசு கேட்டீர்களா" என்று வினவினார். பாபா "ஆமாம் நானேதான்" என்று சொன்னார்.

ஜோக்கின் மனைவிக்கு கண்ணில் வலி ஏற்பட்டு அவதிப்பட்டாள். நாளுக்குநாள் வலி அதிகமாகியது. வேறு மருந்துகளைப் போட்டும் சிறிதும் குணமாகவில்லை. பிறகு அவள் பாபாவிடம் வணங்கி பிரார்த்தித்தாள். மிகச் சுலபமான மருந்தை பாபா சொல்லி "இதை யாரிடமும் சொல்லாதே எவர் எதிரிலும் உபயோகப்படுத்தாதே" என்றார். அப்படியே செய்ததில் கண்வலி சீக்கிரமே குணமாகியது.

தீக்ஷிதரின் தம்பி மகனுக்கு கிர்கியில் உடம்பு அசௌகரியமாகி தனியாக இருந்ததால் மிகவும் பயந்திருந்தனர். பாபா தரிசனம் கொடுத்து நான் உன்னோடு இருக்கின்றேன். பயப்படாதே, சீக்கிரமே சரியாகி விடும் என்றார். அதே மாதிரியாக குணமாகிவிட்டது.

ரகுவீர் புரந்தரே சீரடிக்குச் செல்வதற்கு தயாரானார். ஆனால் புரந்தரேவின் குழந்தைக்கு மிகவும் காய்ச்சலாகி அவஸ்தைப்பட்டது. ஆகவே மனைவியையும் குழந்தையையும் வீட்டிலிருத்திவிட்டு தனியாக புறப்பட்டு சீரடிக்குச் சென்றார். மூன்றாவது நாள் பாபா புரந்தரேவின் மனைவியின் கனவில் தோன்றி குழந்தைக்கு உதியைப் பூசினார். அதுமுதல் குழந்தைக்கு ஜுரம் குறைந்து சீக்கிரமே ஆரோக்கியமாயிற்று.

அண்ணா சாகேப் சின்சினிகர் முதல் தடவையாக சீரடிக்குச் சென்றார். அப்பொழுது சின்சிஸியில் பிளேக் பரவி அண்ணா சாகேப்பின் மனைவி மட்டும் ஊரிலிருந்து கொண்டாள். மற்றவர்கள்

பிளேக் நோய்க்காக பயந்து வேறு ஊருக்கு சென்று விட்டார்கள். தனியாக இருந்ததால் பயந்திருந்தாள். பாபா நேராக காட்சியளித்து ஜனங்கள் ஊருக்கு திரும்பும்வரை 10 அல்லது 12 தடவை காட்சியளித்து அபயமளித்தார். ஆக அண்ணாசாகேப் மனைவி தைரியமாக ஊரிலிருந்தாள்.

சிவராத்திரி (14-3-1914) அன்று சித்தாநாத்தை தரிசிப்பதற்கு நெமாவருக்கு கிருஷ்ணராவ் நாராயன் என்பவர் குடும்பத்துடன் மத்தியானம் 3 மணிக்கு புறப்பட்டார். வண்டியின் சக்கரத்தில் பழுது ஏற்பட்டதால் கொஞ்சம் தாமதமாகிவிட்டது. நர்மதை நதியின் கரையை அடைவதற்குள் இருட்டிவிட்டது. படகோட்டி இருட்டிய பிறகு படகை விடக்கூடாது என்பது சட்டம். வேலைக்காரன் எவ்வளவு வேண்டியும் இரண்டு மடங்கு பணம் கொடுப்பதாகச் சொல்லியும் படகோட்டி முடியாதென்று சொல்லி விட்டான். நாராயண் மனைவி பாபாவை நினைத்து அவருடைய அருளை வேண்டினார். பிறகு குதிரை வண்டி ஏதாவதொன்றை பிடித்து அருகேயுள்ள கோயிலில் இரவு தங்கலாம் என்று யோசனை செய்தார்கள். அப்பொழுது ஒரு பக்கீர் பாபாவைப் போலவே உடை உடுத்தி அங்கு வந்து படகுகாரனை படகை விடும்படி வேண்டினார். ஆனால் முடியாது என்று சொல்லி விட்டான். வேலைக்காரனிடம், பெண்களுடனும் குழந்தைகளுடனும் ஏன் இவ்வளவு தாமதமாக வந்தீர்கள் என்று கேட்டார்.

வேலைக்காரன் வழியில் வண்டி பழுதடைந்துவிட்டதால் தாமதமாகி விட்டதைச் சொன்னான். இந்த படகு யாருடையது என்று கேட்டார். வேலைக்காரன் அது பிரிட்டிஷ் ராணுவத்தைச் சேர்ந்தது என்று சொன்னான். பக்கீர் பயப்படாதீர்கள், அருகேயுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்கு சென்று உத்தரவு வாங்கி வருகிறேன். "படகு இப்பொழுது விடப்படும்" என்று சொல்லி நடந்து சென்று மறைந்து விட்டார். சிறிது நேரத்தில் படகுக்காரன் ஓடிவந்து "படகை விடுகின்றேன் சீக்கிரம் ஏறுங்கள்" என்று சொல்லி அவனே மூட்டைகளை எடுத்து படகில் வைத்தான். வண்டியையும் படகில் ஏற்றிக் கொண்டான். படகின் வாடகைக்கு கேட்டபோது இஷ்டமானதை கொடுங்கள் என்று சொல்லிவிட்டான். பெண்களும், குழந்தைகளும் சந்தோஷமாக ஏறி

அமர்ந்தார்கள். பாபாவே மனதை மாற்றியதை நினைத்து, போற்றி புகழ்ந்து கொண்டே சென்றார்கள்.

டாக்டர் ஹாதே பாபாவிடம் முழு நம்பிக்கையுள்ளவர். சீரடியில் சிறிது காலம் வசித்து வந்தார். ஒருநாள் மாலை, க்வாலியரிலிருந்து சாலூராம் என்பவர் வந்து அவருடைய மகன் காணாமல் போய் விட்டதால், தானும் தன் மனைவியும் மிக்க கவலையில் ஆழ்ந்திருப்பதாக டாக்டர் ஹாதேவிடம் சொன்னார். உடனே ஹாதே பாபாவிடம் சென்று வணங்கினால் கண்டிப்பாக மகன் கிடைப்பான் என்று சொன்னார். உடனே சாலூராம் ஒரு பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார். பையனின் இருப்பிடம் தெரிந்தவுடன் உடனே சீரடிக்கு சென்று தரிசிப்பதாக உறுதி எடுத்தார். சில நாட்களில் பையனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. தான் இராணுவத்தில் சேர்ந்திருப்பதாகவும் இப்பொழுது இந்தியாவுக்கு திரும்புவதாகவும் தெரிவித்து இருந்தான். இதை ஹாதேவிடம் சொன்னபோது, உடனே சீரடி செல்லுமாறு சாலூராமுக்கு புத்தி சொன்னார். இதைச் செய்யாமல் பிரதிக்ஞையை மீறி முதலில் மகனைப் பார்ப்பதற்கு பம்பாய் சென்றார். ஆனால் மகன் மிகவும் இளைத்து ஜுரத்தினால் அவதிப்படுவதைப் பார்த்து அவனுடன் டாக்டர் ஹாதேவிடம் மருந்துக்காக சென்றார்கள். டாக்டர் ஹாதே சொன்னார் பாபாவைப் பார்க்காமல் முதலில் மகனைப் பார்த்ததால் இப்படி ஜுரம் வாட்டுகிறது. இப்பவும் உடனே பையனுடன் பாபாவிடம் சென்று மன்னிப்புக் கோரினால் பையன் சரியாகிவிடுவான். வேறு மருந்து தேவையில்லை என்றார். உடனே செல்வதாகவும், ஒரு அறிமுகக் கடிதம் தரும்படி வேண்டினார். அம்மாதிரியான கடிதம் தேவையில்லை என்றும் அதற்குப் பதிலாக வேறொன்றை கொடுப்பதாகச் சொல்லி பாக்கெட்டிலிருந்து ஒரு ரூபாய் எடுத்துக் கொடுத்து பாபாவிடம் கொடுக்கச் சொன்னார். அவருடைய எண்ணம் பாபா அதை ஆசீர்வாதத்துடன் திருப்பிக் கொடுத்து அதை பூஜையில் வைத்து வணங்க வேண்டுமென்று நினைத்தார். சாலூராம் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கி சாதேவின் ரூபாயைக் கொடுத்தார். பாபா அதை திருப்பிக் கொடுத்து, அவனை நிம்மதியாக இருக்கச் சொல். ஆசீர்வாதத்துடன் இதை திருப்பி கொடுத்ததாகவும், பூஜையில்

வைக்கும்படியும் சொல் என்றார். என்ன ஆச்சரியம்! ஹாதே நினைத்ததை பாபா அறிந்து அம்மாதிரியாகவே திருப்பிக் கொடுத்தார்.

இன்னும் ஆச்சரியம் என்னவென்றால் சாலுராம் குவாலியருக்குத் திரும்பி டாக்டரிடம் எல்லாவற்றையும் சொல்லி, தன்னுடைய மகனின் ஜுரம் சரியாகி விட்டதாகவும், பாபா ஆசீர்வாதத்துடனும் பூஜையில் வைக்கும்படியும் ஒரு ரூபாயை திருப்பிக் கொடுத்ததாகச் சொல்லி, ரூபாயை ஹாதேவின் கையில் வைத்தார். ஹாதே அந்த ரூபாயை கவனித்து, அது தன்னுடைய ரூபாய் அல்லவென்று சொல்லி, சாலுராமிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார். சாலுராம் மிக்க வேதனையடைந்து வருத்தத்துடன் வீடு சென்றார். அடுத்த நாள் வேறு ரூபாயுடன் டாக்டரிடம் வந்து கொடுத்தார். டாக்டர் ஹாதே அதுதான் தன்னுடைய ரூபாய் என்று சொன்னார். சாலுராம் தன்னுடைய மனைவியின் கவனக்குறைவால் வேறொன்றை கொடுத்துவிட்டார் என்று சொல்லி வருத்தம் தெரிவித்தார்.

வசந்தராவ் நாராயண், அடிக்கடி சீரடிக்குச் செல்பவரும், சிறந்த பக்தருமாவார். ஜஹாங்கீர் படேல் என்பவர், வசந்தராவிடம், பாபா போட்டோ இருப்பதைப் பார்த்து, அதில் ஒன்றை தனக்காக வாங்கிக் கொண்டார். பட்டேல் அதை நம்பிக்கையோடு பெறவில்லை. அவர் ஆபீஸில் லீமாயி என்கிற சாயி பக்தரை கேலி செய்து துன்புறுத்தவே இதை வாங்கினார். படேல் லீமாயிடம் போட்டோவைக் காண்பித்து கண்டபடி கேலி பேசினார். லீமாயி மனது உடைந்து, வசந்தராவிடம் சென்று, அவர் படேலுக்கு பாபா போட்டோவைக் கொடுத்தது மிகவும் தவறு என்று கண்டித்தார். வசந்தராவ் சொன்னார், “தெரியாமல் கொடுத்து விட்டேன் அப்படியாவது பாபாவிடம் பக்தி திரும்பாதா” என்று நினைத்து கொடுத்தேன் என்றார். இருவரும் ஒன்றாக பாபாவிடம், படேல் திருந்தி பாபாவிடம் பக்தி செலுத்த வேண்டும் என்று வேண்டினார்கள். பதினைந்து நாட்களுக்குள் படேல் வசந்தராவிடம் வந்து “தான் பெரிய தவறு இழைத்ததற்காக பாபாவிடம் மன்னிப்பு கேட்பதாகவும், சில ரூபாய்கள் பிராயச்சித்தமாக கொடுப்பதாகவும், அதை சீரடிக்கு அனுப்பச் சொல்லி வேண்டி

நின்றார்". வசந்தராவ் படேலை தீக்ஷிதரிடம் அழைத்துச் சென்று எல்லாவற்றையும் விளக்கினார். தீக்ஷிதரும் நேரில் பாபாவை தரிசிக்கும்படி படேலுக்குச் சொன்னார். 1918ல் குருபூர்ணிமா அன்று வசந்தராவ், படேல், லீமாயி மூவரும் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கினார்கள்.

1912ல் நாணா சாகேப் சந்தோர்க்கரின் மகள் கல்யாணத்திற்கு முதல்நாள் குவாலியருக்கு தீக்ஷிதர் சென்றிருந்தார். குருசிந்தாமன்ராவ் வைத்யாவை, கல்யாணத்திற்கு அழைத்து வரவேண்டுமென்று நானாவும், தீக்ஷிதரும், மாதவராவும் கல்யாண தினத்தன்று அதிகாலையில் கிளம்பி ரயில்வே ஸ்டேஷனை அடைந்து அங்கிருந்து 5 மைல் டோங்காவில் செல்ல வேண்டியிருந்தது. ஒரே ஒரு வண்டி மாத்திரம் கிடைத்தது. ஆனால் டோங்கா வாலா அவ்வளவு தூரத்திற்கு வண்டியின் குதிரை ஓடாது என்றும் அந்த ஊர் 10 மைல் தூரத்திலிருப்பதாகச் சொன்னான். தீக்ஷிதரும், நானாவிடம் குறிப்பிட்ட நேரத்தில் கல்யாணம் நடக்கவேண்டியிருப்பதால் திரும்பி விடலாம் என்று யோசனை சொன்னார். ஆனால் நானா, தானில்லாமல் கல்யாணம் நடக்காது என்றும், பாபாவின் உத்திரவுபடி அந்த குருவை கல்யாணத்திற்கு அழைத்தே ஆக வேண்டுமென்று பிடிவாதமாக இருந்தார். சிறிதுநேரத்தில் வேறொரு டாங்கா கிடைத்து, கஷ்டப்பட்டு குருவையடைந்து அழைத்ததில் அவர் உதியைக் கொடுத்து "இது ஹரிஹரனின் உதி" என்று சொன்னார். ஊர் திரும்ப உத்திரவும் கொடுத்தார். திரும்பும்பொழுது வழியும் தவறிவிட்டது. பாபாவின் கருணையில் வழி கிடைத்து, ரயிலும் கிடைத்து, சரியான சமயத்தில் ஊர் சேர்ந்து கல்யாணமும் இனிது நடந்தேறியது. ரயிலிலும் பிரயாணம் செய்து, டோங்காவில் 20 மைல் மேடு பள்ளமான ரோட்டில் பிரயாணம் செய்து, தக்க சமயத்தில் கல்யாணத்திற்கு வந்து சேருவதென்றால் பாபாவின் கருணையில்லாமல் வேறெதுவாக இருக்க முடியும்!

ஒரு நாள் தீக்ஷிதர் ஆபீஸிற்க்கு போகிற சமயத்தில் வண்டியிலேயே ஜுரம் வந்து விட்டது. பிறகு தீக்ஷிதர் பாபாவை மனதில் தியானித்து, பாபா இந்த ஜுரம் அதிகமாகும் பக்ஷத்தில்

என்னை சீரடிக்கு அழைத்துக் கொள்ளுங்கள் என்று பிரார்த்தித்தார். அதே மாதிரியாக ஆபீஸிக்குச் சென்றவுடன் தன் மேஜை மீது ஒரு கடிதம் சீரடியிலிருந்து பாபா உடனே அழைப்பதாக தெரிவித்து வந்திருந்தது. உடனே பாபாவின் அற்புத சக்தியைப் போற்றி அன்றிரவே சீரடிக்கு புறப்பட்டுச் சென்றார். நல்ல ஜுரத்துடன் சீரடிக்கு பிரயாணம் செய்தார். ஆனால் சீரடியை அடைந்தவுடன் ஜுரம் விட்டு விட்டது. ஆனால் பாபா ஜுரத்தினால் நான்கு நாட்கள் கஷ்டப்பட்டார்.

**"சுக தேவுனி பக்தான்ஸி'**
**த்யன்கே துக்க அவயாம் சோஷி"**

பக்தர்களுக்கு சந்தோஷத்தை கொடுப்பதற்கு, பாபா தன்னையே வாட்டிக் கொள்கிறார் என்பதே இதன் அர்த்தம்.

ஒரு சமயம் தீக்ஷிதரின் இடதுகால் வீக்கமாகி, அதிக வலியுடன் அவஸ்தைப்பட்டார். ஒரு பர்லாங் தூரம் கூட நடக்க முடியாமல் அதிக கஷ்டப்பட்டார். அவ்வாறு அவஸ்தைப்படும் பொழுது, வாடாவிற்கு ஒருவர் வந்து பாபா நிம்கானுக்கு சென்று விட்டதாகச் சொன்னார். உடனே தீக்ஷிதர் மற்ற சாயி பக்தர்களையும் அழைத்துக் கொண்டு கால்வலியை மறந்து நிம்கானுக்கு புறப்பட்டுச் சென்றார். அவ்வாறு 1½ மைல் தூரம் நடந்து பாபாவை அடைந்து மறுபடியும் பாபாவுடன் சீரடிக்குத் திரும்பினார். 3 மைல் தூரம் நடந்தும் தீக்ஷிதருக்கு வலி தெரியாமல், வீக்கமும் மறைந்து ஆரோக்கியமானார்.

ஒருநாள் அதிகாலையில் காகா மஹாஜனியின் கனவில் தோன்றி பாபா, "நீ என்ன தூங்குகிறாயா! இன்று சமாதியான 30வது நாள் கொண்டாட வேண்டாமா எழுந்திரு" என்று கட்டளையிட்டார். காகாவும் படுக்கையில் உட்கார்ந்து கணக்கு போட்டு பார்த்ததில், பாபா சொன்ன மாதிரியே 30 நாள் ஆகியிருந்தது. ஆனால் எப்படி கொண்டாடுவது, அவருக்கு புரியவில்லை. தீக்ஷிதரை தன்னுடன் காலை உணவு எடுத்துக் கொள்ளும்படி வேண்டினார். மாலையில் அவர் தபோல்கரையும், பிரதான், தோனார் முதலியவர்களை விருந்துக்கு அழைத்து, விருந்து முடிந்தவுடன் சாயி பஜனை இரவு முழுவதும் நடத்தி எல்லோரும் சந்தோஷப்பட்டார்கள்.

ஒருநாள் தீக்ஷிதர் சீரடிக்கு டோங்காவில் செல்லும்பொழுது, ஒரு பெண் கூடை நிறைய கொய்யா பழங்களுடன் ஓடி வந்தாள். வண்டியை நிறுத்தி பாபாவிற்கு சமர்ப்பிப்பதற்காக கூடையோட பழங்களை வாங்கி டாங்காவில் வைத்தார். பழம் மிக்க வாசனையுள்ளதாக ரம்மியமாக இருக்கவே, தீக்ஷிதருக்கு உடனே பழத்தை சாப்பிட வேண்டும் போல் தோன்றியது. உடனே மனதை கட்டுப்படுத்தி, கண்மூடி பாபாவைத் தியானம் செய்து "தேவா இம்மாதிரியான எண்ணம் ஏற்படாமல் அருள் புரியுங்கள். ஒரு வாசனையால் என்மனது எவ்வளவு பலவீனமாகிவிட்டது? தயவுசெய்து இதை தவிருங்கள்" என்று மானசீகமாக வேண்டினார். என்ன ஆச்சரியம்! அந்த நிமிஷமே ஒரு துளி வாசனை கூட இல்லாமல் மறைந்தது. கொய்யாப்பழம் டாங்காவில் இருக்கும் அறிகுறியே இல்லாமல் போய்விட்டது.

சீரடியில் ஒருசமயம் தீக்ஷிதர் இருந்தபோது மஹல்சபதி மிகவும் வறுமையால் பணமில்லாமல் கஷ்டப்பட்டார். இதை அறிந்து தீக்ஷிதர் தன்னிடம் பணம் இருந்தால் உதவி செய்யலாமே என்று நினைத்து ஆனாலும் மகல்சபதி அம்மாதிரி ஒத்துக் கொள்ளுபவரும் அல்ல. எவ்வளவுதான் கஷ்டப்பட்டாலும் பிறரிடமிருந்து எதையும் வாங்க மாட்டார். சிறிது நேரத்தில் தீக்ஷிதரிடம் பணம் வந்து சேர்ந்தது. ஒரு நோட்டை கவரில் போட்டு நேராக கொடுத்தால் மகல் சபதி வாங்க மாட்டார். ஆகையால் பாபாவின் மூலமாக அனுப்ப நினைத்து பாபாவிடம் சென்றார். பாபாவைச் சுற்றி அதிக கூட்டமிருந்தது. இந்த விஷயம் யாருக்கும் தெரியாமல் செய்ய வேண்டுமாகையால், பாபாவிடம் கவரை காண்பித்து, இந்த லெட்டரை அனுப்பலாமா என்று மட்டும் கேட்டார். பாபா 'ஆமாம்' என்று மட்டும் கூறினார். உடனே தீக்ஷிதர் ஒரு ஆள் மூலமாக மகல்சபதியின் வீட்டுக்கு அந்த பணத்தை அனுப்பி வைத்தார். அன்று மாலையில் மகல் சபதியை சந்தித்தபோது "நீங்கள் அனுப்பிய கவர் சேருவதற்கு 2 மணி முன்பாக என்னுடைய மனைவியிடம் பாபா நான் உன் வீட்டுக்கு வருகிறேன். என்னை திரும்பி அனுப்ப வேண்டாம் என்று உன்னுடைய கணவருக்குச் சொல்" என்று கட்டளையிட்டார். ஆக உங்களது கவரை நான் வாங்க வேண்டியதாயிற்று என்று மகல்சபதி தீக்ஷிதரிடம் கூறினார்.

மொரேஷ்வரராவ் என்பவர் ஒரு சாதுவை சந்தித்து அவருடன் போஜனம் செய்ய நினைத்தார். அதற்கு ஒருநாள் குறிப்பிட்டார். ஆனால் அந்த நாளுக்கு இரண்டு நாள் முன்பாக மொரேஷ்வரராவ் வியாதியால் கஷ்டப்பட்டு அவரால் போக முடியாமல் போய்விட்டது. மிக்க கவலைக்குட்பட்டு தூக்கமும் வராமல் அன்று முழுவதும் கஷ்டப்பட்டார். உடனே பாபா கனவில் தோன்றி தக்ஷிணையை கேட்டு வாங்கினார். அடுத்த நாள் எழுந்தபோது வியாதி நீங்கி, கவலை நீங்கி மிக்க சந்தோஷத்துடன் காணப்பட்டார். பாபா மறைந்தாலும் இப்பொழுதும், பக்தர்கள் கவலையில் வீழ்ந்தால் ஏதோ ஒரு வழியில் துன்பங்களை பாபா கண்டிப்பாக துடைத்து விடுகின்றார்.

ஒரு சமயம் தீக்ஷிதரும், நூல்கரும் குடும்பத்துடன் சீரடியிலிருந்து விடை பெறும்பொழுது “நாளைக்கு போகவும், கோபர்கானில் உங்கள் சாப்பாட்டை முடித்துக் கொள்ளுங்கள்” என்று பாபா கட்டளையிட்டார். அதே மாதிரியாக கோபர்கான் ஹோட்டல் சொந்தக்காரருக்கும் சாப்பாடு தயாராக இருக்கும்படி சொல்லி அனுப்பப்பட்டது. அடுத்த நாள் கோபர்கான் சென்றபோது ஹோட்டலில் சாப்பாடு தயாராகவில்லை. வண்டிக்கு நேரமானபடியால் சாப்பிடாமலே ஸ்டேஷனுக்கு விரைந்தார்கள். பாபா “சாப்பாடு கோபர்கானில்” என்று சொன்னது பொய்யாகுமா? ஸ்டேஷனுக்குச் சென்றால் வண்டி 1½ மணி நேரம் லேட்டாக வரும் என்று அறிவிக்கப்பட்டது. ஆக போங்கா வாலாவிடம் ஹோட்டலுக்கு சொல்லியனுப்பி சாப்பாடு வரவழைத்து எல்லோரும் சாப்பிட்டார்கள். சாப்பிட்ட 10 நிமிடம் கழித்தே வண்டி வந்து நின்றது.

ஒருசமயம் தீக்ஷிதர் பம்பாய்க்கு சென்றிருந்து, திரும்பி வில்லே பார்லேவுக்கு வரும்பொழுது, பந்தரா ஸ்டேஷனில் தபோல்கரின் மாப்பிள்ளை கல்வான்கர், தீக்ஷிதர் வண்டியிலிருப்பதைக் கவனித்து ஓடி வந்து தீக்ஷிதரை இறங்கும்படியும், தபோல்கரை அவர் வீட்டில் சந்திக்கப் போகலாம் என்றும் அழைத்தார். ஆனால் கதவை திறக்க முயன்றபோது முடியவில்லை. அது தன்னாலே பூட்டப்பட்டிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டார். இறங்க முடியாமல் நேரே வில்லேபார்லேவுக்கு சென்று போர்ட்டரை கூப்பிட்டு கதவு

சாவியினால் திறக்கப்பட்டு இறங்கி வீட்டிற்கு சென்றார். அங்கு தபோல்கரும், அவரது மனைவி, நண்பர்கள் காத்திருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தார். தபோல்கர் பந்தாராவில் இல்லை என்றும் அதை தெரிவிக்கவே பாபாவின் லீலையால் கதவு திறக்க முடியாமல் போய்விட்டதை தீக்ஷிதர் உணர்ந்தார்.

பூனாவில் ஒரு அம்மைக்கு ரொம்ப நாள் குழந்தையில்லாமல் மிக்க கவலையுற்றாள். ஒரு குழந்தை பிறக்காதா என்று ஏங்கினாள். பாபாவை தரிசித்து அவரிடமிருந்து ஒரு தேங்காயை வாங்கி வர நினைத்து அநேக தடவை முயற்சி செய்தும் ஏதாவது ஒரு தடங்கல் கிளம்ப முடியாமல் செய்தது. கடைசியாக ஒரு நாள் பாபா அவள் கனவில் தோன்றி, அவளுக்கு ஒரு தேங்காயை கொடுத்தது போல் தோன்றியது. அவள் விழித்து பார்த்தவுடன் நிஜமாகவே தேங்காயொன்று அவள் பக்கத்திலிருக்கக் கண்டாள். மிக்க சந்தோஷமுற்று ஒரு பிரதிக்ஞை எடுத்துக் கொண்டாள். பாபாவின் ஆசியால் ஒரு மகன் பிறந்தால் பாபாவின் பாதத்தில் அவனை வைத்து நாமகரண சூட்டும் விழாவை நடத்துவேன் என்று சொல்லிக் கொண்டாள். ஒரு வருடத்திற்குள் மகன் பிறந்து சந்தோஷமுற்று அவனுக்கு பெயரிடும் விழாவை சிறப்பாக சீரடியில் கொண்டாடினாள்.

பந்தாராவிலிருக்கும் ஒரு நண்பர் ஒரு ஆபீஸிற்கு கிளம்புகையில் அவருடைய மனைவி தனக்கு செலவிற்காக ஒரு ரூபாய் வேண்டுமென்று சொன்னாள். நண்பரும் பர்ஸை திறந்து பார்த்தபோது ஒரு ரூபாய் நாணயம் கிடைக்காமல் 10 ரூபாய் நாணயம் இருப்பதையறிந்து ஆபீஸில் மாற்றி சாயந்திரமாக தருவதாகச் சொல்லவும் மனைவியும் சம்மதித்தாள்.

படியை விட்டு இறங்கி வீட்டிற்கு வெளியே வந்தபோது ஜேபியில் கையை விட்டு கைக்குட்டையை எடுத்தார். அதனுடன் ஒரு ரூபாய் நாணயமும் கிடைத்தது. அவருக்கு ஆபீஸிற்கு செல்வதற்கு நிறையபொழுது இருந்தபோதிலும் மேலே ஏறி மனைவியிடம் பணத்தை கொடுப்பதற்கு சோம்பல் கண்டு ஆபீஸிற்கு சென்று விட்டார். சாயந்திரம் வீட்டிற்கு வந்து ஒரு ரூபாய் நாணயத்தை கொடுத்தார். ஆக இந்த நிகழ்ச்சியை இருவரும் மறந்து விட்டனர்.

சில காலம் கழித்து இருவரும் ஒரு நாள் பாபாவை சென்று வணங்கினர். அவர்கள் பாபாவை நமஸ்கரித்ததும் மனைவியைப் பார்த்து பாபா "அம்மா இந்த காலத்தில் சிலர் உண்மையாக நடக்கவில்லை பாக்கெட்டில் ஒரு ரூபாய் நாணயம் இருந்தும், இல்லை என்று சுலபமாக பொய் சொல்லுகிறார்கள்" என்றார்.

மனைவிக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் நண்பர் தான் சோம்பலினால் எப்பொழுதோ பணம் கொடுக்காததை பாபா அறிந்து, வெளியிடுவதைக் கண்டு ஆச்சரியமடைந்து, பாபாவின் கால்களை கெட்டியாக பிடித்துக் கொண்டு கதறினார்.

## பாபாவின் தினசரி பழக்கவழக்கங்கள்

பாபாவின் தினசரி பழக்க வழக்கங்கள் மிகவும் கண்டிப்பாக அனுசரித்து வந்ததாக இருந்தது. காலையில் முன்னதாகவே எழுந்திருந்து துனியின் எதிரில் அமருவார். சிறிது நேரம் கழித்து காலை அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, சிறிது நேரம் மௌனமாக உட்கார்ந்திருப்பார். அப்பொழுது பாகோஜி என்கிற குஷ்டரோக வியாதியுள்ளவர் பாபாவின் வலது கையில், கட்டை அவிழ்த்து, நெய்யைத்தடவி சிறிது நேரம் மசாஜ் செய்வார். பிறகு மறுபடியும் கட்டை கட்டி விடுவார். பிறகு சிலிம் என்கிற புகைபோக்கியை தயார் செய்து பாபாவிடம் முதலில் கொடுப்பார். பாபா புகை பிடித்தவுடன், மறுபடியும் பாகோஜியிடம் கொடுப்பார். அவ்வாறே ஐந்து பேர் அதை பகிர்ந்து புகை பிடிப்பார்கள். பாகோஜி சென்றவுடன் சில பக்தர்கள் குறிப்பிட்டவர்கள் பாபாவை நமஸ்காரம் செய்து காலைப்பிடித்து விடுவார்கள். பிறகு பாபா எழுந்து முகத்தையும், வாயையும் அலம்புவார். அதைப்பார்ப்பதற்கு மிகவும் ஆனந்தத்தை கொடுப்பதாக இருக்கும். நிறைய தண்ணீரை எடுத்து பாதம், வாய், கைகள், கால்கள், காதுகள் மற்ற எல்லா பாகங்களையும் மிகவும் சுத்தமாக அலம்புவார். அதே மாதிரியாக குளிக்கவும் செய்வார். பிறகு பாபா பிட்சைக்குச் செல்வார். குறிப்பிட்ட 5 வீடுகளுக்கு மட்டும் சென்று பிச்சைகேட்டு சப்பாத்தி முதலியவைகள் வாங்கி வருவார். ஆனால் கொஞ்சம்தான் சாப்பிடுவார். பிறகு பாபா ஒரு தர்பார் கூட்டுவார். அப்பொழுது அநேக பக்தர்கள் கூடுவார்கள். பாபா மிக அற்புதமாக

கதைகளைச் சொல்லி புத்தி புகட்டுவார். சில சமயங்களில் தர்பாரில் பாபா கொய்யாப்பழங்களையும், வாழைப்பழங்களையும், மாம்பழங்களையும் வாங்கி பக்தர்களுக்கு பிரசாதமாக அளிப்பார். கொய்யாவை தானே துண்டுகளாக நறுக்கியும், வாழைப்பழத்தை உரித்தும், மாம்பழத்தை இரண்டு கைகளாலும் அமுக்கி மிருதுவாக்கியும் கொடுப்பார். பிறகு லெண்டித் தோட்டத்திற்கு செல்வார்.

இந்த லெண்டித் தோட்டத்தில் பாபா கைப்பட ஒரு கிணறு உருவாகியது. இதன் தண்ணீர் சுரம் முதலிய வியாதிகளைப் போக்குவதற்கு அற்புதமாக பயனளித்தது. நந்தா தீபம் என்கிற அணையா விளக்கையும் பாபா ஏற்றி வைத்தார். லெண்டியிலிருந்து திரும்பியவுடன், பாபா மத்தியானம் 2 மணிவரை மசூதியில் தங்கியிருப்பார். அப்பொழுது பக்தர்கள் அவரவர்கள் விரும்பியபடி பாபாவை வணங்குவார்கள். பகல் ஆரத்தியும் பாபாவிற்கு நடக்கும். பாபா உணவை உட்கொண்டு, மறுபடியும் லெண்டித்தோட்டத்திற்கு செல்வார். சாயந்திரம் மசூதிக்குத் திரும்பி, சூரியன் அஸ்தமனமாகும் வரையில் மசூதியில் உட்கார்ந்திருப்பார். மறுபடியும் கொஞ்சதூரம் வெளியே சென்று வந்து மசூதியில் உட்காருவார். மூன்று தர்பார்கள் தினந்தோறும் நடந்தன.

முதல் தர்பார் காலை ஆகாரத்திற்கு பிறகும், பகல் 12 மணிக்கு ஒரு தர்பாரும் மாலை 5 மணிக்கு கடைசியாகவும் நடந்து வந்தது. அம்மாதிரி சமயங்களில் பாபா மிக நல்ல புத்தி மதிகளை எடுத்துரைப்பார். இது அநேக பக்தர்களை சீர்திருத்தியது. முக்கியமானவை கடவுளிடம் முழு நம்பிக்கையும், பொறுமையும் வைத்தல், எல்லா ஜந்துக்களிடமும் அன்பு செலுத்துதல், மற்றவர் மனம் நோகாமல் நடத்தல், நேர்மையாக நடத்தல், உண்மையை கடைப்பிடித்தல், மற்றவர்களின் உழைப்பை பணம் கொடுக்காமல் அனுபவித்தலை தவிர்த்தல் முதலியவைகளை எடுத்துரைப்பார். சில கதைகள் மூலமும் புத்திமதிகளை அளிப்பார். ஆனால் இவைகள் எல்லாம் பக்தர்களின் மனதில் ஆழப்பதிந்து மிக ஆச்சரியமான அனுபவத்தை அளிப்பதாக இருந்தது. அவைகள் யாருக்கு பயன்படுமோ அவர்களுக்கே புரியும். ஒரு மனிதன் நல்லவனோ, கெட்டவனோ மசூதியில் நுழைந்து விட்டால் அவன் படிப்படியாக

பாபாவிடம் பக்தி பெருகி திருந்தி விடுவான். கனவுகள் மூலமாகவும், நண்பர்கள் மூலமாகவும் புத்திமதிகள் கூறி நிறைய பக்தர்களை நல்வழிப்படுத்தியுள்ளார். அவர் சமாதியடைந்த பிறகும் நம் அனுபவத்தில் தினந்தோறும் இதை அநுபவிக்கலாம். பாபாவின் உதியும் அன்றிலிருந்து இன்று வரை மிகவும் நன்மைகளை தரும்படியாக பக்தர்களுக்கு உதவுகின்றது. கைவிடப்பட்ட நோயாளியும் துனியால் ஆரோக்கியமடைகின்றான்.

திடீரென்று சாயிபாபா ஒரு நாள் சீரடியில் மத்தியில் தோன்றி வேப்பமரத்தினடியில் தியானத்திலமர்ந்திருந்ததை சீரடிவாசிகள் மிக ஆச்சரியமாக, ஒரு சிறுவயது வாலிபர் மிக்க அழகானவர், கிழிந்த ஆடையுடன் தனியாக அமர்ந்து தியானத்தில் அமர்ந்திருப்பதைப் பார்த்து வியப்புற்று கேள்விமேல் கேள்வி கேட்டும் ஒன்றும் பதில் கிடைக்காமல் ஏமாற்றமடைந்தார்கள். இரவும், பகலும் அல்லா மாலிக் என்று சொல்லி வந்தார். ஜனங்கள் பேசும் எல்லா பாஷைகளையும் அறிந்திருந்தார்.

தலையில் வெள்ளைத்துணியால் சுற்றியும், நீண்ட சொக்காயும் அணிந்து காணப்பட்டார். அவருடைய கைகள் அளவிற்கு அதிகமாக நீண்டு வளர்ந்திருந்து, ஆஜானுபாவராய் விளங்கினார். பாபா எல்லோரையும் அவர், அவரவர்கள் பழக்க வழக்கங்களை அனுசரித்து, மத சம்பந்தமான புத்தகங்களைப் படித்து குடும்ப தெய்வத்தையே வழிபட்டு வரும்படி புத்திமதி சொன்னார்.

மிக்க ஆச்சரியமென்னவென்றால், பக்தர்கள் எதற்காக தன்னை வந்து தரிசித்தார்கள் என்பதை அவர்கள் சொல்லாமலே முன்னதாகவே சொல்லி அதற்கு வழிகளும் உரைப்பார். அந்தர்யாமியாக அவருக்கு தெரியாதது ஒன்றுமில்லாமலிருந்தது. அவரிடம் எதையும் மறைக்க முடியாததாகவுமாகயிருந்தது.

நோயாளிகளுக்கு தகுந்த மருந்தை கொடுத்து வியாதியை போக்கி வந்தார். ஏழைகளுக்கும், குஷ்டரோகி வியாதியஸ்தர்களுக்கும், தன்கையினாலேயே மருந்து தடவி குணப்படுத்தி வந்தார். மருந்தின் உபயோகம் சீக்கிரம் குணப்படுத்துவதாக இருந்தது. ஹிந்துக்களுக்கு, அவர்கள் தருமத்தை அனுசரித்து நடப்பது போலவும்,

முகம்மதியர்களுக்கு அவர்களைப் போலவே குரான் முதலியன ஓதியும், எல்லோருக்கும் கடவுளாகத் தோன்றினார்.

பாபா, தினந்தோறும் நிறைய பணத்தை பக்தர்களிடமிருந்து தட்சிணையாக வாங்கி அதை உடனே ஏழைகளுக்கு பங்கிட்டு கொடுத்து விடுவார். பணக்காரர்களையும் ஏழைகளையும் ஒரே மாதிரியாக பாவித்து வந்தார். எந்தப் பணக்காரன் ஏழைகளை விரும்பி உதவுகிறானோ, அவனையே பாபா விரும்பினார். பக்தர்களுக்கு புத்திமதி சொல்லும் பொழுது, ஏழைகளுக்கு பசிக்கு உணவு அளிக்கும்படி வேண்டுவார்.

மசூதியைச் சுற்றி அகல் விளக்கேற்றி மகிழ்வது பாபாவின் வழக்கம். கட்டைகளை துனியில் போட்டு எப்பொழுதும் எரியும்படி செய்வார். துனியின் உதி பக்தர்களை ஆசீர்வதிக்கும் என்று சொல்லுவார். எல்லா மதத்தினரும் பாபாவை தரிசித்தனர். மிக எளிமையான உணவை, அதையும் தினசரி பிட்சையில் கிடைப்பதையே கொஞ்சமாக புசித்து வந்தார். விலையுயர்ந்த பட்சணங்களை தொடவே மாட்டார். அம்மாதிரியான பட்சணங்களை உடனே ஏழைகளுக்கு விநியோகித்து வந்தார். ஒரு சிறு துண்டையும் பாபா சாப்பிடமாட்டார். ருசி என்பதே இன்னதென்று தெரியாமலிருப்பார். பாபாவிற்கு வேண்டியதெல்லாம், தன் பக்தர்கள் முழு நம்பிக்கையுடன் தன்னிடம் சரணாகதி அடைய வேண்டும் என்றும், அதே சமயத்தில் தன்னுடைய ஆசீர்வாதத்திற்கு பொறுமையை கடைப்பிடிக்க வேண்டுமென்றும் விரும்பினார். இப்பொழுதும் பக்தர்களின் தேவையை முழுமையாக கவனித்து வருகிறார்.

தன் பக்தர்கள் விரதம் இருப்பதை பாபா விரும்பவில்லை. மசூதியில் பாபா உட்கார்ந்து உண்மையே பேசி வந்தார். அவர் வார்த்தைகள் எல்லாம் உண்மையாக மாறின. இன்றும் அவருடைய புத்திமதிகள் கைமேல் பயனளிக்கின்றது.

வெகு தூரத்திலிருந்து பக்தர்களை தன்னுடைய சமாதிக்கு அழைத்து தரிசனம் கொடுக்கின்றார். சமாதியை தரிசித்த பக்தர்கள் அவர் உயிருடன் இருப்பதாகவே உணருகின்றார்கள்.

## பாபாவின் உறுதி மொழிகள்

1. பக்தர்களின் எண்ணங்களை நிறைவேற்றுவதில் என்னுடைய தன்மை மிகச் சுலபமானது. எவ்வளவு அதிகமாக என்னை நேசிக்கின்றார்களோ அவ்வளவுக்கவ்வளவு பயனடைகின்றார்கள். என் வார்த்தையை கவனித்தால் கண்டிப்பாக உன் எண்ணங்கள் கைகூடும்.

2. நீ எதை விரும்பிக் கேட்டாலும் அந்த விருப்பம் நியாயமாக இருந்தால் கண்டிப்பாக அதை நிறைவேற்றுவேன். என்னுடைய எலும்பும் உனக்கு பதில் பேசும்.

3. உண்மையே பேசி அதைக் கடைபிடித்தால் நான் சரியான சமயத்தில் காப்பாற்ற முன்வருவேன்.

4. உண்மையே உன் உருவமானால் என்னுடைய தலையை கொடுத்தாவது உன் கஷ்டங்களைப் போக்கி வைப்பேன். உன் இதயத்தில் உட்கார்ந்து உன்னை கவனித்து உன்னையே பார்த்து வருவேன்.

5. உன் விருப்பங்கள் எல்லாம் என்னிடம் உள்ளது. எதை வேண்டுமானாலும் கேள், ஆனால் நியாயமானதாக இருக்கட்டும். அது எவ்வளவு பெரியதாக இருந்தாலும் எல்லா வகைகளிலும் முடித்துத் தருவேன். எப்படி என்று கேட்காதே. உன்னால் அறிந்து கொள்ள முடியாத வகையில், கண்டுபிடிக்க முடியாத வகையில் செய்து முடிப்பேன்.

6. சீரடியின் மண்ணில் கால் வைத்தவுடன் உன் கஷ்டங்கள் எல்லாம் தீரும்.

7. என் பக்தர்களின் வீட்டில் எல்லாம் நிறைந்திருக்கும். வேண்டியது இல்லாமலிருக்காது.

8. பொய் பேசுபவனுக்கும், ஏமாற்றுபவனுக்கும் என்னுடைய பதில் காரமாக இருக்கும்.

9. உன்னுடைய சுமைகளை என்மீது இறக்கி வைத்தால் நான் சுமக்க தயாராக இருக்கின்றேன்.

10. என்னை நோக்கி நீ ஆராதித்தால் நான் உன்னை ரக்ஷிப்பேன்.

11. என்னுடைய சமாதியில் முதல்படியில் கால் வைத்தவுடன் உன்னுடைய பூர்வ கர்ம பலன்கள், பாவங்கள் தொலைகின்றன.

பரோவாக் என்கிறவர் அவருடைய சித்தப்பாவால் ஏமாற்றப்பட்டு அவருடைய மூதாதையர் சொத்துக்களை இழந்து விட்டார். பரோவாக், பாபாவை தரிசித்து எல்லா கதைகளையும் சொல்லி அழுதார். அவருடைய எண்ணங்களை, அதாவது லக்ஷாதிபதியாக வேண்டும் என்ற எண்ணத்தை பாபா அறிந்து அவரை ஆசீர்வதித்து அல்லா ஆசீர்வதிப்பார், வருத்தப்படாதே என்று சொன்னார். அம்மாதிரியாக பணக்காரன் ஆவதற்கு அறிகுறி ஒன்றும் தோன்றாமல் பரோவாக் விழித்தார். ஒருநாள் பரோவாக் சித்தப்பாவிடம் ஒரு பெரிய பணக்காரன் வந்து பரோக்கை தன்னுடன் அனுப்பிவைக்கும்படி வேண்டினான். சித்தப்பாவும் கைகழுவிவிட்டார். பிறகு பாபா அவருடைய கருணையை காண்பித்தார். முதல் வருடம் பரோவாக் அந்த பணக்காரனின் கரும்பு தோட்டத்தில் மிக்க கவனமாகவும் உற்சாகமாகவும், கடினமாக உழைத்து இரண்டு லட்சம் லாபத்தை விவசாயத்தில் காண்பித்தார். சந்தோஷப்பட்ட அந்தப் பணக்காரன், பரோவாக்கின் உழைப்பை மெச்சி பாதி லாபத்தை, ஒரு லக்ஷரூபாயை, பரோவாக்கிற்கு கொடுத்தார். இம்மாதிரியாக பரோவாக் மிக்க பணக்காரராகி இப்பொழுது அவருக்கு வீடு இல்லாத ராஜ்யமே இல்லாததாகிவிட்டது.

ஒரு பூனாவாசி, மிக்க ஏழ்மை நிலையில் அவதிப்பட்டு பாபாவை தரிசித்தார். ஒரு பெரிய குடும்பத்தை நிர்வகிக்க முடியாமல் திணறினார். பாபா சொன்னார், இன்னும் பன்னிரண்டு மாதங்களில் நல்ல வாழ்க்கையை தொடங்குவாய் என்று ஆசீர்வதித்தார். பதினோரு மாதங்கள் மிக்க கஷ்ட ஜீவனம் நடத்தி வந்து பாபா சொன்னதை நினைத்து இன்னும் ஒரு மாதத்தில் எப்படியாகப் போகிறது என்று நினைத்து வருத்தமுற்றார். ஆச்சரியமாக, ஒரு பெரும் பணக்காரர்,

அந்த மனிதருக்கு தன் பெண்ணை கல்யாணம் செய்து வைத்து நிறைய ஆஸ்தியையும் உடன் அளித்தார். ஆக எல்லா கஷ்டங்களும் அந்த பூனாவாசிக்கு பாபா சொன்னது போல் மறைந்து விட்டது.

ஜோக் என்கிற பக்தர் பாபாவிற்கு ஆரத்தி செய்து வந்தார். ஒரு சமயம் ஒருவருக்கு ரூ. 1400 கடனளித்தார். அதை 14 மாதங்களில் தருவதாக அந்த அவரங்காபாத்வாசி எழுதி கொடுத்திருந்தார். ஆனால் அவ்வாறு திருப்பித் தரவில்லை. ஜோக் எழுதிக்கேட்டும் ஒன்றும் பதிலில்லை. ஜோக்கிற்கு மிக்க விரக்தியேற்பட்டு, கோர்ட்டில் கேஸ் போட்டு பணத்தை வசூலிக்க விரும்பினார். பாபாவை அதற்காக அனுமதி கேட்டபோது, பாபா கோர்ட்டில் கேஸ் போட வேண்டாம். பேசாமல் இரு. அதே மனிதன், தானாகவே கொண்டுவந்து கொடுப்பான் என்று சொல்லிவிட்டார். ஜோக் நிறைய நாள் காத்திருந்தும் பணம் வராததால் மிக்க வெறுப்புற்று, பாபா வார்த்தையால் ஏமாந்ததாக நினைத்தபோது, அதே மனிதன் திடீரென்று ஜோக் எதிரில் வந்து இரண்டு மடங்கு பணத்தை திருப்பிக் கொடுத்தார்.

இரண்டு நண்பர்கள் சீரடிக்குக் கிளம்பினார்கள். ரயில்வே ஸ்டேஷனில் பிளாட்பாரத்தில் பாபா முகம்மதியர் என்று வாதம் புரிந்தார்கள். பிறகு சீரடி வந்து சேர்ந்து மசூதியின் படியில் கால் வைத்ததும் பாபா உரக்க சத்தம் போட்டு "இங்கே வாருங்கள்" என்று கூப்பிட்டார். இருவரும் நடுங்கிக் கொண்டே வந்து பாபாவிடம் வணங்கினார்கள் "இதோ பாருங்கள், நீங்கள் என்னுடைய மதத்தைப் பற்றி பிளாட்பாரத்தில் விவாதித்தீர்கள் அல்லவா, நான் முகம்மதியனல்ல, நீங்கள் விவாதித்ததெல்லாம் எனக்குத் தெரியும்" என்று கூறினார். நண்பர்கள் இருவரும் மௌனமாகி, பாபா நிஜமாகவே அந்தர்யாமி, அவருக்கு தெரியாதது ஒன்றும் இல்லை என்று அறிந்து கொண்டு பாபாவிடம் மன்னிப்பு கோரினார்கள்.

கங்காதரராவ் என்பவர் காகா மஹராஜனியின் சகோதரர். ஒரு சமயம் தீராத வயிற்று வலியால் மிகவும் அவதிப்பட்டார். அநேக வருடங்களாக எந்த மருந்துக்கும் வலி குறையவேயில்லை. பாபாவின்

மகிமையை அறிந்து பாபாவிடம் சென்று வணங்கி வலியை போக்கும்படி வேண்டினார். பாபாவும் மனதிறங்கி "குணமாகும்" என்று சொல்லிய மாத்திரத்திலேயே வலி முழுக்க மறைந்து குணமானார். பாபாவின் வார்த்தையே முழுகுணமாக்கிவிட்டது.

## திரு. பிரதான்

பாபாவின் பிரதான பக்தர்களின் அனுபவங்களை விவரித்தால் பாபாவின் லீலைகளை முழுக்க உணரலாம். முதலில் பிரதான் அவர்களின் அனுபவத்தை கவனிப்போம்.

ஹைகோர்ட் அட்வகேட்டான திரு. பிரதான் நல்ல வசதியுள்ள குடும்பத்தில் பிறந்தவர். நானாசாகேப் சந்தோர்க்கரின் தூண்டுதலால் பாபாவின் பக்தரானார்.

முதல் முதலில் சீரடிக்குப் போகும்போது 4 சவரன்களும், சில நோட்டுகளும் பாபாவிற்கு தக்ஷிணைக்காக 20 வெள்ளி ரூபாயுமாக வைத்துக் கொண்டு, பாபாவிடம் சென்றார். அப்பொழுது பாபா லெண்டித் தோட்டத்திலிருந்து கொண்டு பிரதானை வரவேற்றார். அவருடன் சாத்தேவும், நூல்கரும் உடனிருந்தார்கள். பாபாவுக்கு மாலைகள், பழங்கள் முதலியவைகளை வைத்து நமஸ்கரித்தார். உடனே பாபா தக்ஷிணைக்காக கையேந்தினார்.

தக்ஷிணைக்காக கொண்டு வந்த வெள்ளி ரூபாய்களை விட்டு, சவரனாக ஒன்றை பாபாவின் கையில் வைத்தார். பாபா அருகிலிருந்தவரிடம் "இது என்ன" என்றார். அது சவரன் என்று சொல்லப்பட்டது. "அதன் மதிப்பென்ன?" என்று பாபா கேட்டார். நூல்கர் "15 ரூபாய்" என்றார். "இது எனக்கு வேண்டாம்" என்று திருப்பி கொடுத்து "15 ரூபாய் கொடு என்றார்". ஆக பிரதான் ஏற்கனவே முடிவு செய்த தொகையை தட்சிணையாகப் பெற்றார். பாபா ஸ்பரிசித்துக் கொடுத்த சவரனைப் பத்திரமாக பிரதான் தனியாக வைத்துக் கொண்டார். பிரதானை 8 நாட்கள் சீரடியில் தங்க வைத்தார். கடைசி நாளன்று பிரதான் பாபாவிற்கு ஒரு விசேஷ விருந்து ஏற்பாடு செய்து பாபாவை அன்போடு அழைத்தார். பாபா வருவதாகச் சொல்லி

விருந்தில் முக்கியமாக பூர்ண போளி இருக்க வேண்டுமென்று சொன்னார். விருந்து தயாராகி இலைகள் பரிமாறப்பட்டு எல்லோரும் அமர்ந்தனர். பாபாவிற்கு மையமாக இலைபோட்டு அதில் எல்லாவகை பதார்த்தங்களையும் நிரப்பி பாபாவின் வருகைக்கு காத்திருந்தபோது ஒரு காக்கை பறந்து வந்து பாபாவிற்காக வைக்கப்பட்ட இலையிலிருந்து பூர்ணபோளியை மட்டும் எடுத்துக் கொண்டு பறந்து விட்டது. ஆக பாபாவே காக்கை ரூபத்தில் வந்து அவர் விரும்பி கேட்ட பூர்ணபோளியை மட்டும் எடுத்துச் சென்று விட்டார் என்று எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள். அன்று மத்தியானம் பாபா பிரதானிடம் ஒரு பக்கத்து கை கால்களைத் தொட்டு அதிகமாய் வலிக்கிறது என்றும், ஆனால் இது இரண்டு அல்லது நான்கு நாட்களில் சரியாய்விடும் என்று சொன்னார். ஆனால் பாபா சௌக்கியமாய் தான் காணப்பட்டார். பிரதான் பாபாவின் உத்திரவு பெற்று தன் வீடுபோய் சேர்ந்ததும், தன் தாயார் பாரிஸ வாயுவினால் பீடிக்கப்பட்டு அவதிப்படுவதைப் பார்த்து, பாபா இதைத்தான் தனக்கு சீரடியில் சொல்லியிருக்க வேண்டுமென்று கண்டு கொண்டார். உடனே பாபாவின் பாத தீர்த்தமும், உதியும் உபயோகித்து அன்றிரவே முழுக்கவே குணமடைந்தார்கள்.

பாபா ஒரு வியாழக்கிழமை, எல்லோரையும் அனுப்பிவிட்டு தனியாக ஒரு பாத்திரத்தில் சமையல் செய்து கொண்டிருந்தார். ஆனால் பிரதான் தன்னுடைய குமாரர்களுடன் தைரியமாக பாபாவிடம் சென்றார். பாபா, கோபப்படாமல் வரவேற்று ஏதோ பாட்டொன்று பாபா முணுமுணுப்பதை பிரதான் அறிந்தார். அருகில் சென்று கவனித்தபோது, அந்த வார்த்தை ஹரிபூவா என்னும் பிரதானின் குலகுரு பிரதானுக்கு உபதேசித்த வார்த்தைகளாக இருந்ததை அறிந்து, பிரதானுக்கு உள்ளம் குளிர்ந்தது, கண்களில் தாரை தாரையாக கண்ணீர் பெருகிற்று.

ஒருநாள் மத்தியானம் பாபா பிரதானை லெண்டித் தோட்டத்திற்கு அழைத்துச் சென்று சிறு குழிகள் தோண்டி சில தான்யங்களை பிரதானிடம் கொடுத்து, அந்த குழியில் விதைத்து,

மண்மூடி, தண்ணீர் விடும்படியாக செய்தார். இதே தோட்டத்தை ஏழு வருடங்களுக்குப் பிறகு பிரதான் வாங்கி சமஸ்தானுக்கு அளித்துவிட்டார்.

ஒரு நாள் தாஸ்கணு பாபாவின் பேரில் சிறந்த கீர்த்தனைகள் சாந்தாகுடூரில் பாடினார். அவரை பிரதான் தன்வீட்டிற்கு வரும்படி பிரார்த்திக்க அவரும் நானாசந்தோர்க்கரவர்களும் பஜனை கோஷ்டியாக பிரதான் வீட்டிற்கு வந்து இரவு முழுவதும் பாபாவின் பேரில் புதிய கீர்த்தனைகள் பாடினார்கள். அப்பொழுது பிரதானின் முன் பாபா பிரத்தியட்சமாகி, சீரடி வரும்படி சைகை செய்யவே, பிரதானின் மனைவி உடனே சீரடி செல்லவேண்டுமென்று வற்புறுத்தினாள். நிறைமாத கர்ப்பிணியான மைத்துனியுடன் பிரதான் மனைவியுடன் சீரடிக்குப் புறப்பட்டார். கோபர்கான் ஸ்டேஷனில் நானா வந்து வரவேற்கக்கூடும் என்று பிரதானின் மனைவி கூறினாள். அதே மாதிரியாக பாபாவிடம் நானா உத்தரவு கேட்டபோது பாபா உடனே உத்தரவளித்தார். நானாவிற்கு ஒன்றுவிட்டு ஒருநாள் ஜுரம் வந்து கஷ்டப்பட்டார். ஆக அந்தநாள் ஜுரம் வரும் முறையாதலால் தீக்ஷிதர் நானாவிற்கு பதிலாக தான் போவதாக பாபாவிடம் உத்திரவு கேட்டார். நானாவையே போகும்படி சொன்னார். ஆனால், அன்று ஜுரமே வராமல் பிரதான் குடும்பத்தினரை வரவேற்று கோதாவரியில் ஸ்நானம் செய்து சீரடிக்கு அழைத்து வந்தார். அன்று முதல் நானாவிற்கு ஜுரமே வரவில்லை.

சீரடிக்குச் சென்று பாபாவை நமஸ்கரித்தவுடன், பிரதான் மனைவிக்கு பாபாவிடம் மிகவும் ப்ரீதிவுண்டாகி, மெய்மறந்து கண்ணீர் சோர வணங்கினாள். அப்பொழுது பாபா சாமாவிடம் “என் பாபுவின் தாயார் இவர்கள்தான்” என்றார். சந்தோர்க்கர் கர்ப்பிணியாக இருந்த பிரதானின் மைத்துணியை காண்பித்து “இவர்கள்தானே” என்றார். பாபா “அல்ல, இது இவர்கள்” என்று பிரதானின் மனைவியைக் காண்பித்தார். அப்பொழுது இருந்து 12 மாதங்களில் பிரதானின் மனைவி ஒரு ஆண் குழந்தையை பாபா கூறியபடி பெற்று எடுத்தாள். அந்த குழந்தைக்கு பாபா கூறியபடி பாபு என்று பெயரிட்டார்கள்.

ஒருநாள் பிரதான் சீரடியைவிட்டு போகலாம் என்றிருந்த போது, ஓயாமல் மழை பெய்து காற்றும், மின்னலும் சுழன்று பயங்கரமாக அடித்தன. அப்பொழுது பாபா வெளியே சென்று "ஓ கடவுளே , மழையை நிறுத்தும் என் குழந்தைகள் வீட்டிற்கு போக வேண்டும்." என்று உரக்க சத்தமிட்டார். உடனே மழையும், காற்றும் படிப்படியாக நின்று விட்டன. எல்லோரும் அவரவர் வீட்டிற்கு திரும்பினார்கள்.

பிரதான் குடும்ப வழக்கப்படி தாய் வீட்டிலிருந்து குழந்தையுடன் வந்தால், புடவையின் முந்தானையில் ஒரு தேங்காய், பழம், கோதுமை முதலியவற்றை முடிபோட்டு எடுத்துப் போய், மாமனார் எதிரிலோ அல்லது சுவாமிகளின் முன்போ அவிழ்த்து சாமான்களை வைப்பது வழக்கம். அம்மாதிரியாகவே பிரதானின் மனைவி குழந்தையுடன் பாபாமுன் சென்று முடியை அவிழ்த்து சாமான்களை பாபாவிடம் கொடுத்தாள். பாபா சந்தோஷமாக வாங்கிக் கொண்டு குழந்தையை பார்த்து பாபு "நீ எங்கே போயிருந்தாய் என்மீது கோபமா?" என்று கொஞ்சினார். தன் ஜோபியிலிருந்து 2 ரூபாய்க்கு மிட்டாய் வாங்கி வரச் செய்து எல்லோருக்கும் விநியோகித்தார்.

"பாபுவின் பங்களா அழகாயும் தயாராகவும் இருக்கிறது" என்று பாபா சொன்னார். அதேமாதிரியாக பிரதான் தான் வசித்து வந்த பங்களாவை பாபுவின் பேரில் வாங்கி ரிஜிஸ்தர் செய்தார்.

பாபுவின் முதல் பிறந்த நாளைக் கொண்டாட பிரதான் சீரடியில் ஒரு வியாழக்கிழமை விருந்து கொடுத்தார். ஆனால் பாலா சாகேப் வியாழக்கிழமை விரதம் இருப்பதால் விருந்தில் கலந்து கொள்ளவில்லை. பாபா பாலாசாகேப்பைக் கூப்பிட்டு "பிரதான் வீட்டில் சாப்பிட்டாயா?" என்றார். பாலாசாகேப் அன்று வியாழக்கிழமையாதலால் சாப்பிடவில்லை என்றார். பாபா "யாரை சந்தோஷப்படுத்த நீ இம்மாதிரி விரதம் அனுஷ்டிக்கிறாய்?" என்றார். பாபாவை சந்தோஷப்படுத்தவே என்று சாகேப் பதிலளித்தார். பாபா "அப்படியென்றால் இப்பொழுது பிரதான் வீட்டிற்குச் சென்று சாப்பிடு" என்றார். அம்மாதிரியாகவே பிரதானிடம் வந்து பாபாவின் உத்தரவைச் சொல்லி பாபா சாகேப் விருந்து சாப்பிட்டார்.

பிரதானின் மனைவியின் கனவில் பாபா தோன்றி பாபாவின் பாத பூஜை பண்ணுவதாக தோற்றமளித்தார். சந்தோர்க்கரிடம் இதை தெரிவித்த போது தினமும் பாபாவின் பாதத்திற்கு பூஜை செய்ய பாபா உத்திரவு அளித்திருப்பதாகவும் இரண்டு பாதங்கள் செய்து பாபாவின் ஆசீர்வாதத்துடன் ஊருக்கு எடுத்துச் செல்ல யோசனை தெரிவித்தார். அம்மாதிரியாகவே பாபா தன் இரண்டு பாதங்களை நீட்டி பிரதான் மனைவியினால் கொண்டு வரப்பட்ட பாதங்கள் மீது வைத்து ஆசீர்வதித்து கொடுத்தார். பிரதான் மனைவி, பாபாவை வணங்கி பாதங்களை எடுத்தபோது, பாபா "தாயார் என் பாதங்களை வெட்டி எடுத்துக் கொண்டு போய் விட்டாள்" என்று கூறி சிரித்தார்.

பிரதானின் குழந்தைகள் எல்லோருக்கும் அம்மை வார்த்தது. பாபுவின் நிலைமை மிகவும் மோசமாகிவிடவே, பிரதானின் மனைவி பாபாவை நினைத்து அழுதபோது பாபா எதிரில் தோன்றி நீ ஏன் அழுகிறாய்! குழந்தை சௌக்கியமாகி விட்டான். காலையில் அவனுக்கு நல்ல ஆகாரம் கொடு என்று சொல்லி மறைந்தார். டாக்டர் வந்தபோது குழந்தை விளையாடுவதைப் பார்த்து ஆச்சரியமடைந்தார். ஆகாரம் ஒன்றும் கொடுக்க வேண்டாமென்று டாக்டர் சொன்னார். ஆனால் பாபா கூறியபடி குழந்தை எது கொடுத்தாலும் சாப்பிட்டு ஜீரணமாகியது.

ஒரு நாள் இரவு பாபா பிரதானின் மனைவியின் கனவில் தோன்றி "நீ என்ன தூங்குகிறாயா, எழுந்திரு உன் மகனுக்கு வலி வரும்" என்று கூறி மறைந்தார். எழுந்து பையனைப் பார்த்த போது ஜுரமோ, வலியோ இல்லை, ஆனாலும் பாபா எச்சரித்து விட்டதால் வெந்நீர் முதலியவைகளுடன் தயாராகக் காத்திருந்தாள். சுமார் 2 மணிக்கு குழந்தை தூக்கத்திலிருந்து எழுந்தான், உடனே வலி வந்தது. ஆக முன்னேற்பாடாக பாபா சொல்படி தயாராக இருந்ததால் வலியின் உக்கிரத்தை கட்டுப்படுத்த முடிந்தது.

இதே மாதிரியாக மசூதியில் ஆரத்தி நடக்கும்பொழுது பாபா பிரதானின் மனைவியைக் கூப்பிட்டு "உடனே வீட்டிற்குச் செல்" என்றார். அவ்வாறு போனபோது குழந்தை அழுது கொண்டிருந்ததைக்கண்டு பாபா இதற்காகவே அனுப்பி வைத்தார்

என்று தெரிந்து கொண்டாள். மறுபடியும் குழந்தையை சமாதானப்படுத்தி மசூதிக்குச் சென்றபோது இப்பொழுது "உன் பூஜையைச்செய்" என்றார்.

ஒருதடவை டைபாய்ட் ஜுரத்தில் விழுந்து எழுந்த குழந்தையை சீரடிக்குக் கொண்டு போகக் கூடாது என்று டாக்டர் சொன்னார். இதை மீறி பிரதானின் மனைவி அழைத்துச் சென்றாள். ஆனால் வண்டியில் ஜுரம் வந்து அசௌக்கியமாக இருக்கும் குழந்தையை பிரயாணத்தில் அழைத்து வந்ததால், ஜனங்கள் பரிகசிப்பார்கள் என்று நினைத்து, பிரதானின் மனைவி கவலையுற்றாள். சீரடியில் பாபாவிடம் வந்தவுடன் குழந்தை ஜுரமில்லாமல் நேராக நின்றான். பாபா பிரதானின் மனைவியைப் பார்த்து இப்பொழுது ஜனங்கள் பரிகசிக்க மாட்டார்கள் என்று சொன்னார்.

பாபா மகா சமாதியடைந்த இரவு (18-10-1918) பிரதானின் மனைவியின் கனவில் "கடைசி நிலைமையில் பாபா இருப்பதாகவும், உடனே பாபா இறந்து போகும் தருணத்திலிருக்கிறார் என்று பிரதான் மனைவி பாபாவைப் பற்றி சொன்னாள். அதற்கு பிரதான், மகான்கள் இறந்து விடுவதாக சொல்லக்கூடாது. சமாதியடைகிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்" என்று பதில் சொன்னார். உடனே விழித்துக் கொண்டு பிரதானிடம் மிக விசனத்துடன் கனவைப் பற்றிச் சொன்னாள். மறுநாள் அன்னா சஞ்சரிக்கினிடமிருந்து வந்த கடிதத்தில் 18-10-1918 மாலை 3 மணிக்கு சமாதியடைந்துவிட்டதாக கண்டிருந்தது.

அடுத்தநாள் இரவு பாபா 3 ரூபாய் கொடுத்த விதமாக பிரதான் மனைவி கனவு கண்டாள். உடனே விழித்துக் கொண்டு காசு வாங்குவதாகக் கனவு காண்பது நல்லதல்ல என்று விசனப்பட்டு மறுபடியும் தூங்கி விட்டாள். திரும்பவும் பாபா கனவில் தோன்றி "நீ அதை வாங்கிக் கொண்டு, நீ பெட்டியில் சேர்த்து வைத்திருக்கின்ற காசு எல்லாவற்றையும் என்னிடம் கொடு என்றார், அவ்வாறே அவள் வைத்திருந்த பணம் எல்லாவற்றையும் பாபாவின் கிரியைகளுக்காக அனுப்பிவிட்டாள்.

## திரு. சாத்தே

டெபுடி கலெக்டர் திரு. சாத்தே 44 வயதில் மனைவியை இழந்து ஒரே ஒரு பெண் குழந்தையுடன் பூனாவில் வசித்து வந்தார். அவருடைய நண்பர்கள் அவரை மறு கல்யாணம் செய்து கொள்ளும்படியும், அப்படி செய்தால் ஆண் சந்ததி ஏற்படும் என்றும் வற்புறுத்தினார்கள். சுமார் 50 வயதில் கல்யாணம் செய்து கொண்டாலும் ஆண் குழந்தை பிறக்கும் என்று என்ன நிச்சயம். ஆக யாராவது ஒரு பெரிய மகான் அவ்வாறு ஆசீர்வதித்தால் மறு கல்யாணம் செய்து கொள்வதாகச் சொன்னார். பர்வே என்பவர் சாத்தேவை அவ்வாறு ஆசீர்வாதம் பெறுவதற்கு சீரடிக்கு அழைத்துச் சென்றார். பாபாவை நமஸ்கரித்தவுடன் பர்வே பாபாவிடம் "கலெக்டர் சாஹெப்புக்கு ஆண் சந்ததியில்லை" என்று கூறினார். பாபா சிரித்து "கல்யாணம் செய்து கொண்டால் அவருக்கு ஆண் குழந்தை பிறக்கும்" என்று ஆசீர்வதித்தார். ஆகவே எல்லா நண்பர்களும் இப்பொழுது வற்புறுத்த ஆரம்பித்தார்கள். ஆமதாபாத் என்னும் இடத்தில் வேலையாயிருந்த போது தாதா கேல்கர் என்பவர் தனக்கு ஒருமகள் இருப்பதாகவும், அவளுக்கு தகுந்த மாப்பிள்ளை ஆமதாபாத்தில் யாராவது இருக்கின்றார்களா என்று கடிதம் சாத்தேவிற்கு எழுதினார். சாத்தே தன்னைத்தான் கேல்கர் மாப்பிள்ளையாக குறிப்பிடுகிறார் என்று அறிந்து கொண்டு பாபாவின் சக்தியை நினைத்து உருகி கேல்கருக்கு வேறு மாப்பிள்ளை அவ்வளவு தூரத்தில் கிடைப்பது அரிது என்றும், தன்னை அப்படி நினைத்திருந்தால் பெண்ணை அழைத்துக் கொண்டு சீரடிக்குச் சென்று பாபாவின் அனுமதி கிடைத்தால் தான் உடன்படுவதாக எழுதினார். அவ்வாறே கேல்கர் சீரடிக்கு தன் பெண்ணை அழைத்துச் சென்று சாமாவின் மூலமாய் பாபாவின் சம்மதத்திற்கு உத்திரவு கேட்டார். உடனே பாபா ஆமதாபாத்திற்கு சாத்தேவிடம் பெண்ணை உடனே அனுப்பும்படி உத்திரவிட்டார். ஆக எல்லோரும் சந்தோஷப்பட்டு கல்யாணத்தை சிறப்பாக முடித்து சாத்தே அநேக குழந்தைகளைப் பெற்றார்.

சாத்தே சீரடியிலிருந்து ஒரு கமிட்டி கூட்டத்திற்கு கலெக்டர், கமிஷனர்களுடன் கலந்து கொள்ள மண்மாட் செல்ல பாபாவின் உத்திரவைக் கேட்டார். பாபா உத்திரவளிக்கவில்லை. அதிகமாக வற்புறுத்தியபோது, சாதேவை ஒரு அறையில் போட்டு பூட்டச் சொன்னார். சாத்தேவிற்கு நடுக்கமாகி கமிஷனர், கலெக்டர் முதலிய உத்தியோகஸ்தர்கள் காத்திருப்பார்களே, தனக்கு உத்தியோகத்திற்கு சீட்டு கிழிந்து விடுமே என்று பயந்து நடுங்கி கவலையில் ஆழ்ந்தார். மூன்று நாட்களுக்கு அனுமதிகிட்டாமல் 4வது நாள் மிகவும் பயத்துடன் நிச்சயமாக வேலைக்கு குந்தகம் ஏற்பட்டுவிட்டது என்று நினைத்து மண்மாட்டிற்கு சென்றார். ஆனால் பாபாவிற்கு தெரியாததொன்று உண்டா? அவ்வாறாக கலெக்டர், கமிஷனர் வராமல் மீட்டிங் தேதியை தள்ளிப் போட்டு வைத்தனர். சாத்தே, பாபாவின் அமானுஷ்ய லீலைகளை அறிந்து புகழ்ந்தார். பாபாவுடன் சாவகாசமாய் சில நாட்கள் தங்கும் பாக்கியம் கிடைத்தது. சீரடியில் தங்கினதால் கலையாயிருந்ததே ஒழிய வேறு எவ்வித நஷ்டமும் ஏற்படவில்லை.

சாத்தேவிற்கு வரவேண்டிய பதவிகள் சரியாய் வராததால் வேலையை ராஜினாமா செய்வதாக பாபாவிடம் சொன்னார். பாபா தடுத்து உயர்ந்த ஸ்தானம் வரும் என்று சொன்னார். சில நாட்களில், இவருக்கு மேலேயிருந்த உத்தியோகஸ்தர்களை கீழே தள்ளி உயர்ந்த ஸ்தானத்திற்கு லாண்ட்ரிக்காட்ஸ் ஆக்டிங் சூப்பரின்டெண்ட்டாக பதவி உயர்வு கிடைத்தது.

இதே மாதிரியாக பென்ஷன் விஷயத்திலும் 50 ரூபாய் குறைவாக கணக்கிட்டதால், பாபாவிடம் அம்மாதிரி குறைவாக கொடுத்தால் முழு பென்ஷனையும் வேண்டாமென்று சொல்லிவிடுவதாக சொன்னார். பாபா 50 ரூபாய் கிடைக்கும் என்று சொன்னார். அம்மாதிரியாகவே அப்பீலில் முழுத்தொகையும் கிடைத்தது.

பாபாவிடம் அடிபடாத பக்தர் தான் ஒருவன்தான் என்று சாத்தே பெருமை பாராட்டிக் கொண்டார். சாமா இதைப் பற்றி பாபாவிடம் கேட்டபோது பாபா "நான் ஏன் அவரை அடிக்க வேண்டும். அவருடைய

மாமனார் இருக்கின்றார்” என்றார். அதாவது சத்தேவின் மாமனார் அடிக்கடி அதிகமாக பணம் வாங்கி சாத்தேவிற்கு அபராதமாக செலவு வைக்கின்றார் என்பதாகும்.

சீரடியில் 20 ஏக்கரில் விளைச்சல் நிலம் வாங்க, மாமனாரிடம் 1200 ரூபாய் சாத்தே கொடுத்தார். அதே மாதிரியாக நிலமும் வாங்கப்பட்டு விட்டது. சாத்தே அதைப் பார்க்கப் போக வேண்டுமென்று மாமனாரை கேட்டபோது அவரது சகோதரன் மகன் மனைவி (விதவை) வீட்டிலிருப்பதால் தான் வாங்கியது அவளுக்கு தெரிந்துவிடுமென்று, போய் பார்க்க வேண்டாமென்றார். சாத்தே பிடிவாதமாக போக வேண்டுமென்று தத்தே படேலின் வண்டியை வரவழைத்து மனைவியைக் கூப்பிட்டார். முதலில் வருவதாக சொன்னவள், தன் தகப்பனாரின் பேச்சைக் கேட்டு வரவில்லை என்று சொல்லவே, கோபம் வந்த சாத்தே, வண்டிக்காரனிடமிருந்து சாட்டையை வாங்கி, மனைவியை அடிக்க ஓங்கினார். அப்போது மேகா ஓடிவந்து பாபா சாத்தேவை உடனே அழைப்பதாகக் கூறினார். சாத்தேவும் பாபாவை சென்று பார்த்தவுடன், பாபா, உனக்கிருக்கிற நிலம் அங்கேயே இருக்கிறது. அதைப்போய் பார்க்க வேண்டிய அவசியமென்ன? என்று கேட்டார் சாத்தேவிற்கு வெட்கமாகிவிட்டது.

ஒருநாள் ஒரு நடத்தை கெட்டவளின் வீட்டிற்கு போக சாத்தே நினைத்து அவ்வாறே சென்று அவளுடன் பேசிக் கொண்டிருக்கின்றபோது, கெட்ட எண்ணங்கள் மனதிலுதித்து அவ்வாறு செய்கையில் இறங்கின போது, கதவைத் திறந்து பாபா தோன்றி நீ இப்போது என்ன நல்ல விஷயம் செய்யப் போகின்றாய் என்று கேட்டு மறைந்தார். சாத்தேவிற்கு உடம்பு வியர்வையால் சில்லிட்டு, பாபாவை நினைத்து அழுது, மனம்திருந்தி அம்மாதிரி கெட்ட காரியம் செய்வதை தடுத்த பாபாவின் பாதங்களில் ஓடி வந்து விழுந்தார்.

சீரடியில் முதன் முதலில் தோன்றிய வாடா சாத்தே அவர்கள் கட்டியது தான். பாபா தபசு செய்து வந்த வேப்பமரத்துடன் கூடிய இடத்தில் சாத்தே கட்டிடம் கட்ட ஆரம்பித்தபோது, சுவர் எழும்புவதற்கு தடையாக வேப்பமரத்தின் கிளைகள் பாய்ந்திருந்தன. அதை

வெட்டுவதற்கு பயந்து பாபாவிடம் முறையிட்டபோது, பாபா பிரசவப்பையில் குழந்தை குறுக்காக வந்து விட்டால் தாயைக் காப்பாற்ற குழந்தையை வெட்டி தான் எடுக்க வேண்டும். ஆகவே கட்டிடத்திற்கு எவ்வளவு தடங்கல் இருக்கிறதோ அந்த அளவிற்கு கிளைகளை வெட்டவும் என்று சொன்னார். அவ்வாறு பாபா சொல்லியும் எவருக்கும் வெட்டுவது பயங்கரமானதும், அடாத்துமாகவும் தோன்றியது. பிறகு பாபவே அந்த தடங்கல் கிளைகளை வெட்டி விட்டார்.

சாத்தே மகப்பேறுவிற்காகத்தான் இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டார். ஆனால் முதல் இரண்டு பிரசவங்களும் பெண்களாகவே பிறந்தது. பிறகு அவரது மாமனார் கேல்கர் பாபாவிடம் முறையிட்டபோது, மகன் பிறப்பான் என்று உறுதியளித்தார். அதே மாதிரியாக பையன் பிறந்து சாத்தே சந்தோஷமடைந்தார்.

சாத்தே பென்ஷன் பெற்று வந்தபோது அவர் அவசிய சிலவிற்காக சில நகைகளை விற்றார். அதே சமயத்தில் பாபா அவரது மாமனாரிடம் அந்த புத்தியில்லாத சாகேப் என் மகளின் நகையை ஏன் விற்றான் என்றார். தாதாவிற்கு இது புரிந்து பாபாவின் அதிருப்தியை சாத்தேவிற்கு தெரிவித்தார்.

ராஜபூர் என்னுமிடத்திற்கு அருகாமையில் தோபேஷ்பர் என்னுமிடத்தைச் சேர்ந்த காகா மகராஜ் என்பவர் ஒரு பெரிய பிரபலமான மகான். அவரை ஒரு நாள் சாத்தே சென்று வணங்கி தன் வீட்டிற்கு வரும்படியாக வேண்டினார். வரமுடியாமலிருக்கிறது என்று மனக்கஷ்டத்துடன் மகராஜ் தெரிவித்தார். ஆனால் மத்தியானம் சாதேவின் ஆபீஸிற்கு ஆள்மூலமாக மகராஜ் சாத்தே வீட்டிற்கு உடனே வருவதாக அறிவித்தார். சாத்தேவும் டாங்கா வண்டியுடன் சென்று அழைத்து வந்தார். வீட்டிற்கு வந்ததும் காலையில் சொன்னதை திடீரென்று மாற்றியது எப்படி என்று சாத்தே மகராஜை வினவினார். சுவரில் மாட்டப்பட்டிருந்த பாபாவின் படத்தை சுட்டிக் காண்பித்து "நான் உன்னை வந்து பார்க்கிறவரையில் அவர் என்னை தங்கவிடவில்லை" என்று சொன்னார்.

காகாமகராஜ் அவ்வாறு வந்து ஆசீர்வதித்து விடைபெறும் பொழுது சாத்தேவின் மருமகன் ஹரிகங்காதர ஜோஷி என்பரைப் பார்த்து பாபாவிடம் சென்று சேவித்து அருள் பெரும்படி உபதேசித்தார். அம்மாதிரியாகவே சில மாதங்கள் கழித்து ஹரிகங்காதர ஜோஷி சீரடி சென்று பாபாவை தரிசித்தபோது பாபா மிகவும் கோபமாக இருந்ததால் தூரத்தில் நின்று தரிசித்து வந்தார். பாபா கோபம் தணிந்து ஜோஷியை அருகில் அழைத்து "என்ன கிழமனிதனை காகா மகராஜனை கொன்று விட்டு இங்கு வந்தீர்களா" என்று கேட்டார். ஜோஷி மிகவும் ஆச்சரியமுற்று தோபேஷபருக்கு கடிதம் எழுதி விசாரித்தபோது நிஜமாகவே காகா மகராஜ் பாபா சொன்ன நாளிலே மகாசமாதியடைந்திருந்தது தெரியவந்தது.

ஒருநாள் சாத்தே சீரடியிலிருக்கும் பொழுது பாபா லெண்டித்தோட்டத்திற்கு வழக்கமாக போகிற சமயத்தில் பாபா பேசாமல் படுத்திருந்தார். ஒருமணி தாமதித்து லெண்டிதோட்டத்திற்கு கிளம்பினார். சாத்தே அவ்வாறு தாமதமேன் என்று விசாரித்த போது பாபா "என்னுடைய கஜானர் போய் விட்டார்" என்றார். அதே நாள் ஷேஷதயாளுக்கு கடிதமெழுதி விசாரித்தபோது பாபா சொன்ன மாதிரியே கஜானன் மகராஜ் சமாதியடைந்தது தெரியவந்தது.

19-5-1917ல் ஒரு நாள் பாபா திடீரென்று "திலகர் இவ்விடம் வருகிறார்" என்று சொன்னார். வேறு யாரோ திலகர் மகராஜைப்பற்றி சொல்வதாக சாத்தே நினைத்தார். ஆனால் சிறிது நேரத்தில் வாஸ்தவமாகவே லோகமான்ய திலகர் பாபாவை சேவிக்க சீரடி வந்தடைந்தார். வெகுநேரம் சம்பாஷித்து விட்டு, திலகர் பாபாவை தன்னுடைய முயற்சிகள் இந்தியாவிற்கு சுதந்திரம் பெறுவதில் வெற்றியடையுமா என்று கேட்டார். அதற்கு பாபா நேரிடையாக பதில் சொல்லாமல் திலகர் பாலிடிக்ஸிலிருந்து ஓய்வு பெறுவது நல்லது என்று சொன்னார். அம்மாதிரியாகவே திலகர் சகாப்தம் முடிவடைந்து மகாத்மா காந்தியின் சகாப்தம் ஆரம்பமாகியது.

தாஜிஹரிலேபே என்பவர் சீரடிக்குச் செல்லும்பொழுது கோபர்கான் புத்தகசாலைக்குச் சென்று கெஜட்டைப் படித்தார். அதில்

தனக்கு 125 ரூபாயிலிருந்து 150 ரூபாய் உத்தியோகத்தில் சம்பளம் உயர்ந்ததாக அறிவிக்கப்பட்டிருந்தது. மிகவும் சந்தோஷமாக பாபாவை சென்று நமஸ்கரித்தார். பாபா உடனே 15 ரூபாய் தக்ஷிணை கேட்டார். ஹரிலேபே தன்னிடம் பணமில்லை என்று சொன்னார். பாபா, நேற்றுதான் உனக்கு 25 ரூபாய் கொடுத்தேன்! போய் பணத்தை கொண்டு வா என்றார். லேபே வாடாவிற்கு வந்து நடந்ததைச் சொல்லி சாத்தேவிடம் 25 ரூபாய் வாங்கி பாபாவிற்கு தக்ஷிணை கொடுத்தார்.

## தௌலத்ஷா

தாமோதர் ரஸனே என்கிற சாயிபக்தருக்கு வெகுகாலமாக குழந்தை பேறு இல்லாமல் பாபாவின் மாம்பழ லீலையால் பிறந்தவர் தௌலத்ஷா. பாபாவினால் ஹரி என்று முதல் முதலில் இவர் கையை பிடித்து எழுதி அக்ஷராப்பியாசம் செய்து வைத்து அமோகமாக வாழ்ந்தவர். இவருக்கு கல்யாணம் செய்வதற்கு நான்கு பெண்களின் ஜாதகத்தை பாபாவிடம் காண்பித்தபோது ரூ. 3000, ரூ. 2000 சீதனமாக வரக்கூடிய பெண்களை விட்டு ஏழை பெண்ணையே தேர்ந்தெடுத்து கல்யாணம் செய்ய வைத்தார். பண்டரிபுரத்தில் நடந்த இந்த கல்யாணத்திற்கு மாப்பிள்ளையின் தகப்பனார் மிகவும் வற்புறுத்தியபோது நான் உன்னுடன் இருக்கின்றேன், பயப்படாதே நீ எந்த இடத்தில் என்னை நினைத்தாலும் அந்த இடத்தில் நான் இருக்கின்றேன் என்றார். தனக்கு பதிலாக சாமாவை அனுப்பிவைத்தார்.

இவருக்கு ஒரு பையன் பிறந்து இறந்து போகவே, மிகவும் வருத்தமுற்று பாபா சமாதியை வணங்கி "எனக்கு அநேக குழந்தைகளை கொடுப்பதற்கு பதில் அதிக ஆயுசுடன் கூடிய மகனைக் கொடு" என்று வேண்டினார். அன்று இரவு பாபா கனவில் தோன்றி இறந்து போன ஆண் குழந்தை மூல நட்சத்திரத்தில் பிறந்ததாகவும் தௌலத்ஷாவிற்கு கெடுதல் வராமலிருக்கவே தான் அக்குழந்தையை எடுத்து கொண்டதாகவும், சீக்கிரமே நல்ல குழந்தையை கொடுப்பதாகவும், ஆசீர்வதிப்பதாகவும் இருந்தது. அடுத்தநாள் ஊருக்கு திரும்பிவந்து ஜாதகத்தைப் பார்த்ததில் பாபா சொல்லியபடியே மூல நட்சத்திரமாக இருந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். பாபா கனவில் சொல்லியபடி 15 மாதத்தில் ஒரு ஆண் குழந்தை பிறந்தது.

1927ல் இவருக்கு தேக சௌக்கியம் குன்றி படுத்த படுக்கையானார். மிகவும் கஷ்டப்பட்டு சீதாராம் உத்தேஸ்வரர் கோயிலுக்குச் சென்று அந்தக் கடவுளின் மேல் சாயிபாபாவுக்கு நமஸ்காரம் என்று சொல்லி புஷ்பத்தைப் போட்டார். உடனே ஒரு ஜோதி தோன்றி அதில் பாபாவைக் கண்டார். இதன்பிறகு உடம்பு சௌக்கியமேற்பட்டது.

ஜானகிதாஸ் என்னும் மகானை பாபாவின் பெயரைச் சொல்லி தௌலத்ஷா வணங்கியபோது அந்த மகான் "ஒரு பெரிய மகானிடம் நீ போயிருக்கிறாய். என்னைப் போல் ஏழையிடம் ஏன் வருகின்றாய்" என்றார். பிறகு தௌலத்ஷா வீட்டிற்குச் சென்று தூங்கும்பொழுது பாபா கனவில் தோன்றி "உனக்கு நிறைய கவலை இருக்கிறது. உன் மனதையும், உடம்பையும் எனக்கு பிச்சையாகக் கொடு" என்றார். அம்மாதிரியாகவே அளித்தபோது பாபாவின் மார்பில் தௌலத்ஷாவை வைத்திருப்பதுபோல் தோன்றவே பாபாவின் கருணை கிடைத்து விட்டதாக அவருக்கு தோன்றி சந்தோஷப்பட்டார்.

தௌலத்ஷாவின் குழந்தைக்கு ஒருநாள் அதிக ஜுரம் கண்டு வலி வந்தது. வேறொரு மருந்தும் பிரயோஜனமற்று போகவே பாபாவின் உதியும், தீர்த்தமும் கொடுத்து, பாபாவின் கிழிந்த துணியை தாயத்தாக குழந்தைக்கு கட்டியதில் குழந்தை உடனே சௌக்கியமானான். தௌலக்ஷா 1931-லிருந்து வளையல் வியாபாரம் செய்து வந்தார். அதற்கு ஸ்ரீ சமர்த்த சாயிநாத் கம்பெனி என்று பெயர் வைத்து அமோகமாக வியாபாரம் நடந்து வந்தது. தௌலத்ஷாவின் கையினால் பாபாவின் உதியும் தீர்த்தமும் கொடுத்தால் எல்லோருக்கும் எல்லா வியாதிகளும் நீங்கி வந்தது.

1-9-1932ல் தௌலத்ஷாவிற்கு காலரா வியாதி முற்றி இறக்கும் தருணத்திலிருந்தார். அவருடைய தகப்பனார் கடைசியாக தௌலத்ஷாவிற்கு என்ன இஷ்டம் என்று கேட்டார். தௌலத்ஷா "என்னை சீரடிக்கு அழைத்துச் செல்லுங்கள். நான் அங்கு இறந்தால் ஸ்ரீ சாயி பாபாவிடம் என் தேகத்தை எரித்து விடவும்" என்றார். ஆனால் பாபாவின் படம் அவர் தலைபக்கம் வைத்து அகண்ட தீபம் போட்டு பாபாவின் உதியையும் தீர்த்தத்தையும் அடிக்கடி கொடுத்து

வந்ததினால் தௌலத்ஷா பிழைத்து எழுந்து விட்டார். நடு இரவில் காப்பியில் பாபாவின் உதியை கலந்து கொடுத்ததினால் வாந்தியும், பேதியும் உடனே நின்று தௌலத்ஷா நன்றாக உறங்கினார். மறுநாள் டாக்டர் பரிசோதித்து ஆச்சரியமடைந்து "நேற்று இந்த மனிதன் இறக்கும் தருவாயிலிருந்தான் இன்றைக்கு அவ்வளவு சீக்கிரம் எப்படி குணமாகியது" என்றார். தௌலத்ஷா "சாயி டாக்டர்களில் சிறந்த டாக்டர். அவருடைய பரிசுத்தமான உதி என்னை காப்பாற்றியது" என்றார்.

தௌலத்ஷா ஏழு வயது சிறுவனாக இருக்கும்பொழுது தன் தாயுடன் பாபாவிடம் சென்று பாபாவின் பாதங்களை பிடித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது பாபா தன் கையினாலேயே சிறுவர்களுக்கு மிட்டாய்களை கொடுத்துக் கொண்டிருந்தார். குழந்தையான தௌலத்ஷாவிற்கும் மிட்டாயின் மீது கவனம் திரும்பி பாபாவின் பாதத்தை பிடிப்பதை நிறுத்தினார். தாயார் தௌலத்ஷாவை அடித்து "நீ மிட்டாயை நினைத்துக் கொண்டு பாபாவிற்கு செய்யும் வேலையை அசட்டை செய்கிறாய்" என்றாள். உடனே பாபா "ஏ கிழவி பையனை ஏன் அடிக்கின்றாய்" என்று கத்தினார். தாயார் தன் மகனுக்கு பாபாவிற்கு வேலை செய்யும்படி நல்ல எண்ணத்தை கொடுக்க பிரார்த்தித்தார். பாபா "பையன் எனக்கு வேலை செய்வான்! பயப்படாதே அவனுக்கு சுத்தமான எண்ணங்களையும், இச்சைகளையும் கொடுப்பேன்" என்றார்.

தௌலத்ஷாவிற்கு 12 வயது ஆகும் போது தன் மாமனுடன் சீரடிக்குச் சென்றார். அப்பொழுது அவர்களிடம் ரூ. 100 இருந்தது. பாபா தட்சிணையாக ரூ. 75/- வரை பெற்றுக் கொண்டார். ஆகவே மாமன் மிகுதி ரூ. 25/-ஐ பத்திரப்படுத்திக் கொண்டு பாபாவிற்கு கொடுப்பதற்கும், வழிச்சிலவிற்கும் ஊருக்கு கடிதமெழுதி பணம் கேட்டார்கள். உடனே பாபா மாமனிடம் ரூ. 25 தட்சிணை கேட்டார். பணம் முடிந்து விட்டதென்றும், மறுபடியும் ஊருக்கு திரும்புவதற்கு பணம் தேவையாக இருக்கிறதென்றும் சொன்னார். உடனே பாபா "இந்தப் பொய் ஏன் சொல்லுகின்றாய்? உன் ஜோபியில் மூலையில் ரூ. 25 வைத்திருக்கிறாய். ஊரிலிருந்து நாளைக்கு

மணியார்டர் வரும், பயப்படாதே" என்றார். உடனே மாமன் ரூ, 25யை கொடுத்துவிட்டார்.

## தாமோதர் ரஸனே

இவருக்கு மாம்பழ லீலை மூலமாக 8 குழந்தைகள் பிறந்தன,

ஒருநாள் நானாசாகேப் போங்ளே ஒரு பெரிய வெள்ளித்தட்டு நிறைய மிட்டாய் தினுசுகள் கொண்டு வந்து சாயிபாபாவை சாப்பிடும்படி கேட்டுக் கொண்டார். உடனே பாபா உரக்க சப்தம் போட்டார். ஒரு கருப்பு நாய் ஓடிவந்து அந்த மிட்டாயை நக்கிற்று. பக்கத்தில் பார்த்துக் கொண்டிருந்த போங்களே வெறுப்புடன் "இந்தப் பரநாய்க்கா இதைக் கொண்டு வந்தேன்" என்று நினைத்தார். பாபா இதை தெரிந்து உடனே தட்டை வீசி எறிந்து "இதைத் தூரக் கொண்டு போ" என்றார். அதாவது பாபாவிற்கு தாழ்ந்த ஜந்துக்களையும் தனக்கு சமமாகவே நடத்த நினைத்தார். மேலும் பக்தர்கள் பாபாவை எல்லா ஜந்துக்களிலும் உணரவேண்டுமென்று புத்தி புகட்டினார்.

ஒருநாள் ரஸனே பாபாவிற்கு விருந்து தயாரித்து பாபா வரமாட்டாரென்று நினைத்து பாலா படேலை அனுப்பும்படி வேண்டினார். பாலா படேல் ஒரு தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர். அதனால் பாபா "பாலா படேலை விருந்திற்கு அனுப்புகிறேன். ஆனால் அவரைப்பார்த்து தாதா என்று சொல்ல வேண்டாம். மேலும் நீ சாப்பிடுகிற இடத்திலிருந்து தூரத்திலே சாப்பாடு வைத்து அவரை கேவலப்படுத்த வேண்டாம்," என்று சொன்னார். ரஸனே ஒத்துக் கொண்டு விருந்து தயாரித்தார். நல்ல ஆகார வகைகளை ஒரு தட்டில் நிரப்பி ரஸனே பாபாவை நினைத்து "பாபா வாருங்கள்" என்று அழைத்தார். ஒரு கருப்பு நாய் உடனே ஓடிவந்து தட்டில் இருந்த வகைகளை சாப்பிட்டு ஓடிவிட்டது. அது சாப்பிட்டு முடிந்தவுடன் மற்றவர்களை அழைத்து பாலா படேலை தன் பக்கத்திலிருத்தி விருந்து அளித்தார்.

ரஸனே பாபாவிடம் முதன் முதலில் 1895ல் சென்றார். அடுத்த வருடம் ராமநவமி உற்சவம் ஆரம்பமாகி அந்த நாளிலிருந்து

ஒரு அலங்காரம் செய்து கொடியை ஊர்வலத்திற்காக கொடுத்து உதவி வந்தார்.

## அப்துல்

நான் டேட் என்னுமிடத்தில் அமிருதன் என்னும் பக்கிரியிடம் அப்துல் இருந்து வந்தார். பாபா அந்த பக்கிரியின் கனவில் தோன்றி இரண்டு மாம்பழங்களைக் கொடுத்து அப்துலிடம் அதைக் கொடுத்து சீரடிக்கு அனுப்பும்படி கட்டளையிட்டார். அதே பிரகாரம் அமிருதன் பக்கிரி அப்துலை மாம்பழங்கள் கொடுத்து பாபாவிடம் அனுப்பினார். பாபா மிகவும் உற்சாகத்துடன் "என் காக்கை வந்து விட்டது." என்று சொன்னார். பாபாவின் முழுவேலையையும் அப்துல் கவனித்து வந்தார். பாபா ஏற்றிய ஐந்து அணையா விளக்குகளையும் எண்ணை விட்டு அணையாமல் காப்பாற்றி வந்தார். வீதிகளையும், மசூதியையும் பெருக்கி சுத்தப்படுத்தி வந்தார். எப்பொழுதும் பாபாவின் பக்கத்திலிருந்து தொண்டு செய்து வந்தார். பாபா சில சமயங்களில் குரானை வாசிக்கச் சொல்லிக் கேட்பார்.

அவ்வப்போது பாபா சொன்ன புத்திமதிகளையும், கதைகளையும், வசனங்களையும் அப்துல் ஒரு நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்தார். இதை புனிதமாக போற்றி வந்தார். வேறெவருக்காவது சில கஷ்டங்கள் வந்து அப்துலை விசாரிக்கும்பொழுது, அப்துல் அப்புத்தகத்தை திறந்து அப்பக்கத்திலிருப்பதை வாசிப்பார். அது சரியான விடையாக அமைந்துவிடும். ஒரு தடவை சாயிமந்திரில் கிணறு தோண்டியபோது மிகவும் உப்பு கரிக்கும் ஜலமாக தென்பட்டது. எல்லோரும் மனக்கஷ்டப் பட்டார்கள். அப்துலிடம் சொன்னபோது அப்புத்தகத்தை எடுத்து பிரித்து ஒரு பாகத்தை வாசித்ததில் "இன்னும் ஆழமாக தோண்டினால் தண்ணீர் அமுதமாகிவிடும்," என்ற வசனம் வந்தது. உடனே எல்லோருக்கும் நிஜமாகவே அமுதம் போன்ற தண்ணீர் கிடைத்தது. அந்தக்கிணறு மிகவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. பாரிஸ்டராகயிருந்த காட்ஜில் என்பவர் அப்துலிடம் தனது மகன் சீமையிலிருந்து திரும்பி வருவானா என்று புத்தகத்தை பார்த்து தெரிவிக்கும்படி வேண்டினார். அப்துலும் மிக வணக்கத்துடன்

புத்தகத்தை பிரித்ததில் “திரும்பி வருவது நிஜமே” என்ற வசனம் படிக்கப்பட்டது. ஆக காட்ஜில் சந்தோஷமடைந்தார். சில நாட்களில் அம்மாதிரியாகவே காட்ஜியின் மகன் திரும்பி வந்து சேர்ந்தான்.

லெண்டி தோட்டத்தில் ஒரு தூண் போல் கட்டியிருக்கும் சிறு பீடத்தில் நந்த தீபம் என்னும் அணையா விளக்கு அப்துலினால் பாதுகாக்கப்பட்டு வந்தது. அத்தூணின் பின்னால் பாபா வந்து அமருவார். அப்துல் இரண்டு குடங்களில் தண்ணீர் நிரப்பி வைப்பார். அத்தண்ணீரை பாபா எல்லா பக்கங்களிலும் ஊற்றுவார். பாபாவின் புத்திமதிகளில் சிறந்தது “அப்துல் கொஞ்சமாக சாப்பிடு, அநேக வித திண்பண்டங்களை விரும்பாதே, ஒரே ஒரு விதம் போதும், ரொம்பவும் தூங்காதே,” என்பதே.

ஒருநாள் அப்துல் மிகவும் களைப்புற்று தூங்குவதற்கு தன் கைகளை தலைக்கு முன்னால் வைத்து தலையைச் சாய்த்தார். அப்பொழுது பாபா “நீ சந்திரனைப் பார்க்க முயலுகிறாயா” என்று சொன்னார். அந்த இரவு அப்துல் தூக்கம் மேலிட்டு பாபாவின் மீது விழுந்தார். பாபா மெதுவாக அப்துலின் காலில் தட்டி எழுப்பினார். மறுநாள் ஆச்சரியமாக கையில் ஜலம் எடுத்து பார்த்தபோது அந்த ஜலத்தில் ஒரு பெரிய சந்திரன் இருந்தது. அப்பொழுது பகல் 2 மணி. உடனே இதைப் பற்றித்தான் பாபா சொன்னதாக அப்துலுக்குப் புரிந்தது.

அப்துல் தினந்தோறும் கிராமத்தின் எல்லையிலிருக்கும் ஓடையில் பாபாவின் துணியை துவைத்து வருவார். மசூதி, சாவடி, தெருக்களையெல்லாம் சுத்தம் செய்வார். கிராம தெருக்களை பெருக்கும்பொழுது மலம் முதலியவைகளையும் அப்துல் கூசாமல் எடுத்து விடுவார். அதனால் பாபா அப்துலை ஹாவல்கூர் (தோட்டி) என்றும் மிரியாம்பி என்றும் கூப்பிடுவார்.

1927ல் ஒரு நாள் அப்துல் ராதா கிருஷ்ணமாயின் வீட்டில் குரான் வாசித்து வரும்பொழுது கட்டிடம் இடிந்து விழுந்து அப்துல் இடுப்பு வரையில் புதைந்து விட்டார். ஆனால் பாபாவின் கருணையினால் துளி கூட காயம் படாமல் தப்பினார்.

அப்துலின் பழைய குரு அமிருதன் சீரடிக்கு ஒரு நாள் வந்து அப்துலை பழையபடி தன்னிடம் வரும்படி சொன்னார். பாபா உத்தரவிட்டால் வருவதாக பதிலுரைத்தார். ஆனால் பாபா அவ்வாறு உத்திரவு கொடுக்காமல் போகவே, அமிருதன் பக்கிரி திரும்பி போய்விட்டார். பாபாவின் சமாதி வரையில் தொண்டு செய்யும் பாக்கியத்தை அப்துல் அடைந்தார்.

## ஷம்சுதீன் ராங்காரி

இவர் தானாவைச் சேர்ந்தவர். 1913ல் இவரது மனைவிக்கு தொண்டை, தாடை முதலியன வீக்கம் கண்டு சுமார் ஒரு வருட காலம் சாப்பிட முடியாமல் கஷ்டப்பட்டு வந்தாள். எவ்வளவோ மருந்துகள் கொடுத்தும் பயனில்லாமல் போய்விட்டது. ஒரு நண்பரின் மூலமாக பாபாவைப்பற்றி கேள்விப்பட்டு சீரடிக்கு கிளம்பினார். பிரயாணத்தை ஆரம்பித்தபோது ஒன்றும் சாப்பிட முடியாமல் தவித்தாள். ஆனால், அவ்வாறு பிரயாணம் செய்யும்பொழுது இகட்புலி என்ற இடத்தில் கொஞ்சம் தண்ணீர் பருகினாள். பிறகு நாசிக் என்ற இடத்தில் கொஞ்சம் சாப்பிட்டாள். ஆக பாபாவின் அருளினால் குணம் தெரிந்தது.

பாபாவிடம் சென்று ரங்காரி நமஸ்கரித்தபோது "அங்கிருந்து ஏன் வந்தாய்" என்று பாபா கேட்டார். தானாவிலிருந்து மனைவியின் வியாதி சொஸ்தப்படுத்திக்கொள்ள வந்ததாகவும் சொன்னார். பாபாவின் உத்திரவுப்படி மசூதிக்கு மனைவியை அழைத்து வந்ததும் பாபா அவள் தலையைத் தொட்டு சரியாகிவிடும் என்றார். பாபா கேட்காமலே ரூ. 140 தட்சிணையாக கொடுத்தார். பாபாவும் பெற்றுக்கொண்டார். சுமார் இரண்டு மணி நேரத்தில் மனைவியின் வீக்கம் குறைந்து நல்ல குணம் தெரியவே பாபாவிடம் விடை பெறாமலே டாங்காவில் ஏறி கோபர்கானுக்கு புறப்பட்டு விட்டார்கள். பாதிதூரம் சென்றவுடன் வண்டியின் இருசு உடைந்து நடுவழியிலேயே நிற்க வேண்டியதாகிவிட்டது. அப்பொழுது இரவு 10 மணி, வேறு வண்டியும் கிடைக்கவில்லை. திரும்பி நடக்கவும் முடியாமல் அல்லது மேலே செல்லவும் முடியாமல் தவித்தார்கள். பாபாவின் ஞாபகம் வந்து விடை

பெறாமல் வந்ததற்கே இந்த தண்டனை என்று நினைத்து பாபாவை நினைத்து மன்னிப்பு கோரி இனியும் இம்மாதிரி நடப்பதில்லை என்றும், காப்பாற்ற வேண்டுமென்றும் விடாமல் பாபாவை துதித்தார்கள். நடுஇரவில் ஒரு வண்டி வரும் சத்தம் கேட்டது. ஒருபக்கம் இருட்டு, மற்றொரு பக்கம் வழிக்கொள்ளைக்காரர்கள் பயம், வண்டி வந்து நின்று தானாவாலா, தானாவாலா என்று கூப்பிட்டார். உடனே ரங்காரி ஓடிச் சென்று தான்தான் தானாவாலா என்று தெரிவித்து இந்த நடுநிசியில் தங்கள் கஷ்டம் அறிந்து எப்படி வந்தார் என்று கேட்க வண்டிக்காரர், பாபா அவர்களை அழைத்து வரும்படி அனுப்பினதாகச் சொல்லி அவர்களை ஏற்றிக்கொண்டு இரவு இரண்டு மணியளவில் மசூதியை அடைந்தார்கள். பாபா தூங்காமல் விழித்திருந்து அவர்களை வரவேற்று தன் உத்திரவில்லாமல் சென்றதுதான் இவ்வாறு கஷ்டங்கள் அனுபவிக்க நேர்ந்ததை தெரிவித்து மசூதியிலேயே படுக்க வைத்து உதவி செய்தார்.

அடுத்த நாள் காலையில் பாபா பிச்சைக்குச் சென்று தான் கொஞ்சம் எடுத்துக் கொண்டு மிகுதியை ரங்காரியிடம் கொடுத்தார். அந்த கடின உணவை ரங்காரியின் மனைவி சுலபமாக சாப்பிட்டாள். பிறகு பாபா உத்திரவு அளித்து டாங்கா வண்டிக்காக ரங்காரி சென்று பார்த்ததில் ஒரு டாங்காவும் கிடைக்காமல் மசூதிக்கு திரும்பி விட்டார். பாபா "இப்பொழுது சென்று பார், ஒரு டாங்கா உள்ளது" என்றார். அம்மாதிரியாகவே கிடைக்கப்பெற்று ஊர் திரும்பினார்.

## ராஜப்பள்ளி மகமத்

ராஜப்பள்ளி மகமத் பந்தாராவில் வசிப்பவர். ஒரு சமயம் தோல் பதனிடுவதற்கு வேண்டிய பட்டை கொண்டு வந்த சில வண்டிகள், நாஸிக்கில் தயாராவதற்கு தாமதமாகியது. அங்கு பாபாவைப்பற்றி கேள்வியுற்று, நேரமிருந்தபடியால், சாமான் தயார் ஆவதற்கு காலதாமதமானபடியால், சீரடிக்குச் சென்று தேங்காயும், கற்கண்டும் கொடுத்து பாபாவை சேவித்தார். மறுநாள் பாபாவிடம் உத்திரவு கேட்டபோது பாபா "அந்த மனிதன் உனக்கு சாமானை கொடுக்க இன்னும் தயாராகவில்லை" என்று சொல்லி சீரடியிலேயே

நிறுத்தியதால் இரண்டு நாள் தங்கி பாபாவிடம் அதிக விசுவாசத்தைப் பெற்றார். பாபாவிடம் தான் இறக்கும்பொழுது பாபாவையே நினைத்து சாக வேண்டுமென்று கோரினார். பாபா சிரித்து அவர் தலையில் கையை வைத்து ஆசீர்வதித்தார். அந்த நிமிஷத்திலிருந்து பாபாவின் ஆசீர்வாதம் நன்றாக பலித்தது.

ஒரு சமயம் அவரது எருமை கன்று போடுவதற்கு மிகவும் கஷ்டப்பட்டது. அதன் கஷ்டத்தைப் பார்த்து பொறுக்க முடியாமல் ஒரு வெட்னரி டாக்டரை வரவழைத்து பிரசவம் பார்த்தும் ஒன்றும் பலனில்லாமல் போய்விட்டது. பிறகு பாபாவை நினைத்து உதியை எடுத்து எருமையின் தலையில் தேய்த்தவுடன் சுமார் பத்து நிமிடத்திற்குள் அந்த எருமை யாதொரு கஷ்டமில்லாமல் கன்று போட்டது. பிறகு எருமையும் சுகமடைந்தது.

## ஆதாம் தவாலி

பந்தராவைச் சேர்ந்த ஆதாம் தவாலி பாபாவின் பழைய பக்தர். பாபாவிடம் அடிக்கடி சென்று தரிசனம் செய்து வந்தார். பாபா வார்த்தையில் அசைக்க முடியாத நம்பிக்கையுள்ளவர். பாபாவின் வாக்கு தேவ வாக்கு. அவருடைய குமாரனுக்கு கல்யாணம் செய்ய பாபாவை எத்தனையோ தடவை உத்திரவு கேட்டும் பாபா தள்ளிப்போட்டுக் கொண்டே வந்தார். கடைசியாக 3 வருடம் கழித்து ஒரு பெண்ணை குறிப்பிட்டு, நாளும் குறிப்பிட்டு கல்யாணத்திற்கு உத்திரவிட்டார். ஆனால் தவாலி மிகவும் ஏழை. இந்த அழகில் பெண் வீட்டார் சிலவையும் தானே கொடுக்கிறதாக ஒப்புக்கொண்டார். இவையெல்லாம் பாபாவின் உதவியை எதிர்பார்த்துதான் செய்தார். கொஞ்சமும் சலனமில்லாமல் கல்யாண நாள் பத்துநாள் இருக்கும்வரை பாபாவிடம் நம்பிக்கையோடு பணம் கிடைக்கும் என்று பேசாமலிருந்தார்.

பாபா செய்த அதிசயம் திடீரென்று ஒரு காண்டிராக்ட் வேலை தவாலிக்கு கொடுக்கப்பட்டு, அதற்காக ஏராளமான முன் பணமும் கொடுக்கப்பட்டது. கல்யாணத்தையும் பாபாவின் உதவியால் சிறப்பாக நடத்தினார்.

ஒரு வீட்டின் சொந்தக்காரருக்கு தரகனாக இருந்து ஒரு மார்வாடியிடம் அவ்வீட்டை அடமானமாக வைத்து பணம் வாங்கி கொடுத்தார். ஆனால், சில நாட்களில் மார்வாடி அந்த வீட்டின் பத்திரம் போலியாக தயாரிக்கப்பட்டது என்று போலீஸிலும், கோர்ட்டிலும் வழக்கு தொடுத்தார். தவாலி பயந்து பாபாவிடம் சென்று அவர் உதவியை நாடினார். பாபா "நீ பயப்படாதே எல்லாம் சரியாக முடியும்" என்று சொன்னார். கோர்ட்டில் விசாரனை முடிவு பெற்று தீர்ப்பு சொல்லும் நாளன்று பாபாவின் மிகச் சிறந்த பக்தரான டெண்டூல்கரின் மனைவியிடம் சென்று தன்னுடைய விடுதலைக்காக பாபாவை பிரார்த்திக்கும்படி வேண்டினார். அந்த அம்மையும் அப்படியே பாபாவை வேண்டியதில் தவாலிக்கு விடுதலை கிடைத்தது.

## நந்தாராம் - மார்வாடி

சீரடியில் பிளேக் நோய் பரவியிருந்தபோது கிராம மக்கள் அநேகம் பேர்கள் ஊரைவிட்டு வேறு கிராமத்திற்கு சென்று விட்டனர். நந்தாராம் ஒருநாள் மாலை மாருதி கோயில் வழியாக போகும்பொழுது, அங்கிருந்த சிலபேர்கள் நந்தாராம் மார்வாடியின் கண்கள் சிவந்திருப்பதைப் பார்த்து அவருக்கு பிளேக் நோய் தொத்திக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். நந்தாராம் மிகவும் பயந்து நடுங்கினார். கோயிலில் மாருதிக்கு தேங்காயும், எண்ணையும் செலுத்தி தனக்கு மரணம் ஏற்படாமலிருக்க பிரார்த்தித்தார். வீட்டிற்கு சென்றவுடன் சுரம் அடிப்பதாக தோன்றவே பக்கத்து கிராமத்திற்கு செல்வதற்கு தயார் செய்து, மசூதிக்குச் சென்று, பாபாவை உத்திரவு கேட்டார். பாபா கிராமத்தை விட்டு போக வேண்டாமென்று தடுத்து, "நான் சாகிற வரையில் உன்னை சாக விடமாட்டேன்" என்று உறுதி அளித்தார். அவ்வாறே நந்தாராம் பயமில்லாமல் தங்கியிருந்து சுகத்தை அடைந்தார்.

ஒரு சமயம் பாபா மார்வாடி ரூபத்தில் தவாலியிடம் சென்று தமக்கு பசியாக இருக்கிறது என்று சொன்னார். தவாலி 4 அணா கொடுத்து ஒரு மார்வாடி ஹோட்டலுக்குச் சென்று சாப்பிடும்படி சொன்னார். பிறகு சீரடிக்குப் போனபோது பாபா வேறொருவரிடம்

தவாலியை சுட்டிக் காண்பித்து "நான் இந்த மனிதனிடம் போனேன். என்னை சாப்பிடுவதற்கு மார்வாடி ஹோட்டலுக்கு அனுப்பினான்" என்றார். என்னே தீர்க்க தரிசனம்.

## லக்ஷ்மண் கோவிந்த் மூஞ்சே

லக்ஷ்மண் கோவிந்த் மூஞ்சே நாசிக்கைச் சேர்ந்தவர். ஒரு நாள் நானா சாகேப், நிமோன்கருடன், கேசவ்கஜுல், மூஞ்சே மூவரும் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கினார்கள். உடனே பாபா, "என் பேரிச்சம்பழங்களையும், ஊதுவத்தியும் ஒரு ரூபாயும் கொடு" என்றார். மூஞ்சே ஆச்சரியப்பட்டு அவைகளைக் கொடுத்தார். அந்தநாளுக்கு முன் இரவு மூவரும் படுக்கப்போகுமுன் கேசவ் கஜுல் சில பேரிச்சம்பழங்களையும், ஒரு கட்டு ஊதுவத்தியும், ஒரு ரூபாயும் மூஞ்சேவிடம் பாபாவிற்கு சமர்ப்பிக்க கொடுத்து வைத்தார். அதை சரியாக தீர்க்கதரிசனத்தினாலறிந்து பாபா கேட்டதும் மூஞ்சே ஆச்சரியப்பட்டார்.

ஒரு சமயம் மூஞ்சே, ரஹதாவிற்கு தன்னுடைய சித்தப்பன் வீட்டிற்கு சென்றார். அவருக்கு கல்யாணம் நிச்சயமாகியிருந்தபடியால், கல்யாண பெண்ணுக்கு சில நகைகள் போடுவதற்கு சித்தப்பன் உதவி செய்வாரென்று சென்றார். ரஹதாவிற்கு, பாபா மாருதி கோயிலுக்கு வந்திருப்பதை அறிந்து, மூஞ்சே பாபாவைச் சென்று சேவித்தார். உடனே பாபா "குழந்தாய், வா, உன்னை நேற்றையிலிருந்து நினைத்துக் கொண்டிருக்கிறேன்." என்று சொல்லி கால்களை பிடிக்கச் சொன்னார். அம்மாதிரி செய்தவுடன் ஒரு மாம்பழத்தைக் கொடுத்து சாப்பிடும்படி சொன்னார். அது மிகவும் இனிப்பாக இருந்தது. பிறகு பாபா "ஏன் இங்கு வந்தாய்" என்றார். மூஞ்சே தனக்கு கல்யாணம் நிச்சயமாகியிருக்கின்றபடியால், சில நகைகள் இரவல் வாங்க வந்ததாக தெரிவித்தார். பாபா, யார், எவருடையது, யார் கொடுக்கிறார், எவர் வாங்கிக் கொள்ளுகிறார், யாரும் சமயத்தில் உதவி செய்ய மாட்டார்கள், உனக்கு இரண்டாயிரம் பெறும்படியான நகைகள் வேண்டியதானால் நான் தருகிறேன்" என்றார். பாபா ஒரு தகர பாத்திரத்தை ஏந்தி பிச்சை எடுக்கும் பக்கிரி. இவர் எப்படி 2000 ரூபாய் நகை கொடுக்க

முடியுமென்று நினைத்து பாபாவை வணங்கி விட்டு சித்தப்பன் வீட்டிற்குச் சென்றார். பாபா சொன்ன மாதிரியே சித்தப்பன் கையை விரித்து விட்டார். நகைகள் இல்லாததால் கல்யாணத்தை நிறுத்த எண்ணங்கொண்டு மூஞ்சே வருத்தத்துடன் ஊருக்குத் திரும்பினார். அந்த சமயத்தில் ஒரு சிநேகிதர் மூஞ்சேயை சந்தித்து, தான் உதவி செய்வதாகச் சொல்லி சின்னா என்னுமிடத்திலுள்ள குஜராத்தி சௌகார் மூலமாக, சில நகைகள் கிடைக்கும்படியாகச் செய்தார். கல்யாணமும் குறித்த தேதியில் நடந்தேறியது. எல்லாம் பாபாவின் தக்க சமயத்தில் தவறாது வந்து உதவும் கருணைத் தன்மைதான்.

மூஞ்சேவிற்கு வரிசையாக சில குழந்தைகள் பிறந்து, இறந்து போயின. பாபாவிடம் நமஸ்கரித்து நீண்ட ஆயுளுடன் கூடிய ஒரு ஆண்பிள்ளையை அருள வேண்டினார். பாபா “ஒன்றென்ன இரண்டு கொடுக்கின்றேன்” என்றார். அதே மாதிரியாக இரண்டு ஆண் பிள்ளைகள் பிறந்து, மூஞ்சே பாபாவின் கருணையைப் போற்றி சந்தோஷப்பட்டார்.

மூஞ்சே வீட்டிற்கு ஒரு விருந்தாளி அவர் மகனுடன் வந்தார். அந்த மகன் புத்திமாறாட்டத்தினால் மிகவும் வியாதியாகி மிகவும் மோசமான நிலைக்கு வந்தான். மூஞ்சே பாபாவின் படத்தை அவன் தலைக்குமேல் வைத்து பாபாவின் உதியை முகத்திலும் உடம்பிலும் தடவினார். மறுநாள் அவன் புத்தி நிலைக்கு வந்து சௌக்கியமடைந்தான்.

## கங்காதர் விஷ்ணு ஜீர்சாகர்

நிவாஸா என்னுமிடத்தைச் சேர்ந்தவர் கங்காதர் அவர் 5 வயதாகும்பொழுது அவருடைய தகப்பனார், இறந்து விட்டார். அவருடைய நிலங்களை பாலாநோஸ்கர் என்பவர் குத்தகைக்கு எடுத்துக் கொண்டார். ஆனால் அவருடைய சொந்த நிலம் என்று சுவாதீனம் பாராட்டினார். கங்காதரின் அம்மான் பாபாவிடம் சென்று நிலவழக்கை சொன்னபோது பாபா பாலாநோஸ்கரை அழைத்து குழந்தைகள் நிலங்களை கொடுத்துவிடு. ஏன் அவர்களை தொந்தரவு செய்கிறாய்? என்றார். ஆனால் பாலா கொடுக்கவில்லை. ஆனால்

கோர்ட்டு மூலமாக நிலங்களை கைப்பற்றியதால் பாலாநோவஸ்கர் பைத்தியம் பிடித்து அலைந்தார். 27-6-1935ல் கங்காதருக்கு ஒரு கனவு வந்தது. பாபா கனவில் தோன்றி "இன்றைக்கு உன்வீடு உன்பக்கம் தீர்மானமாயிற்று. நீ ஏன் தூங்கிக் கொண்டிருக்கின்றாய்? சீரடியில் யாத்திரை நடக்கிறது. வந்து சாப்பிடு" என்றார். அடுத்தநாள் அகமத் நகரில் பாபா தரிசனம் கிடைத்த நாளன்று, கோர்ட்டில் கங்காதருக்கு அனுகூலமாயிற்று என்று கடிதம் வந்தது.

## பையாஜி

பாபா பிச்சை எடுத்த 5 வீடுகளில் பையாஜி வீடு ஒன்று, ஆரம்பத்தில் ஒரு நாளைக்கு எட்டு தடவையும், பிறகு ஒரு நாளைக்கு 4 தடவையும், பிறகு 2 தடவையும் கடைசியாக ஒரு தடவையாகவும் பிச்சை எடுத்து வந்தார்.

ஒரு நாள் பையாஜி மாடு ஓட்டுவதை தடுத்து நிறுத்தி கோபத்தினால் கண்கள் சிவக்க எல்லோரையும் திட்டி நான்கு மண்குடங்களை உடைத்தார். சாவுக்கு அறிகுறியாக "பும்பும்" என்று ஊதினார். அதே தினம் பையாஜியின் அத்தை மகன் இறந்து போனான். இதை முன்கூட்டி அறிந்தே பாபா மேல் சொன்னவாறு நடந்து கொண்டார்.

பாபா தட்சிணை வாங்கியதில் பையாஜிக்கு தினமும் நான்கு ரூபாய் கொடுத்து வந்தார். அவர் சமாதி அடைந்த நாள் கூட கடைசியாக 4 ரூபாய் கொடுத்தார். "இந்த வெகுமானத்தை கடன் கொடுக்கவாவது, இனாமாகவும் மற்றவர்களுக்கு கொடுக்கக்கூடாது. இதை சாப்பிட்டு கக்கவும் வேண்டாம். மற்றவர்களுக்கு கொடுக்கவும் வேண்டாம்" என்று பாபா சொன்னார். அம்மாதிரியாகவே இப்பணத்தை கொண்டு 84 ஏக்கர் நிலத்தை வாங்கினார்.

எல்லோரும் கரும்பு பயிரிடவே பயாஜியும் கரும்பை பயிரிட ஆரம்பித்தபோது பாபா தடுத்தார். ஆனால் பயாஜி கரும்பை பயிரிட்டதினால் ஏராளமான நஷ்டத்தை அடைந்தார்.

1913-ல் பயாஜியின் தந்தை குதிரைமீதேறி சவாரி செய்தபோது பாரிச வாயுவினால் தாக்கப்பட்டு கீழே விழுந்து அபாய நிலையை அடைந்தார். பாபாவிடம் உதியைக் கேட்டபோது மறுத்தார். அதே மாதிரியாக பயாஜியின் தந்தை சுத்த ஏகாதேசியில் காலமானார்.

பயாஜி தன் தகப்பனார் சாவிற்கு வருந்தினபோது பாபா "நீ எதற்காக விசனப்பட வேண்டும். இன்னும் 5 மாதத்திற்குள் அவர் திரும்பி வருவார்" என்றார். அதே மாதிரியாகவே 5 மாதத்தில் பயாஜிக்கு ஆண் மகன் பிறந்தான்.

பயாஜி பாபாவை நமஸ்கரித்து பிறகு பாபாவை கைவாகு கொடுத்து தூக்கி துனியின் அருகில் வைப்பது வழக்கம். ஒருநாள் தனக்கு பீமனைப்போல் பலமிருப்பதாக நினைத்து பாபாவை தூக்கினபோது, அசைக்க முடியாத கனத்துடன் பாபா காணப்பட்டார். எவ்வளவு முயற்சித்தும் தூக்க முடியாமல் போகவே, பாபாவிடம் தன் கர்வத்திற்கு மன்னிப்பு கேட்டார்.

பயாஜியின் மேல் சாய்ந்தே பாபா மகாசமாதி அடைந்தார். பயாஜி எவ்வளவு கொடுத்து வைத்தவர்.

சீரடியில் ஒரு எருதுக்கு சூலம் போட்டு சிவபெருமானுக்கு விடப்பட்டது. அது கிராமத்தில் எல்லா இடத்திலும் மேய்ந்து கொண்டிருக்கும். தோட்டங்களின் செடிகளை அழித்து வந்ததால் கிராமத்தில் சிலபேர்களுடன் பயாஜி ஆலோசித்து 3 ரூபாய் சேகரித்து ஆடுமாடுகள் சவரக்ஷணைக்காக இருக்கும். பின்ஜிர்போலில் சேர்த்து விட ஒரு மார்வாடியிடம் எருது ஒப்படைக்கப்பட்டது. அது இயோலாவில் உள்ளது. அதே மாதிரியாக அந்த பிக்கு மார்வாடி எருதை பின்ஜிர் போலில் விட்டுவிட்டதாக அடுத்தநாள் வந்து சொன்னான்.

அதே நாள் இரவு பயாஜியின் கனவில் பாபா தோன்றி "தூங்குகிறாயா! என்னை கசாப்புக்காரன் கதவில் கட்டி விட்டிருக்கிறார்களே" என்று சொல்லி மறைந்தார். உடனே விழித்துக் கொண்டு கிராமத்தார்களிடம் யோசனை செய்து, பிக்கு மார்வாடி, எருதை பின்ஜர் போலில் விடாமல், கசாப்புக் காரனிடம் விற்றிருக்க

வேண்டும் என்று நினைத்து இயோலாவுக்கு சிலருடன் பயாஜி சென்று பின்ஜிர் போலில் எருதை தேடினால் கிடைக்கவேயில்லை. பிறகு ஆடு மாடுகள் வெட்டுகின்ற இடத்திற்கு சென்று பார்த்தார்கள். எருது ஒரு சுவற்றின் மீது தலையைத் தூக்கி ஆட்டியது. அது மாடு வெட்டுகிற இடத்தில் இருந்தது. அன்றைய தினம் வெட்டுவதாக இருந்தது. பிக்கு மார்வாடியிடம் 14 ரூபாய்க்கு வாங்கினதாக மாடு வெட்டுகிறவன் சொன்னார். அந்த எருதை மீட்டு பிஞ்சிர்போலில் விட்டார்கள். பிக்கு மார்வாடிக்கும் 2 மாதம் காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

பாபா சரியான சந்தர்ப்பத்தில் கனவில் தோன்றி சொல்லியதில் மாடு தப்பியது.

## பாலாபட்

ஆந்தேரியைச் சேர்ந்தவர் பாலாபட், பாபாவைப்பற்றி கேள்வியுற்று சீரடிக்குச் சென்றார். அக்கல் கோட்டுக்கு போக வேண்டுமென்று நினைத்து பாபாவை நமஸ்கரித்தார். உடனே பாபா "நான் அக்கல் கோட்டுக்கு போக வேண்டும்" என்று சொன்னார். பாலாபட்டின் மனதறிந்து சொன்னதால் பாலாபட் ஆச்சரியமடைந்தார்.

பாபா தனக்கு குருவாகயிருந்து ஏதாவது உபதேசம் செய்ய வேண்டுமென்று மனதில் பிரார்த்தித்தார். உடனே பாபா "ஒருவருக்கு குரு இருக்க வேண்டிய அவசியமில்லை எல்லாம் நம்மிடத்திலேயே இருக்கிறது. என்ன விதைக்கிறாயோ அதையே அறுக்கிறாய் உன் உள்ளத்தையே கவனித்து அது பிரகாரம் நட" என்றார்.

ஆந்தேரியில் ஒரு பயங்கரமான கொள்ளை நடந்து குடியிருந்தவர்கள் திருடர்களால் தாக்கப்பட்டு ஆஸ்பத்திரியில் இருந்ததைப் பார்த்து பயந்து பாலாபட் பாபாவிடம் தன்னையும், தன் குடும்பத்தாரையும் அப்பேர்பட்ட கஷ்டங்களிலிருந்து காப்பாற்ற வேண்டுமென்று பாபாவை உருக்கமாக வேண்டினார். அன்றிரவு பாபா கனவில் தோன்றி 10 பட்டாணியர்களோடு வந்திருப்பதாகவும் அதனால் பயப்பட வேண்டாமென்றும் சொன்னார். மறுநாள் காலையில் சில வண்ணார்கள் 10 பேர் பாலாபட்டிடம் சென்று

தங்களுக்கு தங்குவதற்கு அவர் நிலத்தை கொடுக்கும்படி கேட்டார்கள். உடனே அம்மாதிரியாகவே குடிசைகள் போடப்பட்டு நிரந்தரமாக 10 வண்ணார்கள் குடும்பத்துடன் தங்கினார்கள். ஆக 200 ரூபாய் குடக்கூலியும் கிடைத்தது. பாபா சொன்னதுபோல் திருடர் பயமும் இல்லாமல் 10 வண்ணார்களும் துணையாக நின்றார்கள்.

பாலாபட் ஒரு சமயம் 5 ரூம்கள் கொண்ட கட்டிடம் கட்டுவதற்கு பாபாவிடம் உதவி கோரினார். பாபா தரையில் 25 கோடுகள் வரைந்து ஒரு கோட்டிற்கு 1 ரூபாய் வீதம் 25 ரூபாய் தட்சிணை கேட்டார். அதாவது 25 ரூம்கள் கட்டுவதற்கு ஆசீர்வதித்தார்.

## தீக்ஷிதரின் குறிப்புகள்

தீக்ஷிதரின் நண்பர் ஸ்ரீதர் கிருஷ்ணா என்பவர் பாபாவைப் பற்றி நிறைய கேள்வியுற்று தீக்ஷிதருடன் சீரடி சென்று பாபாவை தரிசிக்க விரும்பினார். ஆகவே தீக்ஷிதர் அடுத்த தடவை எப்பொழுது சீரடிக்கு கிளம்புவாரோ அப்பொழுது அவரையும் அழைத்துச் செல்லும்படி வேண்டினார். அந்த நண்பர் ஒரு பாங்கில் வேலை செய்து வந்ததால் தீக்ஷிதர் புறப்படும் சமயம் லீவ் கிடைக்காமல் தீக்ஷிதர் செல்லும் பொழுதெல்லாம் உடன் செல்ல முடியாமல் தவித்தார். ஒரு சமயம் தீக்ஷிதர் புறப்படும் சமயம் ஸ்ரீதருக்கு லீவும் கிடைத்து புறப்பட தயாரானார். அப்பொழுது தீக்ஷிதர் பந்தாராவில் வசித்து வந்தார். ஸ்ரீதர் தீக்ஷிதரை டிக்கட் வாங்கி இடம் பிடிக்கும்படியும் சொல்லி வைத்தார். ஆனால் மறுநாள் அந்த நண்பர் மாடியிலிருந்து வழுக்கி விழுந்து அடிபட்டு சீரடி செல்ல முடியாமல் தீக்ஷிதர் மட்டும் போகும்படியாக ஆயிற்று. பிறகு அந்த நண்பரின் பேரில் ஒரு வியாஜ்யம் ஏற்பட்டு அதற்காக தண்டனையும் கொடுக்கப்பட்டது. ஆக பாபா மகா சமாதியடைகின்ற வரையில் அந்த நண்பர் பாபாவை தரிசிக்க முடியாமல் போய்விட்டது.

இரவு நேரங்களில் லக்ஷ்மிபாய் சிந்தே என்கிற பக்தை, வெகுநேரம் பாபாவுடன் இருந்து கடைசிஆள் மசூதியை விட்டுப்போகும்போது அவளும் உடன் சென்றுவிடுவாள். தினமும் பாபாவிற்கு இரவில் ரொட்டியை பாலில் தோய்த்து கொடுத்து வந்தாள்.

அப்படி சில நேரங்களில் நேரமானாலும், பாபா காத்திருந்து சேமியாவுடன் கூடிய ஆகாரம் செய்யச் சொல்லி பாபா இரண்டு வாய் சாப்பிட்டு மிகுதியை ராதாகிருஷ்ணாமாயிற்கு பிரசாதமாக கொடுத்தனுப்புவார். பாபா தானாகவே அடிக்கடி சமையல் செய்வார். அப்பொழுது லக்ஷ்மிபாய் துணையாயிருப்பாள். கைகளினாலேயே கொதிக்கின்ற சாதத்தில் கையைவிட்டு துழாவி விடுவார். மசாலா சேர்த்த உணவையும், வரள் என்கிற பாயசமும் அடிக்கடி பாபா செய்து எல்லோருக்கும் கொடுத்து வந்தார். நாசிக்கில் நாராயண் மோதிராம் ஞானி என்கிற சமையல்காரர் வசித்து வந்தார். பாபாவை நேரில் இருமுறை தரிசனம் செய்துள்ளார். பாபா மகாசமாதி அடைந்தபோது சமாதியை ஞானி தரிசனம் செய்யவில்லை. ஒரு வருடத்திற்குப் பிறகு ஞானி மிகவும் உடம்பு சரியில்லாமல் படுத்துவிட்டார். மிக மனக்கஷ்டத்துடன் சாயிபாபாவையே நினைத்து வந்தார். பாபா கனவில் தோன்றி ஒரு குகையிலிருந்து வருவதுபோல் தோற்றமளித்து, பயப்படாதே சரியாகிவிடும் என்றார். அதே மாதிரியாக அடுத்த நாளிலிருந்து குணமேற்பட்டு எட்டாவது நாள் நடக்க முடிந்தது. பிறகு சமாதியை சென்று சேவித்தபோது கனவில் பாபா தோற்றமளித்ததை நினைத்து உருகி அழுதார். பிறகு தீக்ஷிதரிடம் சென்று எல்லாவற்றையும் விவரித்தார். அவ்வாறு சொல்லும்பொழுது கண்கள் கலங்கி பாபாவை நினைத்து உருகினார்.

ஒரு நாளிரவு பாபா தாதாகேல்கரிடம், இந்த மனிதன் வாஜ் ஒரு நாளைக்கு ஒரு அத்தியாயாம் தான் படிக்கின்றான். ஆனால் இரவு முழுக்க விடாமல் ஏகநாத் பாகவதத்தை படிக்கும்படி நான் சொன்னேன் என்றார். இதைகேட்ட வாஜ் தூங்காமல் படிக்க ஆரம்பித்தார். இரவு முழுக்க விழித்திருந்தும், உடம்பில் அசதியில்லாமல் உற்சாகமாகவே இருந்தார். இது பாபாவின் ஆசீர்வாதம் தான்.

Dr. குணே, பாணா எஸ்டேட்டின் சர்ஜன். தன்னால் மருந்தினால் குணப்படுத்த முடியாத வியாதிகளுக்கு, பாபாவின் உதியைக் கொடுத்து குணப்படுத்தியதாக தீக்ஷிதருக்கு கடிதம் மூலம் தெரிவித்தார்.

1. பதினாறு வயது பெண் 12 நாட்களாக ரத்தமாக வாந்தி எடுத்து எந்த மருந்திற்கும் நிற்கவில்லை. கடைசியில் குணே, பாபாவின் உதியை நீரில் கலந்து அந்தப் பெண்ணை குடிக்கச் செய்தார். நெற்றியிலும் தடவி, ஒரு சிறிதளவு வாயிலும் போட்டார். அந்த நிமிடமே ரத்தமாக வாந்தியெடுப்பது நின்று, அந்த பெண் முழுக்க சொஸ்தமானாள்.

2. ஒரு மகம்மதிய காண்ட்ராக்டருக்கு நான்கு குழந்தைகளும் சீதபேதியால் அவஸ்தைப்பட்டனர். மருந்தோ ஆகாரமோ எது கொடுத்தாலும் உடனே வாயிலெடுத்தார்கள். எல்லா டாக்டர்களும் பரிசோதித்து மருந்து கொடுத்தும் குணமாகவில்லை. டாக்டர் குணே பாபாவைப்பற்றிச் சொல்லி உதியையும் கொடுத்தார். அந்த மகம்மதியர் மிகுந்த நம்பிக்கையுடன் உதியை வாங்கி குழந்தைகளுக்கு நெற்றியில் பூசி சிறிதளவு தண்ணீரில் கரைத்து குடிக்கவும் செய்தார். உடனே சீதபேதி சொஸ்தமாகி எல்லோரும் குணமடைந்தனர்.

3. ஒரு பதினான்கு வயதுப் பையன், முதுகில் நீர்கட்டி வியாதியினால் மிக்க வலியினால் கஷ்டப்பட்டான். வீட்டில் எல்லோரும் பயந்து எல்லா வித மருந்துக்கும் குணமாகாமல் கஷ்டப்பட்டார்கள். கடைசியில் டாக்டர் குணே பாபாவின் உதியைக் கொடுத்து குணமாக்கினார்.

டாக்டர் குணே பாபாவை நேரில் பார்த்ததில்லை அவர் மாமனாரிடமிருந்து பாபாவைப்பற்றி கேள்விப்பட்டு, பாபாவிடம் பக்தி பெருகியது. மாமனாரிடம் 5 ரூபாய் கொடுத்து அதை நாஸிக்கில் கோபால் தாஸ் மஹராஜிடம் சேர்ப்பிக்கும்படி சொன்னார். சீரடிக்குச் செல்லும் பொழுது நாஸிக்கில் இரங்கி பஞ்சவடிராமன் கோயிலுக்குச் சென்றார். அங்கு கோபால்தாஸ் மகராஜ் அநேக பக்தர்களின் மத்தியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து தான் 6.00 மணிக்கு சீரடிக்குச் செல்ல இருப்பதால் எப்படி அந்த கூட்டத்தில் 5 ரூபாயைக் கொடுப்பது என்று சிந்தித்தார். 6 மணியாகவே சீரடிக்கு கிளம்பலாம் என்று நினைத்து எழுந்தார். அப்பொழுது கோபால்தாஸ் மகராஜ் கூட்டத்தை

விலக்கி டாக்டரின் மாமனாரை பிடித்து இழுத்து கொடு என்று கை நீட்டினார். 5 ரூபாய் கொடுத்ததும் பிரசாதத்தை கொடுத்து சீக்கிரம் போ, இல்லாவிடில் ரயில் போய்விடும் என்று அனுப்பி வைத்தார். சீரடியில் பாபாவை வணங்கி எழுந்ததும், மேல் கூறிய எல்லா விஷயங்களையும் பாபா ஒன்று விடாமல் நேரில் பார்த்தது போலவே சொல்லி வைத்தார்.

## S.B. துமால்

S.B. துமால் நாசிக்கில் வசித்து வந்த மிகப்பெரிய லாயர். 1907ல் பாபாவிடம் வந்து சேர்ந்து மிக்க அத்யந்த பக்தரானார். இவரே கோடீஸ்வரரான பூட்டியை பாபாவிடம் அழைத்துவந்து நன்மைப் பெறச் செய்தார். பாபாவின் சமாதி கட்டிடம் பூட்டியாலேயே கட்டப்பட்டது.

1909ல் தமாலின் மனைவி இறந்து அவள் ஆத்மா சாந்தியடைய ஒவ்வொரு மாதமும் மாசிகம் செய்து வந்தார். ஆறாவது மாத மாசிகத்தை பாபா சீரடியில் செய்யும்படியும் அவளுக்கு பாபா சத்கதியளிப்பதாகவும் உறுதியளித்தார். அவ்வாறு செய்தபோது பாபா 15 ரூபாய் தக்ஷிணை துமாலிடமிருந்து வாங்கி அனுக்கிரகித்தார்.

துமாலின் மனைவியிறந்தபோது அவளுக்கு வயது 36தான். குழந்தைகளில்லாததால் விவாகம் செய்து கொள்ளும்படி உறவினர்களும் நண்பர்களும் தொந்தரவு செய்தார்கள். அவருடைய மாமனாரும் வற்புறுத்தினார். பாபாவை உத்திரவு கேட்கும்படி துமால் மாமனாரிடம் சொன்னார். பாபாவைக் கேட்ட போது சம்மதிக்கவில்லை. ஆக வாழ்க்கை முழுவதும் முதல் மனைவிக்குப் பிறகு கல்யாணம் செய்து கொள்ளாமலே வாழ்ந்தார்.

பாபாவின் வேலைக்காரனான ரகு என்பவனும் இன்னும் ஐந்து பேரும் ஒரு மார்வாடி பெண்ணை மானபங்கம் செய்ததாக கோர்ட்டில் தாவா செய்யப்பட்டு ஆறுமாதம் சிறை தண்டனை விதிக்கப்பட்டார்கள். குற்றவாளிகளுக்காக தாத்யாபடேல் அப்பீல் செய்ய விரும்பினார். பிரபல வக்கீல்கள் கபர்தே, தீக்ஷிதர், சாடே

ஆகியவர்களை ஆலோசித்ததில் தீர்ப்பு பலமாக இருப்பதால் அப்பீலில் ஜயமடைவது கஷ்டம் என்று சொன்னார்கள். தாத்யாபடேல் எப்படியாவது கைதிகளை விடுவிக்க எண்ணி, பாபாவிடம் விருப்பத்தைத் தெரிவித்தார். பாபா, துமாலிடம் செல்லும்படி கூறினார். ஆகவே படேல் துமாலை நாசிக்கில் சந்தித்து சொன்னபோது, தீர்ப்பை வாசித்துப்பார்த்து, அப்பீலில் ஜெயிக்க முடியாதென்று சொன்னார். பம்பாய் சென்று மிகத் திறமையான வக்கீல்களை வைத்து அப்பீல் செய்யும்படி கூறினார். ஆனால் படேல், பாபா தூமாலை வைத்தே அப்பீலில் ஆஜராகும்படி சொன்னதாகச் சொல்லவே, ஒன்றும் ஆலோசனை செய்யாமல், துமால் அப்பீல் மெமோவை தயார் செய்து டிஸ்டிரிக்ட் மாஜுஸ்ட்ரேட் வீட்டிற்கு சென்று சமர்பித்தார். ஜட்ஜ் அப்பீலையும், தீர்ப்பையும் படித்துப் பார்க்காமல் என்ன விஷயம் என்று கேட்டார். துமால் கேஸை விளக்கியதில் ஜட்ஜ் கேஸ் பலமானதாக இருக்கிறதே என்றார். துமால் "உள்ளூர் கட்சிகளின் அபிப்ராயத்தால் சாட்சிகள் அதிகமாக சொல்லி கேஸை பலப்படுத்திவிட்டார்கள்" என்று சொன்னவுடன் "அப்பீலில் வாதிகளெல்லோரையும் விடுதலை செய்து விட்டேன்" என்று சொல்லி அப்பீல் மெமோவை வாங்கி அதன் பேரிலேயே தீர்ப்பெழுதிவிட்டார். அது முடிந்தவுடன் துமாலைப் பார்த்து ஜட்ஜ் "உங்கள் பாபா முகம்மதியரா? இந்துவா? என்ன உபதேசம் செய்கிறார்," என்று கேட்டார். துமால் அவர் "இந்துவுமல்ல, மகம்மதியருமல்ல எல்லோருக்கும் மேம்பட்டவர். நேரில் சென்று அனுபவித்தால் தான் அவருடைய உபதேசம் பிடிக்கும்" என்று துமால் சொன்னார். அப்பீலைப் படிக்காமலேயே தீர்ப்பெழுதுவதென்றால் அது பாபாவின் அனுக்கிரகமில்லாமல் வேறெதுவாக இருக்கும்.

இந்த கேஸுக்காக துமாலுக்கு அவர் கேட்காமலே ரூபாய் 300 கொடுத்தார்கள். ஆனால் பாபா அதை அப்படியே தட்சிணையாக பெற்றுக்கொண்டார். ஏனென்றால் டிஸ்டிரிக்ட் மாஜிஸ்டிரேட்டின் மனதை மாற்றி அப்பீல் அனுகூலமாக பாபாதானே ஆசீர்வதித்தார். இதில் துமால் ஒன்றும் செய்யவில்லையே.

நிச்சயம் பாபாவின் கருணைதான், கேஸ் விசாரணையில்லாமலே ஜயம் பெற்றது. மேலும் துமால் சீரடிக்கு சென்று இந்த விஷயத்தை சொல்வதற்கு முன்பாக பாபா மசூதியிலிருந்தவர்களிடம் "உங்களுக்கு ஒரு அற்புதம் காட்டப் போகிறேன்." என்று சொன்னார். சிறிது நேரத்திற்குள் துமால் பாபாவை சென்று வணங்கி பாபாவின் கருணையினால் ஜட்ஜ் அப்பீலில் விசாரணையில்லாமலே கேஸ் தள்ளப்பட்டது என்று விவரித்தார். மசூதியிலிருந்தவர்கள் பாபா கூறிய அற்புத நிகழ்ச்சி இதுதான் என்று தெரிந்து கொண்டார்கள்.

துமாலின் மற்றொரு கேஸ்விஷயம் மூன்று சகோதரர்கள் சேர்ந்து அவர்களுடைய விரோதியை அடித்து எலும்பை ஒடித்து விட்டதாக கேஸ். துமால் அவர்களுக்காக ஜாமீனில் விடுதலை செய்ய அப்பீல் எழுதிக்கொண்டு கோர்ட்டிற்குச் சென்று வாதாடினார். (செஷன்ஸ்) ஜட்ஜ் ஒரு ஐரோப்பியர், ஜாமீன் கொடுக்க முடியாது என்று ஜட்ஜ் சொன்னார். துமால் பாபாவை பிரார்த்தித்து, ஜட்ஜ் பக்கம் திரும்பி, எலும்பு முறிந்து விட்டது என்று சான்று கொடுத்தது பட்டம் பெற்ற வைத்தியனல்ல. சாட்சிசொன்னவர்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள். நம்ப முடியாதவர்கள். மூன்று சகோதரர்களும் விவசாயிகள். ஜயிலில் அடைபட்டால் விவசாயம் கெட்டுப்போகும். குற்றவாளி என்று நிரூபணமானால் கடைசியாக ஜெயிலுக்கு அனுப்பலாம் என்று சொன்னார். உடனே ஜட்ஜ் ஜாமீனில் விடுதலை செய்தார்.

இதே கேஸ் விசாரணைக்கு வந்தது. பட்டம் பெறாதவைத்தியனால் சர்டிபிகேட் கொடுக்கப்பட்டு இருப்பதால் ஜட்ஜ் எல்லோரையும் விடுதலை செய்துவிட்டார். இது பாபாவின் கருணையல்லவா!

துமால் டிஸ்டிரிக்ட் போர்டு பிரசிடெண்டாக நியமிக்கப்பட்டு சுமார் 8 வருடம் வேலை செய்தார். ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான கடிதங்கள் கையெழுத்து இட வேண்டியிருந்தது. ஒருநாள் அம்மாதிரி கையெழுத்திடும் பொழுது ஒரு நண்பர் வரவே

அவருடன் பேச ஆரம்பித்து நெடுநேரமாகி கையெழுத்திடாமலே ஆபிஸிற்கு கடிதங்களை அனுப்பிவிட்டார். மறுநாளும் ஒழியாமல் வேறெங்கோ போக வேண்டியிருந்தது. அதற்கு அடுத்த நாள் கடிதங்களை வரவழைத்த போது எல்லா கடிதங்களும் கையெழுத்தாகியிருந்ததைக்கண்டு ஆச்சரியப்பட்டார். பாபாவின் அமானுஷ்ய சக்தியில்லாமல் வேறெதுதான் இம்மாதிரியாகியிருக்கும்.

துமால் டிஸ்டிரிக்ட் போர்ட் பிரசிடண்டாக இருந்ததால் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் அவர் பார்வையில் இருந்தது. ஒரு வருடம் தீபாவளிப்பண்டிகை மாதத்தில் 2,3 தேதிகளிலேயே வந்தது. கல்வி அதிகாரி ஒரு முகம்மதியர். அவர் துமாலிடம் அந்த மாதம் தீபாவளிக்கு முன்பாக சம்பளத்தை வாத்தியார்களுக்கு கொடுத்துதவ வேண்டுமென்று விண்ணப்பித்தார். துமால் அக்கௌண்ட்ஸ் இலாகாவை விசாரித்தபோது சர்க்கார் கிராண்ட் இல்லாமல் செக் கொடுக்கக் கூடாது என்று சொன்னார்கள். ஆனாலும் கல்வியதிகாரி தொந்தரவு செய்ததினால், துமால் பாபாவிடம் சீட்டுப்போட்டு பார்த்தார். "சம்பளத்தைக் கொடு" என்று பாபா அனுமதி கொடுத்தவுடனே செக் எழுதி அக்கௌண்ட்ஸ் ஆபீஸுக்கு அனுப்பினார். அவர்களும் அதை பாஸ் செய்து சம்பளமும் கொடுக்கப்பட்டது, உபாத்தியார்கள் சந்தோஷப்பட்டனர். அக்கௌண்ட்ஸ் ஆபீஸர் சொல்லியும் செக் கொடுத்ததால் என்ன நேருமோ என்று பயந்திருந்தார். ஆனால் பாபாவின் அருளால் அதிக நாள் கழித்து ஒரு ஆடிட்டர் இனிமேல் இவ்வாறு கிராண்ட் வருவதற்குமுன் செக் தர வேண்டாம் என்று குறிப்பு மட்டும் எழுதி விட்டுவிட்டார்.

லக்ஷாதிபதியான பூட்டி துமாலை இங்கிலாந்துக்கு படிப்பதற்கு அனுப்ப ஏற்பாடு செய்து பாபாவை உத்திரவு கேட்டார். ஆனால் பாபா மறுத்து விட்டார்.

1912ல் துமாலுக்கு ஒரு மேஜர் ஆபரேஷன் நடந்தது. அது மிகவும் பயங்கரமானது. ஆனால் குளோரோபாரம் கொடுத்தவுடன் துமாலின் தலைமாட்டில் பாபா ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருக்கக் கண்டு துமால் நம்பிக்கையுடன் இருந்து பூரண குணம் பெற்றார்.

ஒரு சமஸ்தானாதிபதியிடம் ஜர்கானாவில் லீகல் அட்வைசராக பணியாற்றிய போது ஒருநாள் சமஸ்தானாதிபதி துமாலின் வீட்டிற்கு வந்தார். அப்பொழுது துமால் சாப்பிட்டுக் கொண்டிருந்ததால் இலையைவிட்டு எழுந்து கொள்ள முடியாமலிருப்பதற்கு மன்னிப்பு கோரினார். ஆனால் சமஸ்தானாதிபதி நேரே பூஜை அறைக்குச் சென்று பாபாவின் படத்தை பார்த்து விட்டு மறுபடியும் சாப்பிடும் அறைக்கு வந்து அன்று முதல் துமாலுக்கு ரூ.50 சம்பளம் ஏற்றப்பட்டிருப்பதாகச் சொன்னார். துமால் கேட்காமலே சம்பளம் உயர்த்தப்பட்டது அந்த சமஸ்தானாதிபதிக்கு பாபா இட்ட கட்டளையேயாகும்.

ஆயி வீட்டிலிருந்து துமால், பாபாவின் படத்துடன் வழியேபோகும் போது, பாபா தடுத்து நிறுத்தி, இது என்ன? என்று படத்தைக் கேட்டார். பாபா அதில் இருப்பதாக துமால் பதில் சொன்னார். பாபா அதை வாங்கி, முன்னும் பின்னும் பார்த்து, வைத்துக்கொள் என்று சொல்லி திரும்பிக் கொடுத்து விட்டார். அதாவது பாபா அதை தொட்டு, ஆசீர்வதிக்க வேண்டுமென்று துமால் விரும்பியதால் பாபா இவ்வாறு செய்தார்.

ஒரு சமயம் பாபா துமாலிடம் உள்ள எல்லா பணத்தையும் பிடுங்கிக் கொண்டு பிறகு ரூ.50 வேண்டுமென்றார். துமால் தன்னிடம் ஒன்றும் இல்லை என்று கை விரித்தார். பாபா சாத்தேவிடம் கேட்கச் சொன்னார். அவ்வாறு சாத்தேவைக் கேட்டபோது அவர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். ஏனென்றால் அப்பொழுதுதான் தனக்கு பென்ஷனில் ரூ. 50 குறைவாக கொடுத்திருப்பதைப் பெற முடியுமா, பாபா உதவி கிடைக்குமா என்று பாபாவைப் பிரார்த்தித்த சமயத்தில் பாபா ஜயமாவதற்கு அறிகுறியாக துமால் மூலமாக அதே ரூபாய் 50 கேட்டதால் கண்டிப்பாக கிடைக்கும் என்று நம்பிக்கை பெற்றார். ஆகவே உடனே பாபாவிற்கு தட்சணை ரூபாய் 50 அனுப்பினார். பாபா ஆசீர்வதித்த மாதிரியாகவே அதே தினத்திலிருந்து ரூ. 50 பென்ஷனில் உயர்ந்தது.

## சாந்தாராம்

1909-ல் சாந்தாராமின் சகோதரருக்கு பம்பாயில் தொண்டைக்கருகே ஆபரேஷன் நடந்தது. அதைக்குறித்து வீட்டில் எல்லோரும் கவலைப் பட்டுக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு சாது வந்து ஒன்றிரண்டு ரொட்டித்துண்டு கிடைக்குமா என்று கேட்டார். சாந்தாராமின் அண்ணி அவரை உட்கார வைத்து இலைபோட்டு பரிமாறினார்கள். ஒரு பெரிய மகான்போல் தோன்றியதால் வெண்டைக்காய்கறி போடுவது தகாது என்று எண்ணி போடாமலிருந்தாள். ஆனால் அந்த சாது வெண்டைக்காய்கறிபோடு என்று வாங்கிச் சாப்பிட்டார். பிறகு எல்லோரையும் ஆசீர்வதித்து சாயிபாபாவின் அருளினால் ஆபரேஷன் சுகமாக முடிந்தது என்றார். இதுவே பாபாவைப் பற்றி முதன் முதலாக சாந்தாராம் கேள்விப்பட்டது. அன்றிரவு சாந்தாராமின் தகப்பனார் ஆபரேஷன் நடக்கும் பொழுது ஒரு சாது வந்து நோயாளியின் தலையைத்தடவி ஆசீர்வதித்தார் என்று சொன்னார். ஆக அது பாபாவே அல்லாமல் வேறு யாராக இருக்க முடியும்!

1912-ல் முதன் முதலாக சாந்தாராம் சில நண்பர்களுடன் சீரடிக்குச் சென்றார். போகும் வழியில் கோபர்கானில் ஸ்டேஷன் மாஸ்டர் பாபாவைப்பற்றி கண்டபடி பேசியதால் சாந்தாராமின் மனம் கலங்கிற்று. இவ்வளவு கஷ்டப்பட்டு யாரைப்பார்க்க போகிறோமோ அவர் உண்மையில் சந்நியாசியா என்று சந்தேகம் தோன்றியது. பாபாவைச் சென்று தரிசித்தவுடன் பாபா “என்னை மாம்லத்தாரிடம் உத்திரவு பெறாமல் வந்து விட்டாயே. இனி அம்மாதிரி செய்யாதே என்றார்.” இதைக் கேட்டதும் பாபாவின் அபார ஞான திருஷ்டியை அறிந்து ஸ்டேஷன் மாஸ்டரினால் தன்மனம் கலங்கினதை நினைத்து வருந்தினார். வெகு தூரத்திலுள்ள விஷயங்களை கூட அறியும் மகான் பாபா என்று தெரிந்து கொண்டார். மேலும் பாபா சாந்தாராமைப் பார்த்து மற்றவர்களிடம் “நான் இந்த மனிதன் வீட்டிற்கு சாப்பாட்டிற்காக போயிருந்தேன். வெண்டைக்காய் கறி போடவில்லை. ஆனால், நான் விடாப்பிடியாக கேட்டு சாப்பிட்டேன்” என்றார். ஆக பாபாவே சாதுவாக

தோன்றி தன் வீட்டிற்கு சென்று சாப்பிட்டார் என்று சாந்தாராம் தெரிந்து கொண்டார்.

அப்பொழுது சாந்தாராம் டஹானாவில் வேலையாக இருந்தார். வேறு இடத்திற்கு மாற்றுதல் பெறுவது அவ்வளவு சுலபமல்ல. ஆனாலும் பாபா உத்திரவு வாங்கும் பொழுது பம்பாய்க்கு வேலைக்கு வா என்றார். அதே மாதிரியாக பம்பாயிக்கு சாந்தாராம் மாற்றப்பட்டார்.

சாந்தாராம் ஒரு தடவை சீரடிக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது ஹரிபாவ்பான்ஸே என்பவர் ஓடி வந்து "எனக்காக பாபாவை வேண்டிக்கொள். ஒரு பாவமும் அறியாத என்னை, பணத்தை கையாண்டு விட்டதாக பொய்கேஸ் ஜோடித்து தண்டனை வாங்கும்படியான நிலையிலிருக்கின்றேன். பாபாவிடம் எனக்காகச் சொல்" என்று சொன்னார். சாந்தாராம் சீரடிக்குச் சென்று பாபாவை நமஸ்கரித்தவுடன், அவன் ஒன்றும் கவலைப்பட வேண்டாம், அப்பீலில் விடுதலையாகும் என்று அவனிடம் சொல் என்றார். சாந்தாராம் ஒன்றும் கேட்காமலே ஹரிபாவைப்பற்றி அற்புதமாக அறிவித்து விட்டார். பிறகு என்ன? அதே மாதிரியாக அவருக்கு அப்பீலில் விடுதலையாகி விட்டது.

அப்பொழுதே பாபா பொதுவாக பைத்தியங்களை நம்பக்கூடாது என்று சொன்னார். அதன் அர்த்தம் அப்பொழுது விளங்கவில்லை. ஆனால், ஊருக்கு திரும்பியவுடன் ஒருநாள் பாபாவை பூஜை செய்து கொண்டிருந்த போது ஒரு சித்தபிரமையுள்ளவன் சாந்தாராமையே நோக்கி கொஞ்ச தூரத்தில் வாசல் படியில் நின்றிருந்தவன், திடீரென்று சாந்தாராமின் மீது பாய்ந்து, இரண்டு கைகளாலும் அவர் கழுத்தைப் பிடித்து நெருக்கினான். உன் இரத்தத்தை குடிப்பேன் என்று சொல்லி திறந்த வாயால் தொண்டையை கவ்வ முயன்றான். சாந்தாராம் அவன் வாயினுள் தன் கையையும் உத்திரணி கரண்டியையும் விட்டு சமாளித்தார். ஆனாலும் சிறிது நேரத்திற்குள் மூர்ச்சித்து விழுந்தார். அவரது தாயாரும் மற்றவர்களும் அவரை விடுவித்து காப்பாற்றினார்கள். அடுத்த தடவை சாந்தாராம் சீரடிக்குச் சென்ற

போது, அங்கு பாபா, அண்ணா சிங்சினிகரைப் பார்த்து "அண்ணா நான் ஒரு நிமிஷம் தாமதித்திருந்தால் இந்த மனிதன் உண்மையில் இறந்திருப்பான். அந்தப் பித்தன் கைகளால் இவன் கொரவளையையே பிடித்து விட்டான். ஆனால் நான் விடுவித்தேன். என்ன செய்கிறது என்குழந்தைகளை நான் காப்பாற்றா விட்டால் வேறு யார் காப்பாற்றுவார்? என்றார்.

31-3-1915-ல் சாந்தாராமும், பான்ஸே இன்னும் சிலர் ஒரு அடர்ந்த காட்டு வழியாக ரான்ஷேட் கணவாயில் போய்க் கொண்டிருந்தார்கள். அதில் புலிகள் பதுங்கி இருக்கும், இரவோ இருண்டிருந்தது. திடீரென்று வண்டி நின்று எருதுகள் பயந்து பின்னிட்டுச் சென்றன. அண்டைப்பக்கத்தில் சென்றிருந்தால் எருதுகள், வண்டியில் உள்ளவர் எல்லோரும் ஆழமான அருவியில் விழுந்து செத்திருப்பார்கள் பான்ஸே சாந்தாராமிடம் முன் பக்கம் கைக்காட்டினார். அங்கு ஒரு புலியின் கண்கள் பளீர் என்று பிரகாசித்தன. பதுங்கிக் கொண்டு பாய்வதற்கு தருணம் பார்த்திருந்தது. வண்டி பின்னால் போய் விழாமலிருக்க, பான்ஸே கீழே இறங்கி ஒரு கல்லை முட்டி வைப்பதற்கு சாந்தாராமை எருதுகளின் தலைக் கயிற்றை பிடித்துக் கொள்ளச் சொன்னார். சாந்தாராம் அதைப் பிடித்துக் கொண்டு பாபாவை நினைத்து, ஹே சாயிபாபா ஓடிவா என்று உரக்கச் சொன்னார். மற்றவர்களும் அம்மாதிரியே உரக்க சொல்ல ஆரம்பித்தனர். புலிக்கு கிலிபிடித்து வண்டி ஓரமாய் ஓடிப்போயிற்று. பாபாவின் பேரில் உள்ள நம்பிக்கை, சமயத்தில் அவர் நாமத்தைச் சொல்லி கூப்பிட, பாபா கொடுத்த தைரியமே அவர்களை காப்பாற்றியது.

ஒரு சமயம் சாந்தாராம் சீரடிக்குப் புறப்படும் பொழுது ஸ்டேஷனில் சாமந்த் என்பவர் பாபாவிற்கு கொடுப்பதற்கு ஒரு தேங்காயும், இரண்டு அணா தட்சிணையும் கொடுத்தார். சாந்தாராம் சீரடிக்குச் சென்று தேங்காயைக் கொடுத்து நமஸ்காரம் செய்தார். ஆனால் இரண்டு அணா தட்சிணையை அடியோடு மறந்து விட்டிருந்தார். சீரடியை விட்டு புறப்படும் பொழுது, அனுமதி கேட்டபோது, பாபா சரி சித்தலி வழியாகப்போ. ஆனால் என்

இரண்டணாவை ஏன் வைத்துக் கொண்டாய்? என்று கேட்டார். உடனே தட்சிணையாக சாமந்த் கொடுத்த இரண்டணா ஞாபகத்திற்கு வந்து, பாபாவிடம் கொடுத்து மன்னிப்புக் கேட்டார். பாபா சிரித்துக் கொண்டே நீ எது ஏற்றுக் கொண்டாலும் சரியாகச் செய். இல்லாவிடில் ஒன்றையும் ஏற்றுக் கொள்ளாதே என்றார்.

அப்பாஜி டாச்னே என்பவர் வெகுகாலமாக வியாதியாக இருந்தார். மற்ற வைத்தியர்கள் பிழைப்பதரிது என்று கை விட்டார்கள். சாந்தாராம் அவர் அருகில் பாபா படத்தை மாட்டி, எதிரில் அகண்ட தீபம் நெய் விளக்கும் போட்டு, ஊதுவத்தி கொளுத்தி விடாது பாபாவை பிரார்த்தித்தவுடன் டாச்னே தேக சுகமடைந்தார்.

சாந்தாராமுக்கு சில குழந்தைகள் பிறந்து அல்ப ஆயூசாக இறந்தன. மாதவராவ்தேச் பாண்டே சாந்தாராமின் மனைவியை அழைத்துக் கொண்டு பாபாவிடம் சென்று அவளுடைய முந்தாணியில் ஒரு தேங்காயை போடும்படி வேண்டினார். பாபா அவ்வாறே தேங்காயை போடும்போது அவர் கண்களில் நீர் தலும்பியது. தன் காலடியில் உட்கார்ந்து கால்களை பிடிக்கும்படி சாந்தாராமுக்கு பாபா கட்டளையிட்டார். அவ்வாறு காலைப்பிடிக்கும்பொழுது சாந்தாராம் பாபாவிற்கு தன்னை பைத்தியக்காரனிடமிருந்து காப்பாற்றியதற்கு நன்றி செலுத்தினார். உடனே பாபா கடவுளே எல்லாவற்றையும் செய்விக்கிறார் என்றார்.

பாபா ஆசீர்வதித்தபடி, சாந்தாராமிற்கு ஒரு பிள்ளை பிறந்தான். அவன் மூல நட்சத்திரத்தில் பிறந்ததால் 3வது வயதில் சாந்தாராமின் மனைவி இறந்தாள். இதைத் தெரிந்தே பாபாவின் கண்களில் தேங்காய் போடும்பொழுது கண்ணீர் சிந்தியது.

1916-ல் சாந்தாராம் படகில் ஒரு ஆற்றைக் கடக்கும்பொழுது நடு ஆற்றில் படகு கவிழ்ந்து தண்ணீரில் விழுந்துவிட்டார். உடனே பாபாவை சாந்தாராம் தியானம் செய்தார். தோணியை ஓட்டி வந்த பையன், ஒரு கப்பலுடன் இணைந்த கம்பியை சாந்தாராமை பிடிக்க செய்து, கப்பலை கூவியழைத்து அவர்கள் படகை அனுப்பி சாந்தாராமை காப்பாற்றினார்கள்.

முதல் மனைவி இறந்தவுடன் இரண்டாவது மனைவிக்கு ஏற்பாடு நடந்தது. பாபா பணத்தோடு வரும் (சிலாக்கியம்) பெண் வேண்டாமென்றும் வேறு ஒரு பெண்ணைக் காண்பித்து கல்யாணம் நடத்தச் சொன்னார். சில நாட்களில் ஒரு ஏழைப் பெண்ணை சாந்தாராமிற்கு ஏற்பாடு செய்ய அப்பெண்ணின் சித்தப்பா பெண்ணுடன் வந்தார். சாந்தாராமின் தாயார் அந்தப் பெண், கனவில் பாபா காண்பித்தவளாக இருக்கவே அப்பெண்ணையே மணமுடித்தனர்.

சாந்தாராமின் 8 மாதக் குழந்தையின் மீது பட்டாசு நெருப்பினால் தீப்பிடித்தது. சாந்தாராமின் மனைவி வெளியே ஏதோ வேலையாக இருந்தாள். ஒரு பக்கிரி ஓடி வந்து "அங்கே என்ன நடக்கிறது பார்" என்று சத்தம் போட்டார். சாந்தாராமின் மனைவி வீட்டினுள் ஓடிச் சென்று பார்த்து குழந்தை துணி தீப்பிடித்திருப்பதைப் பார்த்து பயந்து துணியை கழற்றி எறிந்தாள். குழந்தைக்கு சிறிதும் காயமில்லாமல் தப்பியது. பக்கிரி ரூபமாக பாபாவே வந்து குழந்தையை காப்பாற்றினார்.

சாயிநாத் 2 வயது ஆகும்போது திடீரென்று மாடியிலிருந்து கீழே விழுந்தான். கீழே காரை செங்கல் குவியலாக இருந்தது. ஆனாலும் குழந்தை ஒரு காயமில்லாமல் நின்று கொண்டிருந்தான். பாபா என்னை தாங்கி கீழே வைத்தார், என்று குழந்தை சொல்லியது.

சாயிநாத் அவன் தம்பியிடம் ஒரு மோதிரத்தைக் கொடுத்தான். அவன் அதை வாயில் அடைத்துக் கொண்டு தொண்டையில் அந்த மோதிரம் மாட்டிக் கொண்டது. எல்லோரும் கலவரமடைந்து தொண்டையிலிருந்து வெளியே எடுக்க எல்லாவித சிகிச்சையும் செய்து பார்த்தனர் பலிக்கவில்லை. குழந்தை மூச்சு திணறியது. சாந்தாராம் பாபாவை மனமுருக பிரார்த்தித்து உதியை எடுத்து குழந்தையின் வாயில் போட்டார். பிறகு வாயில் கைவிட்டபோது மோதிரம் உடனே கையில் சிக்கி வெளியே பிடித்து இழுத்து குழந்தை பாபாவின் அருளால் உயிர் தப்பியது.

வாசுதேவ் என்கிற சாந்தாராம் குழந்தைக்கு மார்பில் வெடிப்புண் உண்டாயிற்று. அந்த புண்ணை ஆபரேசன் செய்ய டாக்டர் பயந்து மறுத்தார். சாந்தாராம் பாபாவைப் பிரார்த்தித்து உதியை புண்ணின் மேல் தூவினார். உடனே சிரங்கு உடைந்து நீர் வெளியே வந்தது. வாய் பெரிதாக இருந்து பயங்கரமாக இருந்தது. ஆனாலும் சாந்தாராம் பாபாவை நம்பி உதியை விடாமல் புண்ணின்மேல் பூசி வந்தார். ஹாதவ் என்கிற டிப்டி கலெக்டர் "அந்தப்புண் உதியினால் ஆறுமா, எத்தனை நாளில் ஆறும்" என்று சாந்தாராமைக் கேட்டார். இருப்பத்து நாலு மணிநேரத்தில் ஆறும் என்று சாந்தாராம் பதில் சொன்னார். அன்றிரவு பாபா சாந்தாராமின் "கனவில் வந்து ஏன் 24 மணி நேரம் சொன்னாய். உடனே ஆறும் என்று சொல்லக்கூடாதா?" என்றார். சாந்தாராம், கனவிலேயே பாபாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அடுத்தநாள் புண் ஆறியிருந்தது. ஹாதவ் ஆச்சரியப்பட்டார்.

ஹாதவ்வின் 5 வயது பையனுக்கு விடாமல் ஜுரம் அடித்தது. 6வது நாள் சாந்தாராம் பாபாவின் உதியை கொடுத்தார். அடுத்தநாளே ஜுரம் நின்றது. டாக்டர் 9வது நாள் வரை ஜுரம் அடிக்கும் என்று சொன்னது, 3 நாள் முன்னதாகவே பாபாவின் உதியின் மகிமையால் ஜுரம் நின்றது.

1935ல் ஸ்டவ் அடுப்பில் பால் காய்ந்து கொண்டிருந்தது. இரண்டு வயதுள்ள ஆனந்தன் என்ற குழந்தை ஓடி வந்து ஸ்டவ் இடறி கீழே விழுந்தான். ஆனால் பாபாவின் அனுக்கிரகத்தினால் ஒரு துளியும் காயம்படாமல் குழந்தை தப்பினான்.

1936ல் சாந்தாராமின் குழந்தைகள் இரண்டும் "பாரோஸ் ஸ்நேக்ஸ்" என்கிற வெடிவஸ்துவை பெப்பர் மிட்டாயாக நினைத்து விழுங்கிவிட்டனர். நாக்குவாய் எல்லாம் எரிச்சலிடவே கதறினார்கள். டாக்டர் வாந்தி பண்ணுவதற்கு எவ்வளவு மருந்து கொடுத்தும் ஆகவில்லை. முடிவில் சாந்தாராம் பாபாவை நினைத்து உதியையும் தீர்த்ததையும் கொடுத்தார். உடனே குழந்தை வாந்தி செய்து சௌக்கியமானார்கள்.

ஆபீஸில் உள்ள காஷியர் ரூ. 3500க்கு கணக்கு செய்ய முடியாமல் வேலைபோகும் போலிருந்தது. உடனே சாந்தாராமிடம் வந்து யோசனை கேட்டார். சாந்தாராம் சீரடிக்குச் செல்லும்படி புத்திமதி சொன்னார். அம்மாதிரியாகவே சீரடி சென்று பாபாவை வணங்கி திரும்பியவுடன் சிக்கல் தீர்ந்து நிம்மதியடைந்தார்.

இதே மாதிரியாக சிட்னிஸ் என்பவர் சில தவறுதலுக்காக வேலையிலிருந்து நீக்கப்பட்டார். கடைசியில் சாந்தாராமின் யோசனைப்படி சீரடி சென்று வரவே மறுபடியும் வேலையில் அமர்ந்து சந்தோஷமடைந்தார்.

1929ல் சாந்தாராமின் இரண்டாவது மனைவி இறந்தாள். அவளுடைய அஸ்தியை நாசிக்குக்கு எடுத்துச் சென்று கோதாவரியில் கரைக்க எண்ணமிட்டு தன் வயதான தந்தையையும், 3 வயது பையனையும் வீட்டில் தனியே விட்டு நாசிக்குக்கு புறப்பட்டார். வண்டியில் ஒருவர் சாந்தாராமை விசாரித்து குளிர் நாளில் படுக்கை, போர்வை இல்லாமல் சென்றால் மிகவும் கஷ்டப்படுவாரே என்று விசாரித்தார். சாந்தாராம் தான்அவசரமாக மனது கவலையில் நிரம்பி அஸ்தியை கரைக்கச் செல்வதால் ஒன்றுமே தோன்றாமல் கிளம்பினதாகச் சொன்னார். அந்த பிரயாணி ஒரு கம்பளியையும் படுக்கையும் கொடுத்து தன் பெயர் கணபதி சங்கரன் என்றும் பம்பாயில் சித்திரசாலை கலாசாலையில் வேலை செய்வதாகவும், தன் எஜமானன் ஸிம்லாவிற்கு சென்றிருப்பதால் நாசிக்கைப் பார்ப்பதற்கு சந்தர்ப்பம் கிடைத்ததால் கிளம்பினதாகவும் சொன்னார். மேலும் சாந்தாராமிடமிருந்து பணம் முதலியவற்றை தான் வாங்கி வைத்துக் கொண்டு அவரை தூங்கும்படி செய்தார். நாஸிக்கில் சாந்தாராமை எழுப்பி பல் துலக்கச் செய்து தேத்தண்ணீர் வாங்கிக் கொடுத்து அவரை தூங்கும்படி செய்தார். 12 நாட்கள் வேலைக்காரனைப்போல் எல்லா பணிவிடைகளையும் செய்து உதவினார். புரோகிதரை ஏற்பாடு செய்து சாந்தாராம் கொண்டு வந்த எலும்புகளை கோதாவரியில் கெட்டியாக பிடிக்கச் செய்து சடங்கு முடிகிறவரையில் கையினால் அழுத்திப்பிடிக்கச் செய்தார். அப்பொழுது எலும்புகள் கல்கண்டு கட்டியைப்போல் நீரில் கரைந்து செல்வதை

சாந்தாராம் உணர்ந்தார். 12ம் நாள் கணபதி சங்கரனுக்கு உடனே வரும்படி பம்பாயிலிருந்து தந்தி வந்தது. கணபதி சங்கரனும் வாங்கிய பணத்திற்கு சரியாக கணக்கைச் சொல்லி மீதியை சாந்தாராமிடம் திருப்பிக் கொடுத்து ஊருக்குத் திரும்பினார். சாந்தாராம் சில நாட்களுக்குப் பிறகு கணபதி சங்கரன் சொன்ன விலாசத்திற்கு சென்று விசாரித்ததில் அம்மாதிரி நபர் அங்கு யாருமே வேலை செய்யவில்லை என்று கேட்டறிந்தார். இவ்வளவு கஷ்டப்பட்டு சாந்தாராமிற்கு உதவினவர் பாபாவைத் தவிர வேறு யாராக இருக்க முடியும். பக்தர்களுக்காக எதையும் செய்யவல்ல பாபாவின் அற்புத லீலையை யாரால் உணர முடியும்.

3-12-1928ல் சாந்தாராம் தெருவில் திண்ணை பேரில் உட்கார்ந்திருந்தார். அப்பொழுது நோல் என்பவர் கார் ஓட்டி வந்தார். விட்டல் என்பவருடைய பெண் வண்டியில் தாக்கப்பட்டு விழுந்தாள். சாந்தாராம் பாபாவை கூவி அழைத்து உதவிக்கு வேண்டினார். கார் நின்றவுடன் குழந்தையை எடுத்து ஆஸ்பத்திரிக்குச் சென்றார். குழந்தை முழுவதும் நசுங்குவதற்குமுன் பிரேக் சரியாக இல்லாத வண்டி நின்றது ஒரே ஆச்சரியம். எப்படியோ ஒரு சிறிய கல் கியர் பாக்ஸில் நுழைந்ததால் வண்டி திடீரென்று நின்றது. டாக்டர் குழந்தை உயிருக்கே அபாயம் என்றார். ஆனால் சாந்தாராம் சாயிபாபா அவளைக் காப்பாற்றுவார் என்று சொன்னார். அதே மாதிரியாக குழந்தையும் 15 நாளில் உயிர் பிழைத்தது. ஆனால் பேசும் சக்தியை இழந்திருந்தது. சாந்தாராம் தாஸ்கணுவிடம் இச்சம்பவத்தை சொன்னபோது குழந்தைக்கு மறுபடியும் உதியைக் கொடுக்கச் சொன்னார். அவ்வாறு செய்ததில் குழந்தை உடனே பேச ஆரம்பித்தது.

1926ல் சாந்தாராமின் சொப்பனத்தில் பாபா தோன்றி ஓ.எ. கோதாரியிடம் அவர் செய்ய நினைப்பதை செய்ய வேண்டாமென்று சொல்லச் சொன்னார். அந்த விஷயம் எது என்று புரியாமல் மறுநாள் ஓ.எ. கோதாரியிடம் சாந்தாராம் பாபாவின் கட்டளையைச் சொன்னபோது அதற்காக வந்தனம் செய்து நன்றியுரைத்தார். அந்த விஷயம் ஓ,எ, கோதாரி சந்நியாசியாக மாற விரும்பினார். பாபாவின் கட்டளைப்படி அந்த எண்ணத்தை விட்டுவிட்டார்.

5 அளவுகள் கட்டுவதற்குத்தான் போதிய பணம் இருந்தது. ஆனால் பாபாவின் அனுக்கிரகப்படி 25 அளவுகள் கட்ட முடிந்தது. இக்கட்டிடத்திற்கு அருகே ஒரு கிணறு தோண்டியபோது தண்ணீர் உப்பு கரித்ததாக இருந்தது. பாபாவை வேண்டி இன்னும் ஆழமாக தோண்டியதில் நல்ல ஜலம் கிடைத்ததாக ஆயிற்று.

## Dr. மல்கி

மல்கியின் சகோதரியின் மகன் பரீட்சையில் B.A. முதல் வகுப்பில் தேறின கெட்டிக்காரப் பையன், திடீரென்று கிறிஸ்தவ மதத்திற்கு மாறிவிட்டான். அந்தப் பையனை அதிகமாக நேசித்து வந்த தகப்பனும், தாயும் மிகவும் விசனமுற்றார்கள். காகா சாகேப் தீக்ஷிதர் அவ்விருவரையும் சீரடிக்கு அழைத்துச் சென்று, பாபாவிடம் மனச் சாந்தியை அடையச் செய்தார். இவர்களது 2வது குமாரனும் B.A. பரீட்சையில் தேறி ரயில்வேயில் உத்தியோகமாயிருந்தார். அவனுக்கு ஒரு கொடிய நோய் எலும்பில் புண் ஏற்பட்டு சிறந்த வைத்தியர்களாலும் Dr. மல்கியாலும் குணப்படுத்த முடியவில்லை. ஆனால் பாபாவிடம் அழைத்துச் சென்றபோது, உதியினாலேயே அந்தப் புண் ஆறியது. ஆக Dr. மல்கியின் சகோதரர் பாபாவிடம் மிக்க பக்தியுடன் பஜனை முதலியன செய்து கொண்டு அடிக்கடி சீரடி சென்று பாபாவை தரிசித்து வந்தார்கள்.

1916-ல் Dr. மல்கி அதிக ஜுரத்தினால் மிகவும் கஷ்டப்பட்டார். ஜுரம் 105, 106க்கு கொஞ்சமும் குறையாமலே 15 நாட்களுக்கு மேல் வாட்டியது. ஊரிலிருந்த டாக்டர்கள் இயன்ற வரையில் கஷ்டப்பட்டு ஜுரம் குறையவே இல்லை. ஒரு வியாழக்கிழமை Dr. மல்கியின் சகோதரர் பஜனை செய்வதை Dr. மல்கி சிரத்தையுடன் கவனித்தார். நாஸ்திகனாகவே இருந்து வந்த Dr. மல்கி இந்த பஜனையைக் கேட்டு மெய் மறந்து பாபாவை நினைத்து வணங்கினார். அன்றிறவு Dr. மல்கிக்கு ஒரு கனவு ஏற்பட்டது. நீள கப்னி அணிந்த ஒரு கிழவர் Dr. மல்கியிடம் வியாதியைப் பற்றி கவலைப்பட வேண்டாமென்றும், உடனே சீரடிச் சென்று பாபாவை தரிசித்தால், ஜுரம் நீங்கி விடுமென்றும் சொன்னதாக கனவு அமைந்தது. உடனே அலறி துடித்து எழுந்தார். Dr. மல்கியின் சகோதரன் ஓடிவந்து Dr.

மல்கி முழு வியர்வையுடனும், கண்ணீருடன் இருப்பதைக் கண்டார்கள். அப்பொழுது Dr. மல்கி சகோதரனிடம் கனவைப்பற்றி சொன்னார். உடனே ஜுரம் இறங்க ஆரம்பித்து முழுக்க குணமாயிற்று. ஆனாலும் பாபாவிடம் சென்று தரிசிப்பதை மறந்து விட்டார்.

Dr. மல்கி, ஒரு கண் ஆபரேஷன் செய்யும்பொழுது கொஞ்சம் கெடுதியான தண்ணீர் சதை அறுத்த இடத்திலிருந்து பீறிட்டு Dr. மல்கியின் கண்ணின் மேல் தெரித்தது. அப்பொழுது அதை கவனியாமல் விட்டதால் கண் வீக்கமாகி கஷ்டத்தைக் கொடுத்து இப்பொழுது தான் மறுபடியும் பாபாவின் ஞாபகம் வந்தது. இந்த கண் பழுதாகிவிடும் என்று ஒரு பெரிய டாக்டர் சொன்னார். ஆனால் பாபாவை விடாமல் ஸ்மரித்து தவறை உணர்ந்து உடனே பாபாவிடம் வருவதாக உறுதியளித்தவுடன் பாபாவின் கருணையால் கண் குணமாகி விட்டது. பிறகு மனைவியுடன் சீரடிக் கிளம்பினார். ஆனால் மண்மாடு ஸ்டேஷனில் ஒரு ஆபீஸ் கிளார்க் பாபாவைப் பற்றி மோசமாக தூற்றியதால் பம்பாய்க்கு திரும்பிவிட்டார். ஆனால் Dr. மல்கியின் சகோதரன் விடாப்பிடியாக Dr. மல்கியை அழைத்துக் கொண்டு சீரடி சென்று பாபாவை தரிசிக்க வைத்தார். பாபாவை தரிசித்தவுடன் பாபா Dr. மல்கி மண்மாட்டிலிருந்து திரும்பி ஊருக்கும் போனதை குறிப்பிட்டு சொல்லவே மல்கிக்கு வெட்கமாகிவிட்டது.

பாபாவிடம் நான்கு நாட்கள் தங்கியிருந்து ஊருக்கு திரும்பும்போது, Dr. மல்கி ஞானேஸ்வரியை படிக்க வேண்டுமென்றும், ஊருக்கு போனவுடன் மேஜை மீது பெரிய உத்தியோகத்தில் பிஜபூர் மாற்றம் உத்தரவு இருக்குமென்றும் பாபா சொன்னார். அதே மாதிரியாக அந்த ஆர்டரை Dr. மல்கி பார்த்தார். ஞானேஸ்வரியும் படித்து வந்தார். பாபாவிடம் ஆழ்ந்த பக்தி செலுத்தி சிறந்த நன்மையடைந்தார்.

## நாகேஷ் ஆத்மராம்

பாபாவின் சமாதிக்குப் பிறகு நாஸிக்கைச் சேர்ந்த நாகேஷ் ஆத்மராம் பாபாவிடம் பக்தி செலுத்த ஆரம்பித்தார். இவர் சப் இன்ஸ்பெக்டராக இருந்து காயமாவதற்கு அதற்கான பரீட்சையில்

தேராமலே பாபாவின் கருணையால் காயம் செய்யப்பட்டார். ஒரு மகா சமாதி அன்று பாபாவை சேவிக்க ஆவல் கொண்டார். ஆனால் சப் இன்ஸ்பெக்டருக்கு லீவ் கொடுப்பதில் தயக்கமேற்படுமாதலால் பாபாவை சீரடிச் சென்று வர பிரார்த்தித்தார். அதே நாள் பாபா கனவில் சில காகிதங்களில் கையெழுத்துப் போடுவதுபோல் காட்சியளித்தார். அது லீவிற்காக ஒரு மனு அனுப்பும்படி பாபா உத்திரவிட்டதாக நாகேஷிக்கு தோன்றியது. அவ்வாறே செய்ததில் தடங்கல் இல்லாமல் லீவ் சாங்ஷன் ஆகியது.

1929ல் இந்து மகம்மதிய சண்டைகள் அடிக்கடி ஏற்பட்டது. நாகேஷ்,. பரேவ் என்னுமிடத்தில் வேலை செய்து கொண்டிருந்தார். பந்தோபஸ்து வேலையில் நாகேஷ் ஈடுபட்டிருக்கும்பொழுது அவருக்கு தலைவலியும் ஜுரமும் ஏற்பட்டது. ஆனால் வேலையிலிருந்து ஒய்வும் பெற முடியவில்லை. அப்பொழுது பாபாவை ஸ்மரணை செய்து காப்பாற்றும்படி வேண்டினார். சிறிது நேரத்தில் ஒரு ஆங்கில போலீஸ் உத்தியோகஸ்தர் அவ்விடத்தின் நிலையை பார்க்க வந்தார். நாகேஷைப் பார்த்து “நீ ஜுரமாக இருக்கிறாய். ஓய்வு எடுத்துக்கொள்” என்று கூறி அருகே நின்றிருந்த போலீஸ் சூப்பிரண்டிடம் போய் சிபாரிசு செய்து நாகேஷ் வீட்டுக்கு போக அனுமதி வாங்கி கொடுத்து நாகேஷ் இடத்தில் அவர் நின்று கொண்டு வேலை பார்த்தார். ஒரு மணி நேரத்தில் அதே இடத்தில் கலகம் ஏற்பட்டு அந்த ஆங்கில போலீஸ் அதிகாரி கொல்லப்பட்டார். இவ்வாறாக இந்த அபாயத்திலிருந்து நாகேஷை பாபா காப்பாற்றினார்.

இந்த ஜுரம் இறங்காமல் போலீஸ் ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆகி டைப்பாய்ட் ஜுரமென்று கண்டுபிடிக்கப்பட்டு ஆஸ்பத்திரியில் படுக்கையில் இருந்தபோது ஒரு கனவு ஏற்பட்டது. ஒரு கருப்பு உடுப்பு உடுத்த மனிதன் நாகேஷை இழுப்பதாகவும், நாகேஷ் பாபாவை விடாமல் ஸ்மரணை செய்வதாகவும், உடனே வெள்ளை உடுப்புடன் ஒருவர் ஓடிவந்து அந்த கருப்பு மனிதனை விரட்டி, காப்பாற்றுவதாகவும் கனவு அமைந்தது. கண்விழித்தபோது பாபாவே நேரில் தோன்றி ஆசீர்வதிப்பது போலிருந்தது. உடனே ஜுரமும் இறங்கி வெகு சீக்கிரத்தில் குணமாகியது.

இதே சமயத்தில் கிராமத்தில் நாகேஷ் தாயார் ஒரு கனவு கண்டார். அதில் பாபா "பயப்படாதே லீவ் கொடுக்கப்பட்டு உன் மகனை சௌக்கியமாக அழைத்து வருகிறேன்" என்று சொன்னார். அம்மாதிரியாகவே 3 மாதம் நாகேஷிக்கு லீவ் கொடுக்கப்பட்டு கிராமத்திற்கு சென்று தாயாருடன் தங்கியிருந்தார்.

நாகேஷின் நண்பனொருவன் போலீஸ் கான்ஸ்டபிள்; பாபாவிடம் மிகவும் பக்தியுள்ளவனாக இருந்தான். அவன் தன் மனைவிக்கு ஒரு புதிய சேலை வாங்கிக் கொடுத்து "இது பாபாவால் கொடுக்கப்பட்டது" என்று உணர்ச்சி வசப்பட்டு சொன்னார். அதற்கு அவன் மனைவி "அல்ல இது வேலை செய்து உன்னால் வாங்கப்பட்டது பாபாவினால் கொடுக்கப்பட்டதல்ல" என்று சொன்னாள். அடுத்த நாள் சேலையை உடுத்த பிரித்தபோது புடவை மடிப்பு முழுக்க ஒரு அளவிற்கு எரிந்திருந்தது போல் தோன்றியது. ஆக கட்டுவதற்கு பிரயோஜனமில்லாமல் ஆகிவிட்டது. மனைவி கான்ஸ்டபிளைப் பார்த்து "இதற்கு பதிலாக பாபா வேறொன்றை கொடுக்கின்றாரா பார்க்கலாம்" என்றாள். அதே நாள் ஆபீஸ் மூலமாக பழைய பாக்கி பணம் கிடைக்கப் பெற்று, கான்ஸ்டபிள் வேறு புடவையுடன் வந்து மனைவிக்கு கொடுத்தார். மனைவி மிகவும் ஆச்சரியப்பட்டு பாபாவின் லீலையைப் புகழ்ந்தாள்.

## திருமதி ஹன்ஸ்ராஜ்

திருமதி ஹன்ஸ்ராஜ் கோரியில் வசித்து வந்தாள். அவளுடைய கணவனுக்கு இரைப்பு வியாதி இருந்து வந்தது. அது ஒரு கெட்ட காற்று என்றும் பாபாவிடம் அழைத்துச் சென்றால், பாபா இரண்டு அறை அறைந்து, காற்றை ஓட்டுவாரென்று நாசிக்கிலிருக்கும் நரசிங்க மகராஜ் சொன்னார். அதே மாதிரியாக சீரடிக்கு அழைத்து வந்ததும், பாபா நோயாளியை இரண்டு அறை அறைந்து "கெட்டகாற்றே ஓடிப்போய் விடு" என்று சொன்னார். இரைப்பு வியாதியும் சிறிது குணமாகியது. சீரடியில் சுமார் ஆறு மாதம் இருந்து பாபாவின் கருணையால் முழுக்க குணம் ஏற்பட்டது. இவ்வாறு குணமாவதற்கு பாபா ஒரு மகத்தியம் சொன்னார். அதாவது தயிர் சாப்பிடக் கூடாது

என்றார். ஆனால் நோயாளியால் தயிரில்லாமல் சாப்பிட முடியவில்லை. தயிரில்லாவிட்டால் உயிர்போய்விடும் என்று மனைவியிடம் சொல்லி தினமும் பாபாவின் உத்திரவு மீறி சாப்பிட்டு வந்தார். கிராமத்தில் தயிர் தோய்த்து உரியின் மேல் வைத்துவிட்டு பகல் ஆரத்திக்கு மசூதிக்குச் செல்வார்கள். அப்பொழுது ஒரு பூனை வீட்டில் நுழைந்து உரியில் ஏறி எல்லா தயிரையும் குடித்துவிட்டு சென்றது. ஆக பகல் சாப்பாட்டிற்கு தயிரில்லாமல் புருஷன் கஷ்டப்பட்டார். எப்படியாவது அந்த திருடனை பிடிக்க ஒரு நாள் புருஷன் தான் மட்டும் பகல் ஆரத்திக்கு மசூதிக்குப் போகாமல் வீட்டில் மறைந்திருந்து காத்திருந்தார். அப்போது பூனை உள்ளே வந்தது. தயிர்பானைக்கருகில் சென்று பூனை வாய்வைத்தபோது அதன் முதுகின்மேல் தடியால் கொடூரமாய் அடித்தார் பூனையும் ஓடிப்போய்விட்டது. பிறகு புருஷன் ஆரத்திற்கு சென்று உதி வாங்கும்பொழுது பாபா தீக்ஷிதரைப் பார்த்து "நான் சொன்னபடி நடக்காமல் தயிரையே சாப்பிட நினைக்கிறான். அவனை சாக விடாமலிருப்பதற்காக பூனையாக அவன் வீட்டிற்கு போனேன். அவன் என் முதுகின் மேல் தடியாலடித்தான்" இதோ பருங்கள் என்று சொக்காயை தூக்கி முதுகை காண்பித்தார். தடியால் அடித்த வடுவைப்பார்த்து தீக்ஷிதர் அலறி அழுது புலம்பினார். பாபா அவரைச் சமாதானப்படுத்தி பக்தர்களைக் காப்பாற்ற இம்மாதிரியெல்லாம் தான் ஏற்க வேண்டியுள்ளதை சொல்லி புருஷனைப் பார்த்து இனி தயிரை சாப்பிடாமலிருந்தால் சீக்கிரம் பூரண குணம் ஏற்படுமென்றார். புருஷனும் மிகவும் வருந்தி பாபாவை அடித்ததற்காக மனமுருகி கண்ணீர்விட்டு மன்னிப்புக் கோரினார். சீக்கிரமே பூரண குணமடைந்தது.

## பிக்குபாய்

ஆமது நகரத்தைச் சேர்ந்த பிக்குபாய்க்கு 14 வயதில் கல்யாணம் செய்யுப்பட்டு அதே வருடத்தில் கணவன் இறந்து விதவையானாள். உடனே சீரடிக்கு வந்து சேர்ந்தாள் ராதாகிருஷ்ண மாயுடன் தங்கியிருந்து பாபாவிற்கு பணிவிடைகள் செய்து வந்தாள். ராதா கிருஷ்ணமாயி இறந்த பிறகு, நாகர் என்னுமிடத்திற்கு சென்று

தங்கி வந்தாள். ஒரு சமயம் ஆமது நகரிலிருந்து பாபாவிற்கு மாலை கொண்டு வந்து பாபாவிற்கு போடப்போனபோது பாபா "மனக்கஷ்டத்துடன் இந்த மாலையைக் கொண்டு வந்திருப்பதால் இது எனக்கு வேண்டாம்" என்றார். பிக்கு பாய்க்கு மிகவும் கஷ்டமாக கண்ணீர் பெருகியது. தீக்ஷிதரும் பாபாவை மாலையை அங்கீகரிக்கும்படி வேண்டினார். மறுபடியும் பிக்குபாய் மாலையை பாபாவிடம் கொண்டு சென்றபோது மாலை 3 துண்டுகளாக அறுந்து கீழே விழுந்தது. மிக மனக்கஷ்டத்துடன் பிக்குபாய் தான் கொண்டு வந்த தர்பூசணி பழத்தையாவது சாப்பிடும்படி பாபாவை வேண்டினார். பாபா மறுத்தார். தீக்ஷிதர் மறுபடியும் சாப்பிடும்படி கேட்டுக் கொண்டார். பாபா "இந்த பெண் கோதாவரிகரையில் கண்ணீர்விட்டு அழுது கொண்டு அதிக மனக்கஷ்டத்துடன் இதைக் கொண்டு வந்தாள்". அதனால் எடுத்துக் கொள்ளமாட்டேன் என்றார். விஷயம் என்னவென்றால் சீரடிக்கு வருகிற வழியில் கோதாவரி நதிக்கரையில் ராதா கிருஷ்ண மாயியை தகனம் செய்த இடத்தில் பிக்கு பாய்க்கு அதிகம் துக்கம் ஏற்பட்டு அழுது புலம்பினாள். மேலும் பாபா, ராதாகிருஷ்ண மாயியை காப்பாற்றாமல் விட்டதைப்பற்றி மனதிலேயே குற்றபடுத்தி பேசினாள். ஆகவே எல்லாமறிந்த பாபா அவள் கொண்டு வந்ததை நிராகரித்தார்.

## கிளார்க்

1913ல் முதன்முதலாக சீரடிக்கு பாபாவை சேவிக்க வந்தார். கிளார்க்கின் சகோதரனுக்கு பைத்தியம் பிடித்திருந்து எந்த மருந்திற்கும் குணமாகாமல் போகவே பாபாவிடம் குணப்படுத்த வந்தார். சகோதரனை சீரடியில் அமில்தான்மேதாவிடம் பாதுகாப்பாக விட்டு விட்டு கிளார்க் சென்று விட்டார். பாபாவின் ஆரத்தி வேளையில் அங்கிருந்ததாலும், பாபாவின் உதியையும், தீர்த்தத்தையும் உபயோகித்ததாலும், சகோதரன் படிப்படியாக குணமடைந்தார். கிளார்க்கு மிகவும் சந்தோஷமாகி, பாபாவிடம் பக்தி பெருகி அவர் படத்தை தன் அறையில் மாட்டி பூஜை முதலியன செய்து வந்தார்.

## சோமனாத் சங்கர்

நிமோன் என்னும் ஊரில் போலீஸ் இன்ஸ்பெக்டராக வேலை பார்த்தவர் சோமனாத் சங்கர் சாமாவின் தகப்பனார் பல்வன்ராவ் சங்கரின் தகப்பனாருக்கு தாய் மாமனாவார். பல்வன் ராவ் ஒரு சமயம் நிமோனுக்குச் சென்று சங்கரின் தகப்பனாரைப் பார்த்து "சாயிபாபாவை ஜனங்கள் ஓர் பைத்தியம் பிடித்த பக்கிரி என்று சொல்கிறார்கள். நீ என்னுடன் சீரடிக்கு வந்து பாபாவைப் பரிசோதித்து உன் அபிப்பிராயத்தை எனக்குச் சொல்லவும்" என்று சொல்லி சீரடிக்கு சங்கரின் தகப்பனாரை அழைத்து சென்றார். ஒரு தடவை பல்வன் பாபாவைப் பார்க்க சென்றபோது, பாபா ஒரு தடியை எடுத்துச் சுழற்றி அவர் மேல் எறிந்து, தூர நிற்கும்படி செய்தார். அந்த பயத்தில் பல்வன்ராவ் தனது மைத்துனனை மாத்திரம் பாபாவிடம் அனுப்பிவைத்தார். ஆனால் பாபா மிகச் சாந்தமாக சங்கர் தகப்பனாரை தன் அருகில் அழைத்து ஆசீர்வதித்தார். மசூதியிலிருந்து வெளியில் வந்து தன் மாமனைப் பார்த்து பாபா ஒரு பெரிய மகான், பைத்தியம் அல்ல என்று உறுதியாய் சொன்னார். ஆனால் தன்மேல் தடியை ஏன் எறிந்தார் என்பது தன் மருமானைக் கேட்டார் "நீ பாபாவை பைத்தியமா என்று சந்தேகத்துடன் பார்க்கவே அம்மாதிரியாகவே செய்து காண்பித்தார்" என்று சங்கர் தகப்பனார் சொன்னார். இப்படி ஆரம்பமாகி சங்கரின் தகப்பனார் பாபாவின் அன்பில் கவரப்பட்டு மிகச் சிறந்த பக்தனாக அடிக்கடி சென்று சேவித்தார். 1916-ல் சங்கர் தகப்பனாரிடம் பாபா எல்லா தட்சணைகளையும் கொடுத்து வருவார். ஆனால் பாபாவின் சொல்படி அதை தருமத்திற்கே செலவு செய்து வந்தார். பர்பி வாங்கி எல்லோருக்கும் பிரசாதமாக கொடுப்பது, எண்ணை வாங்குவது துணிக்கு கட்டை வாங்குவது, ஏழைகளுக்கு பாபா குறிப்பிட்டபடி தர்மம் கொடுப்பது இம்மாதிரியாக பணம் செலவழிந்தது.

ஒரு சமயம் பாபா சங்கரின் தகப்பனாரை போதி வாசிக்க சொன்னார். தனக்கு சமஸ்கிருதம் தெரியாதென்று தகப்பனார் சொன்னார். பாபா "அதனாலென்ன, கவலை வேண்டாம். மசூதி

ஆயி உனக்கு சமஸ்கிருதம் சொல்லிக் கொடுப்பாள். நீ ஆரம்பி" என்றார். பாபா சொன்னதில் நம்பிக்கையுடன் ஸ்ரீ மத்பாகவதத்தையும், அதன் உரை நூலையும், தினமும் வாசிக்க ஆரம்பித்தார். படிப்படியாக சமஸ்கிருதத்தில் நல்ல தேர்ச்சிப் பெற்று கீதை, ஞானேஸ்வரி போன்ற பெரிய கடின நூல்களையும் சுலபமாக பயின்று பெரிய பண்டிதர்களுக்கும், சந்தேகங்களை நிவர்த்திக்கும் அளவிற்கு ஞானத்தை அடைந்தார். சமஸ்கிருதத்தை ஒழுங்காக கற்காமல், பாபாவின் உத்திரவுபடி ஆரம்பித்து மகா சாஸ்திர விற்பன்னர்களுக்கும் போதிக்கும் ஞானத்தை, தகப்பனார் அடைந்தது பாபாவின் ஆசீர்வாதமேயாகும். ஆனால் பாபா, மற்றவர்களுக்கு தகப்பனார் சொல்லிக் கொடுப்பதை நிறுத்தி விட்டார் "நாம் ஏன் மற்றவர்களுக்கு சொல்லிக் கொடுக்க வேண்டும். நமக்கு அதனால் தற்பெருமை வந்து விடும்" என்று பாபா சொல்வார்.

பூனாவில் ஒரு இரவு சங்கரின் மனைவிக்கு, பிரசவ வேதனை உண்டாகி, ஒரு டாங்கா வண்டியில் முனிசிபல் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டு மிகச் சுலபமாக சீக்கிரமே ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதே சமயத்தில் பாபா சீரடியில் சங்கர் தகப்பனாரிடம் "ஒரு பெண் பிள்ளையை ஓர் இடத்திற்கு கொண்டு போனார்கள். அங்கு அவளுக்கு அபாயமில்லாமல் பிரஸவம் முடிந்து, ஒரு ஆண்குழந்தை பிறந்தது" என்றார் சங்கரின் தகப்பனாரும் அதைப் புரிந்து கொண்டு சந்தோஷப்பட்டார்.

இந்த குழந்தையை அழைத்துக் கொண்டு சங்கர் நிமோனில் உள்ள தன் தம்பி மனைவி ஒரு ஆண் குழந்தையை பெற்றெடுத்ததைப் பார்க்க மனைவியுடன் நிமோனுக்கு புறப்பட்டு வழியில் சீரடியில் பாபாவிடம் தங்கி நமஸ்கரித்தார். உத்திரவு பெறுகையில் பாபா உதியைக் கொடுத்து "பிள்ளையைக் காப்பாற்று" என்று சொன்னார். அவ்வாறு சொன்னது சங்கர் தன் பிள்ளையை தான் என்று நினைத்து தன் குழந்தையிடம் உதியைக் கொடுத்து டாங்காவில் ஏறிச் சென்றார். நிமோனை அடைந்தபோது 12 நாள் குழந்தையான தம்பியின் குழந்தை அதிக அபாயகரமான நிலையில் இருந்தது. உடம்பெல்லாம் சில்லிட்டு இறந்து விட்டதாகவே நினைத்து

எல்லோரும் வருத்தமுற்றனர். அப்பொழுது பாபா புறப்படும்பொழுது சொன்ன வார்த்தை சங்கருக்கு ஞாபகம் வந்து, அந்த வார்த்தை தன் பிள்ளைக்கு சொல்லவில்லை என்றும், இந்த குழந்தையைப் பற்றித்தான் என்று நினைத்து, அந்த குழந்தைக்கு உதியை பூச தேடினார். வரும் வழியில் எங்கேயோ தவறி விட்டதை உணர்ந்து, ஆனாலும் பாபாவிடம் நம்பிக்கையுடன், குழந்தையை தன் மடியில் கிடத்தி, பாபாவை ஹிருதய பூர்வமாகவும், மிக உருக்கத்துடனும் குழந்தையை காப்பாற்றும்படி வேண்டினார். 15 நிமிஷங்களுக்குள் அந்த குழந்தை கண் திறந்து பார்த்து, சீக்கிரமே குணமாகியது. அது காரணமாக அக்குழந்தைக்கு "தத்தா" (பாபாவின் பிரசாதம்) என்று பெயரிடப்பட்டது. மறுபடியும் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கி, தன் தகப்பனாரை தன்னுடன் பூனாவிற்கு வரும்படி அழைத்தபோது, பாபா என்னை புதைத்து விட்டு போகட்டும் என்று திரும்பவும் பகர்ந்தார்.

1917ல் சங்கர் டைபாய்டில் விழுந்து கஷ்டப்பட்டார். தன் தகப்பனாரை பூனாவிற்கு உதவிக்காக வரும்படி எழுதினார். ஆனால் பாபா "நீ ஏன் கவலைப்படுகிறாய். சங்கர் சுகமடைந்து நம்மை இங்கு வந்து பார்ப்பான்" என்று சொல்லி தடுத்து விட்டார். அதே மாதிரியாக ரஜா எடுத்துக் கொண்டு, சீரடிக்குச் சென்று தங்கி, சங்கர் பூரணமாக குணமடைந்தார். பாபா அடிக்கடி சங்கரின் தகப்பனாருக்கு சொல்லி சீரடியிலேயே நிறுத்தின மாதிரியாகவே, பாபா மகா சமாதி அடைந்த பிறகு, சங்கரின் தகப்பனார் சங்கருடன் வந்து சேர்ந்து, அதே கவலையில் 4 மாதங்களில் உயிரை விட்டார். கடைசிவரை பாபாவின் தியானத்திலேயே இருந்து வந்தார்.

சங்கரின் தகப்பனார் பாபாவிற்கு முழுநாள் ஊழியம் செய்து வந்தார். ஒரு சமயம் அவர் நான்கு நாட்களுக்கு அகமத் நகர் சென்று சாட்சியம் சொல்ல வேண்டியிருந்தது. அந்த நான்கு நாட்களும் பாபாவிற்கு தன் தகப்பனாரைப் போலவே ஊழியம் செய்ய முற்பட்டார். ஒரு நாள் முழுவதும் பாபாவிற்கு தொண்டு செய்வது, தேகப்பிரயாசை அதிகமாக இருந்தது. பாபா முழு நாளும் கூப்பிடுகின்ற சமயமெல்லாம் தயாராக காத்துக் கொண்டிருப்பது

சுலபமான வேலையாக தோன்றவில்லை. அம்மாதிரி ஒருநாள் ஊழியம் செய்யும்பொழுது சங்கருக்கு பாபா மாருதியாக காட்சியளித்தார். உடனே சாமாவிடம் சங்கர் "அவரை தரிசனம் செய், அவர் மாருதியாக எவ்வளவு கம்பீரமாக காட்சியளிக்கின்றார் பார்" என்று மெய்சிலிர்த்துச் சொன்னார்.

சங்கருக்கு ஒரு சமயம் பக்க வியாதியிருந்தபோது பாபாவின் உதியை தேய்த்ததினால் உடனே நோய் குணமாகியது. அதே மாதிரி சங்கரின் சகோதரனுக்கு ஆரம்ப க்ஷயம் குணங்கள் தெரிந்தபோது உதியும், தீர்த்தமும் கொடுத்ததினால் உடனே சௌக்கியம் ஏற்பட்டது. குழந்தை தத்தாவிற்கு தலை முழுக்க சிரங்கு சொரி ஏற்பட்டபோது உதியினால் சௌக்கியமாகியது. சங்கர் பாபாவின் பாதங்களில் ஒரு பாதத்தில் சங்கு மச்ச அடையாளமும் மற்றொன்றில் சக்கரமச்ச அடையாளமும் இருந்ததைப் பார்த்து மகிழ்ந்தார்.

## சாமா

பாபாவின் குதிரை லாயமிருக்கும் இடத்தில் வைத்திருக்கின்ற பள்ளிக்கூடத்தில் சாமா உபாத்தியாயராக இருந்தார். அப்பள்ளியின் ஜன்னல், மசூதிக்கு எதிராக இருந்தது. அது வழியாக பாபாவை சாமா கவனித்து வந்தார். பாபாவை பைத்தியமென்றும் எப்பொழுதும் மரியாதை செய்யாமலும் சாமா இருந்தார். சாமாவை திடீரென்று வேறு ஊருக்கு மாற்றுதல் செய்ததால் போக விருப்பமில்லாமல் வேலையை ராஜினாமா செய்து விட்டார். பாபாவைப் பற்றி போகப்போக அவர் லீலைகளை கண்ணால் கண்டு பாபா கடவுள் தான் என்று அறிந்து பாபாவுடன் ஐக்கியமானார். பாபா இங்கீலீஷ், ஹிந்தி முதலிய பாஷைகளை பிரளயமாக பேசுவதறிந்து, பாபாவின் முழு சக்தியையும், சாமா அறிந்து கொண்டார்.

சாமா பள்ளிக் கூடத்திலிருந்தபோது கட்ஜில் என்கிற பெரிய உத்தியோகஸ்தர் "ஒரு பெரிய சாது இவ்விடத்திலிருப்பதாக சொல்லப்படுகிறது. அவர் எங்கே இருக்கிறார்" என்று கேட்டார். அதற்கு சாமா "அப்பேர்பட்டவர் சீரடியில் இல்லை மசூதியில் ஒரு பைத்தியம் பிடித்த பக்கிரிதான் இருப்பதாக சொன்னார்". பூனாவில்

கட்ஜில், பீமா ஷங்கர் கோயிலில், ஒரு பெரிய மகானுக்கு மரியாதை செய்து வணங்கினார். அந்த மகான் கட்ஜிலை சீரடியிலிருக்கும் சாயிபாபா ஒரு பெரிய ஞானியென்றும், அவரைப்போய் பார்க்கும்படி கட்டளையிட்டார். அம்மாதிரியாகவே, கட்ஜில் சாமாவை விசாரித்த பிறகு மசூதிக்குச் சென்று பாபாவை வணங்கினார். அதற்கு பாபா "நான் ஒரு முஸ்லீம், பீமா ஷங்கர் கோயிலிருக்கும் சாது காலில் போய் விழுங்கள்" என்று சொன்னார். கட்ஜில் நடந்ததை பாபா நேரில் பார்த்தது போல் சொல்வதனால் "பாபா" ஒரு பெரிய மகான் என்று சாமாவிடம் சொன்னார்.

சாவர்கேயான் என்னுமிடத்தில் 95 வயதுள்ள ஆனந்த சுவாமி என்று மகானை சாமாவும் சிலரும் ஒரு மாட்டு வண்டியில் சென்று நமஸ்கரித்தனர். சீரடியிலிருந்து வந்திருப்பதாக சொன்னவுடன், அந்த வயதான மகான், வண்டியிலேறிக் கொண்டு தானும் சீரடி பாபாவை வணங்க வேண்டுமென்று சொல்லி, சாவர்கேயான் கிராமத்தார்கள் எவ்வளவு தடுத்தும் கேட்காமல் சாமாவுடன் சீரடி வந்து பாபாவை வணங்கினார். ஒருவருக்கு ஒருவர் ஒன்றும் பேசாமலேயே சிறிது நேரம் பார்த்திருந்தனர். பிறகு சாமாவிடம் ஆனந்த சுவாமி "இவர் சாணிக்குவியலின்மேல் வைரம் போன்றவர்" என்று பாபாவைப் பற்றி சொன்னார். ஆக சாமாவிற்கு பாபாவிடம் மிகவும் நம்பிக்கையுண்டாகி பாபாவிற்கு கைங்கரியம் செய்ய ஆரம்பித்தார். பாபாவை சேவிக்க வரும் எல்லா பக்தர்களுக்கும் தங்குவதற்கும், உணவு வகைக்கும் ஏற்பாடு செய்து தொண்டு புரிந்தார். பாபாவின் பக்தர்களை கல்யாணம், பூனூல் உற்சவம் போன்ற மங்கள காரியங்களுக்கு பாபாவின் உத்திரவுப்படி சென்று பாபாவின் ஆசிர்வாதத்தை பொழிந்து வந்தார். பாபா கோபத்தினால் பக்தர்களை நிராகரிக்கும்பொழுது, மத்தியஸ்தம் கொடுத்து வந்தார். பாபாவின் ஹுக்கா பிடிப்பதற்கும், மற்ற சில்லறை காரியங்களுக்கும் உதவி வந்தார். பாபாவின் வார்த்தைகளை புரிந்து கொண்டு பக்தர்களுக்கு தெரிவித்து வந்தார். காகா சாகப் தீக்ஷிதரை அகமத் நகரிலிருந்து பாபாவின் உத்திரவுபடி சீரடிக்கு அழைத்து வந்து சிறந்த பக்தராக்கினார். பாபாவின் சமாதி கட்டிடம் எழுப்புவதற்கு சாமா மிகவும் முக்கியமானவர். ஸ்ரீமான்

பூட்டியின் உதவியினால் மிகச் சிறந்த கட்டிடம் கட்டி பாபாவின் சமாதியை நிறுவினார். முதன்முதலில் சாமாவின் கனவில் தோன்றி சமாதி கட்டிடம் கட்ட பாபா அனுமதியளித்தார். அதே மாதிரி கனவு ஸ்ரீமான் பூட்டியின் முன்பும் பாபா தோன்றச் செய்து சாமாவின் உதவியினால் கட்டிடம் கட்ட முடிந்தது. நாள் முழுவதும் பாபாவின் அருகிலேயே இருந்த பக்தர்களுக்கும் பாபாவிற்கும் உதவி செய்து வந்தார். மகல்சபதி, தீக்ஷிதர், சாமா மூவரும் பாபாவுடன் எப்பொழுதும் இருந்து கொண்டு சேவை செய்து மிகப்பெரிய அதிர்ஷ்டத்தை அடைந்தார்கள். மகல்சபதி, தன்னுடைய கடைசி நாளை பாபாவின் அருளால் அறிந்து கொண்டு அன்று தனது தகப்பனாரின் சிரார்த்த தினமாதலால் சீக்கிரமே சிரார்தத்தை முடித்து எல்லா உறவினர்களையும் சீக்கிரமே சாப்பிடச் செய்து ஒரு லங்கோட்டியுடன் தரையில் உட்கார்ந்து பாபாவின் பெயரை மும்முறை உரக்கச் சொல்லி பிராணன் நழுவியது. எவ்வளவு கொடுத்து வைத்தவராவார். தீக்ஷிதரும் இதே மாதிரியாக தபோல்கருடன் ரயிலில் பிரயாணம் செய்யும்பொழுது பாபாவை ஸ்மரித்து கொண்டே தபோல்கரின் தோளில் சாய்ந்து பிராணனை விட்டார். சாமாவும் தனது கடைசி நாளை பாபாவின் அருளால் அறிந்து கொண்டு பாபாவின் பூஜையை கிரமப்படி முடித்து பாபாவின் பிரசாதத்தை எல்லோருக்கும் அளித்து, தானும் உண்டு முடித்தவுடன் "பாபா" "பாபா" என்று சொல்லி கொண்டே பிராணனை நழுவ விட்டார். ஆக பாபாவின் ஒப்பற்ற பக்தர்களாக இம்மூவரும் பாபாவைப் போலவே படுக்கையில் படுக்காமல், பாபாவை ஸ்மரணம் செய்துக் கொண்டு, உட்கார்ந்தே பிராணனை விட்டு சொர்க்கத்திற்கு சென்றனர். பாபாவே இவர்களை அழைத்து சென்றிருக்க கூடுமல்லவா!

## கோலாம்போ

கோலாம்போ பாபாவின் பக்கத்தில் உட்கார்ந்து பாபா சிலிம் பிடிப்பதை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார். சிறு பையனாக இருந்தபடியால் பாபாவின் சிலிம் தானும் இரண்டொரு இழுப்பு செய்து கொள்ள ஆசைப்பட்டார். இதையறிந்த பாபா "பையா இங்கே வா கொஞ்சம் புகை பிடி" என்று சிலிமை கோலாம்போவிடம் கொடுத்தார்.

ரொம்பவும் சந்தோஷமாக புகைபிடித்தார். கோலாம்போவிற்கு சாராயம் குடிப்பதில் மிகப்பிரியம். 1-2-1911ல் பாபா கனவில் தோன்றி மார்பின் மீது உட்கார்ந்து அழுத்தி இனி சாராயம் குடிப்பதில்லை என்று சொன்னாலே தவிர விடப்போவதில்லை என்று கர்ஜித்தார். உடனே கோலாம்போவும் வாக்குதத்தம் செய்தார். இதற்கு சோதனையாக ஒரு நாள் கோலாம்போவின் ஆபீஸ் மானேஜர் அவர் பிள்ளைகளை இங்கிலாந்திற்கு அனுப்பும்பொழுது ஒரு விருந்து கொடுத்தார். அவ்விருந்தில் விஸ்கியும் வழங்கப்பட்டது. கோலாம்போ அதைத் தொடாமலிருக்கவே அந்த மானேஜர் கோலாம்போவின் அருகில் வந்து விஸ்கியை சாப்பிடும்படி வற்புறுத்தினார். ஆபீஸரின் வார்த்தையை மறுக்க முடியாமல் பாபாவை நினைத்து இக்கட்டான இந்நிலையிலிருந்து தன்னை காப்பாற்ற வேண்டினார். என்ன ஆச்சரியம் எரிந்து கொண்டிருந்த காந்த விளக்கு திடீரென்று அணைந்தது. பக்கத்திலிருந்த ஒரு சூப்பர்வைஸர் மிக ஆவலுடன் இந்த விஸ்கியை குடித்து விட்டார். காந்த விளக்கு ஏற்றப்பட்டு வெளிச்சத்தில் தம்ளர் காலியாக இருக்கவே மானேஜர் கோலாம்போ தன் சொல்படி விஸ்கியை குடித்து விட்டதாக நினைத்து கோலாம்போவை தட்டி கொடுத்து தன் மகிழ்ச்சியை தெரிவித்தார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சீரடிக்கு கோலாம்போ பாபாவை தரிசிக்கச் சென்றார். பாபா மற்றவர்களை தட்சிணை கேட்டாரே அல்லாமல் கோலாம்போவைக் கேட்கவில்லை. ஆக கோலாம்போ தான் திருந்தி விட்டதால் இனி பாபா தட்சிணை கேட்க மாட்டார் என்று தன் சினேகிதர்களிடம் பெருமையாகச் சொன்னார். உடனே பாபா கோலாம்போவை கூப்பிட்டனுப்பி 2 ரூபாய் தட்சிணை கேட்டார். அதே மாதிரியாக கொடுக்கப்பட்டது. கோலாம்போவின் நண்பர் ஒருவர் பாபா தட்சிணை கேட்பாரென்று பயந்து தன்னிடமிருந்த 18 ரூபாய் கோலாம்போவிடம் கொடுத்துவைத்து, பாபா கேட்டால், தன்னிடம் இல்லை என்று சொல்லலாம் என்று நினைத்தார். பாபா இதை அறிந்து அந்த நண்பரை 2 ரூபாய் தட்சிணை கேட்டு அந்த நண்பர் தன்னிடம் இல்லை என்று சொல்வதற்கு முன்பாக கோலாம்போவை சுட்டிகாட்டி இந்த மனிதரிடமிருந்து வாங்கிக் கொடு என்றார். ஆக பாபாவிற்கு

தெரியாதது ஒன்றுமில்லை, ஏமாற்ற முடியாது என்று நண்பருக்கு புரிந்தது. கோலாம்போ இன்னொரு சமயம் பாபாவிடம் உத்திரவு வாங்கும்பொழுது நீங்கள் பம்பாயிலிருந்து வந்தீர்கள், நல்லது நீங்கள் போகலாம். நாளை மத்தியானம் உங்களிடத்திற்கு போய்ச் சேருவீர்கள் என்றார். சாயந்திரமே உத்திரவு கொடுக்கப்பட்டு அன்றிரவு ரயில் மார்க்கமாய் கோபர்கான் வழியாக மண்மாட் சென்றடைந்து அங்கிருந்து இரவு புறப்பட்டு பம்பாயிற்கு காலை 8 மணிக்கு போய்விடலாமென்று கோலாம்போ நினைத்தார். பாபா சொன்ன மாதிரியாக ஒரு ரயில் என்ஜின் பழுதடைந்து வேறொரு இன்ஜின் மண்மாட் வந்து பம்பாய் செல்வதற்கு மத்தியான வேளை ஆகிவிட்டது.

## M.G. பிர்தான்

பிர்தான் பம்பாயில் கலெக்டர் ஆபிஸில் பணியாற்றும் பொழுது தனது 7வயது குமாரனை இழந்ததால் மனக்கஷ்டத்துடன் இருந்தார். ஒரு நாள் கனவில் 5 சாதுக்களைக் கண்டார். அதில் தலையில் துணி கட்டுடன் கூடியவரை காண்பித்தார். பிறகு பிர்தான் சீரடிக்குச் சென்று பாபாவை தரிசனம் செய்தார். தன்னுடைய தோட்டத்தில் விளைந்த சீதா பழம், ராமா சீதா பழங்களை பாபாவிற்கு சமர்ப்பித்தார். கனவில் கண்ட உருவமே பாபாவாக இருந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டார். பாபா வேறொருவரைப் பார்த்து, மகன் இழந்ததைப் பற்றி இந்த முட்டாள் ஏன் விசனப் படவேண்டும். தேகம் பூமிக்குத்தானே போக வேண்டும் என்று சொன்னார். பிறகு பிர்தான் வீட்டின் அமைப்பைப் பற்றியும், தோட்டத்தைப் பற்றியும், மரங்களின் எண்ணிக்கையையும் சரியாகச் சொன்னார். பிர்தானுக்கு மிக ஆச்சரியமுண்டாகி மனமுருகினார். பிர்தானின் விசுவாசத்தை பலப்படுத்தினார்.

பாபா மகா சமாதி அடைந்த பிறகு பிர்தானுக்கு அநேக விதங்களில் தன்னுடைய லீலைகளினால் உதவி புரிந்து இருக்கின்றார். 1982ல் சிறிய மகன் கொடிய ஜுரத்தினால் பீடிக்கப்பட்டு டாக்டராலும் கைவிடப்பட்டு நாடி நின்று இறந்து விட்டதாகவும் டாக்டர் சொன்னார். ஆனால் பிர்தான், பாபாவின் உதியை குழந்தையின்

முகத்தில் பூசி பாபாவின் படத்திற்கு முன்னால் குழந்தையை வைத்து, மனப்பூர்வமாய் பாபாவை தியானித்தார். டாக்டர் இதைப்பார்த்து, குருட்டு பக்தியென்று சொன்னார். ஆனால் பிர்தான் பாபா கண்டிப்பாக குழந்தையைக் காப்பாற்றுவார் என்று சொன்னார். சுமார் 3/4 மணி நேரம் கழித்து பையனுக்கு உணர்ச்சி வந்து தானே எழுந்து நின்று விளையாடவும் ஆரம்பித்தான் எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

## பய்யாஜி பாபாவின் அற்புத லீலைகள்

பய்யாஜி என்பவர் தினமும் பாபாவின் உடம்பை மாலிஷ் போட்டு, பிடித்துவிட்டு பாபாவைத் தூக்கிச் சென்று, அக்கினியின் எதிரில் வைப்பது வழக்கம். ஒருநாள் அவ்வாறு மாலிஷ் போடும்பொழுது தனக்கு பீமனைப்போல் பலமிருப்பதாகவும், தான் ஒருவரே பாபாவை தூக்க முடியுமென்று மனதில் நினைத்து கர்வ மெய்தினார். இதை மனதாலறிந்த பாபா உடனே பய்யாஜியை தன்னை வழக்கம்போல் தூக்கிச் சென்று துனியின் எதிரில் வைக்கச் சொன்னார். பய்யாஜியும் மிகவும் சந்தோஷமாக பாபாவை தூக்க முயன்றார். என்ன ஆச்சரியம்! பாபாவை துளியும் அசைக்க முடியாமல் பாறையைப் போல் கனத்து இருந்தார். பலமெல்லாம் சேர்த்து எவ்வளவோ முயன்று வியர்வை கொட்ட, மூச்சு வாங்க முயற்சி செய்தும் பாபாவை இம்மியும் நகர்த்த முடியாமல், மிகவும் அவமானப்பட்டு, தான் ஒருவரால்தான் பாபாவைத் தூக்க முடியுமென்று கர்வப்பட்டதினால், பாபா சரியான தண்டனை கொடுத்ததாக தன் தவறை உணர்ந்து, பாபாவிற்கு சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்து, கண்களில் நீர் தளும்ப கேவி அழுதார். பாபா உடனே மனமிளகி தன் உடலை சுலபமாக தூக்க இடமளித்து, பய்யாஜிக்கு ஆசீர்வதித்தருளினார்.

## பூர்வத்தின் கடன்

பாபாவின் பக்தரொருவர் பாபாவிடம் சென்று, தான் ஒரு கிணறு வெட்ட, டைனமட் முதலிய மருந்து வகைகளை வாங்கி,

வெடி வைத்து, பாறையை உடைத்து, தண்ணீர் வர முயற்சி செய்து, அதிக செலவு செய்தும் முடியாததால், கவர்ன்மெண்ட் கடனுக்கு உதவி கோரியும் ஒன்றும் கிடைக்கவில்லையென்று சொல்லி தனக்கு கடன்வசதி பெற உதவ வேண்டுமென்று வேண்டினார். பாபா அப்பொழுது எதிரில் அமர்ந்திருந்த நானா சந்தோர்க்கர், டிப்டி கலெக்டரிடம் அதைப் பற்றி சொல்லி கலெக்டரிடம் சிபாரிசு செய்யும்படி சொன்னார். நானா, ஏற்கனவே கலெக்டர் மறுத்து விட்டதால் தன்னால் முடியாது என்று சொன்னார். ஆனால் பாபா இம்மனிதன் நம்மிடம் ஒரு பெட்டியை விட்டுவிட்டுப் போய் மறுபடியும் திரும்ப கேட்கின்றான். மறுப்பது சரியல்ல. அவனுடையதை அவனிடம் கொடுத்து விட வேண்டும். ஆக இப்பொழுது கலெக்டரிடம் சிபாரிசு செய்தால் சரியாகும்" என்றார். அம்மாதிரியாகவே நானா சந்தோர்க்கர் சிபாரிசு செய்ய கலெக்டர் கடனுக்கு ஒப்புதல் கொடுத்தார்.

## ஜோக்

ஜோக் என்பவர் ஒரு நண்பருக்கு கடன் கொடுத்திருந்தார். காலம் கடந்தும் சொன்னபடி நண்பர் பணத்தை திருப்பி தரவில்லை. ஆக நேரிடையாகச் சென்று நண்பரை கேட்பதற்கு பாபாவிடம் உத்திரவு கேட்டார். பாபா தடுத்துவிட்டார். ஜோக்கிற்கு மன வருத்தமுண்டாகி கேஸும் போட முடியாமல் அநியாயமாக பாபாவால் இவ்வளவு நஷ்டம் ஏற்பட்டதே என்று பாபாவை நிந்தித்து மனம் வருந்தினார். அப்பொழுது அந்த நண்பர் ஜோக்கிடம் சென்று எல்லா பணத்தையும், வட்டியுட்பட கொடுத்து, கணக்கை தீர்த்து விட்டார். பாபாவிடம் பணத்துடன் சென்றபோது, பாபா வட்டியாக செலுத்திய பணத்தை நண்பரிடம் திருப்பிக் கொடுத்து, அசலை மட்டும் ஜோக்கிற்கு மிகச் சரியாக பிரித்துக் கொடுத்தார்.

## படேபாபா

15-2-1915 மாலை 4 மணிக்கு சாதுபய்ய என்பவர் தனது நாஸ்திக சிநேகிதருடன் ஹர்தாவில் நடந்துபோகும் பொழுது எதிரில் பாபா திடீரென்று தோன்றி பய்யாவிடம் ஒரு பல்குச்சியை கொடுத்துச்

சென்று மறைந்தார். பய்யா பரவசமடைந்து ஆனந்தக் கண்ணீர் வடித்தார். நாஸ்திக சிநேகிதர் பய்யாவிடம் பாபாவைப் பற்றி தெரிந்து கொண்டு பய்யாவின் கையில் பல் குச்சியிருந்தும் நம்பாமல் சீரடிக்கு கடிதம் எழுதி இந்த நிகழ்ச்சியை ஊர்ஜிதம் செய்யச் சொன்னார். அவ்வாறே சாமாவிற்கு பய்யா கடிதமெழுதினார்.

பிறகு பாபாவிடம் இதை தெரிவித்தபோது, சாது பய்யாவை சீரடி வரும்படி உத்திரவு பிறப்பித்தார். அப்படியே சாதுபய்யாவும் பாபாவிடம் சென்று தன்னுடைய பரவச நிலையை பல்குச்சியை காண்பித்து அறிவித்தபோது, பாபா மெதுவாக சிரித்து "இதை படே பாபாவிடம் போய் சொல்" என்றார். இந்த படேபாபா, பாபாவின் மதிப்பிற்கு உரியவர். பாபாவினால் தினமும் ரூ. 50க்கு குறையாமல் கொடுக்கப்பட்டு பெரிய தனவந்தராகி வருமானவரியும் கட்டி வந்தார். பாபாவுடன் சேர்ந்து சாப்பிடுவார். படேபாபா வெளியே கிளம்பினால் பாபாவிடம் விடைபெறும்பொழுது பாபாவும் அவருடன் 100 அடிகள் உடன் சென்று வழியனுப்புவார். அப்படிப்பட்டவரிடம் சாதுபய்யா தன்னுடைய பரவச நிலையை அறிவித்தபோது படேபாபா மிகவும் உணர்ச்சியுற்று அழுது புலம்பி பாபாவிடம் ஓடிச் சென்று வணங்கி "என்ன பாபா, எனக்கு ஏராளமான பணத்தைதான் கொடுத்து வருகிறீர்கள். ஆனால் சாது பய்யாவிற்கு சாக்ஷாத்காரம், அழிக்கமுடியாததையல்லவா கொடுத்து உதவியுள்ளீர்கள் என்று சொல்லி பாபாவின் பாதங்களில் மோதிக்கொண்டு அழுதார். பாபா, "என்ன செய்வது யார் எதை இஷ்டப்படுகிறார்களோ அதையே பெறுகிறார்கள்" படேபாபா மிகவும் வெட்கமடைந்து எல்லா பண ஆசைகளையும் அன்றிலிருந்து துறந்து, நிஜமாகவே பக்கிரியாகி, பாபாவிடம் உள்ளன்புடன் அடைக்கலமடைந்து மோக்ஷமடைந்தார்.

## அன்னிய ஸ்திரியின்மேல் கோபம்

ஒருவன் ஒரு அன்னிய ஸ்தீரியோடு சகவாசம் வைத்துக் கொண்டு அதனால் மேக வியாதியால் பீடிக்கப்பட்டு பாபாவிடம் சென்று "பாபா இதோ 500 ரூபாய் எடுத்துக் கொள்ளும்" என்று பணத்தை

கொடுத்தான். பாபா மறுத்து "நீ ஒருத்தியை வைப்பாட்டியாக வைத்திருக்கிறாயல்லவா! அவளிடமே இப்பணத்தைக் கொடு" என்று சொல்லி விரட்டி விட்டார். அம்மனிதன் பாபாவின் அற்புத ஞான திருஷ்டியை அறிந்து பாபாவிடம் முழுக்கச் சரணடைந்து தன் வியாதி நீங்கி பாபாவிற்கே சேவை செய்ய தன்னை அற்பணித்து கொண்டான்.

## SRU. ஜயகர்

ஜயகர் சீரடியில் துவாரகமாயி படத்தை எழுதியவர். ஒருநாள் தன்னுடைய ஜேபியில் ரூ. 2-8-0 வைத்திருந்தார். பாபாவிடம் அமர்ந்திருந்தபோது வர்தே என்பவர் பாபாவிடம் சென்று நமஸ்கரித்து "பாபா, சத்ய நாராயண பூஜை செய்வதற்கு என்னிடம் பணம் இல்லை" என்றார். பாபா உனக்கு எவ்வளவு வேண்டும்! என்று கேட்டார், வர்தே ரூ. 2-8-0 என்றார். பாபா அவ்வளவு தானே, ஜயகரிடமிருந்து பெற்றுக்கொள் என்றார். அவ்விதமே வர்தே ஜயகரிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டார். தன்னிடம் சரியாக ரூ. 2-8-0 இருந்ததை எவ்வளவு சரியாக பாபா அறிவித்தார் என்று ஜயகர் ஆச்சரியமடைந்தார்.

## P.R. அவஸ்தே

இந்தூர் சமஸ்தானத்தின் நியாயாதிபதியான அவஸ்தே, தன்னுடைய குமாரனின் கல்யாணத்திற்கு போகும் முன்பாக, தன்குமாரன், மனைவியுடன் பாபாவிடம் விடை பெற வந்தார். பாபா அவஸ்தே வைத்திருந்த பணம் 400 ரூபாயும், மனைவியிடமிருந்த 300 ரூபாயும், தக்ஷணையாக வாங்கிக் கொண்டார். ஆக கல்யாணத்திற்கு செல்ல சிலவிற்கு பணமில்லாமல் மிகவும் வருத்தத்துடன் வாடாவிற்கு வந்தபோது, ஜோக் அவஸ்தேவை தட்டிக் கொடுத்து, பாபாவிற்கு ஏராளமாக தக்ஷிணை கொடுத்ததால், மிகவும் அதிர்ஷ்டக்காரர் என்று சொன்னார். அவஸ்தே மிகவும் வருத்தத்துடன் கல்யாணத்திற்கு போக ஒரு பைசாவும் தன்னிடமில்லையென்று வருத்தத்துடன் தெரிவித்தார்.

ஜோக் : உங்களுக்கு எவ்வளவு வேண்டும்

அவஸ்தே : 100 ரூபாய்

ஜோக் : இதோ பெற்றுக் கொள்ளும், பம்பாய் வியாபாரி ஒருவர் தன் சரக்குகளுக்கு நஷ்டம் ஏற்பட்டது என்ற செய்தி உண்மையல்ல என்று ஏற்பட்டால் தன் லாபத்தில் பாபாவிற்கு 100 ரூபாயிற்கு 25 வீதம் கொடுப்பதாக பிரார்த்தனை செய்து கொண்டார். அவ்விதமாக பாபாவிற்கு 6000 ரூபாய் வந்தது. அதில் பாபா 3000 ரூபாய் ஏழைகளுக்கு வினியோகித்து விட்டார். உமக்கு 100 ரூபாய் கொடுத்ததாகச் சொன்னால் பாபா ஒன்றும் சொல்ல மாட்டார். மேலும் நீர் வரதட்சணையாக கல்யாணத்தில் 1500 ரூபாய் பெறப் போகிறீர்கள். பாபா உம்மிடமிருந்து 600 ரூபாய் தட்சணை அடைந்ததால் இம்மாதம் முதல் 50 ரூபாய் சம்பளம் உமக்கு உயர்த்தப்படும்.

அவஸ்தே : அம்மாதிரி சம்பளம் உயர வழியே இல்லையே ஆனால் ஜோக் சொன்னபடி கவர்ன்மெண்ட் கஜட்டில் தனக்கு 50 ரூபாய் அதிக சம்பளம் ஏற்றியிருப்பதைப் பார்த்து அவஸ்தே பாபாவின் லீலையை எண்ணி வியந்தார்.

## துமால்

S.B. துமால் என்கிற பக்தரை பாபா ஒருநாள் 50 ரூபாய் தட்சிணை கேட்டார். துமால் தன்னிடம் பணமில்லையென்று கையை விரித்தார். சாதேவிடமிருந்து பெற்றுத் தரும்படி பாபா கட்டளையிட்டார். அவ்வாறே துமால் சாதேவிடம் சென்று கேட்டபோது சாதே மிகவும் சந்தோஷமடைந்து, தனக்கு பென்ஷனில் 50 ரூபாய் குறைவாக கொடுத்ததால் அதை சரியாக பெறுவதற்கு பாபாவிடம் மானசீகமாக பிரார்த்தனை செய்யும்பொழுது, துமால் பாபாவிற்கு கொடுப்பதற்கு

50 ரூபாய் கேட்டதால் நிச்சயமாக கவர்ன்மெண்ட் தனக்கு சேர வேண்டிய சரியான பென்ஷனை கொடுக்கும் என்று சந்தோஷமாக சொல்லி 50 ரூபாய் கொடுத்தனுப்பினார். அம்மாதிரியாகவே சாதேவிற்கு தட்சிணை கொடுத்த தேதியிலிருந்தே 50 ரூபாய் சாங்ஷன் ஆகி கவர்ன்மெண்ட் ஆர்டரும் கிடைத்தது.

## R.S. தேவ்

தேவ், ஐந்து அறைகள் கொண்ட ஒரு கட்டிடத்தைக் கட்ட பாபாவிடம் சென்று அனுமதி கேட்டார். பாபா தரையில் 25 கோடுகள் வரைந்து ஒவ்வொரு கோட்டுக்கும் 1 ரூபாய் வீதம் தட்சிணையாக 25 ரூபாய் கேட்டு வாங்கினார். அம்மாதிரியாகவே ஐந்து அறைக்காக கட்டிடம் ஆரம்பிக்கப்பட்டு கடைசியில் 25 அறைகள் கொண்ட கட்டிடம் கட்டி முடித்தார். பாபாவின் முன்கூட்டியே அறிவித்த சமத்காரத்தை தேவ் எண்ணி வியந்தார்.

## நானாவின் கர்வ பங்கம்

ரேகே என்கிற நியாயாதிபதி பாபாவை சென்று நமஸ்கரித்தபோது அவரிடமிருந்த 60 ரூபாயை தட்சிணையாக பாபா பெற்றுக் கொண்டார். மறுபடியும் 20 ரூபாய் கேட்டபோது ரேகே கையை விரித்தார். உடனே பாபா சாமாவிடம் சென்று கேட்டு வாங்கி வரும்படி சொன்னார். அவ்வாறே சாமாவை சென்று கேட்டபோது "பாபாவிற்கு வேண்டியதெல்லாம் உம் மனமும், ஹிருதயமும், காலமும், ஆத்மாவும் தவிர வேறு எதையும் விரும்பவில்லை. இதை போதிக்கவே என்னிடம் அனுப்பினார். ஆக எல்லாவற்றையும் பாபாவிடம் சரணமடையச் செய்யவும்" என்று சாமா சொன்னார். இதை ரேகே பாபாவிடம் அறிவித்தபோது புன்முறுவலுடன் "தீக்ஷிதரிடம் சென்று கேட்டு வாங்கி வா" என்றார். அவ்வாறே தீக்ஷிதரிடம் சென்று கேட்டபோது தீக்ஷிதர் "பாபா உமக்கு இட்ட கட்டளை நீர் பணமில்லாமலிருப்பதை கஷ்டமென்று நினைக்கக் கூடாது. மேலும் பணத்திற்காக யாசிப்பதை இழிவாக கருதக்கூடாது என்பதை போதிக்கவே பாபா என்னிடம் அனுப்பினார்" என்று சொன்னார்.

இதையும் பாபாவிடம் அறிவித்தபோது பாபா மேலும் சிரித்து "நானாவிடம் போ" என்றார். அவ்வாறே நானா சந்தோர்க்கரிடம் சென்று கேட்டபோது "பாபா தக்ஷிணை கேட்டு இல்லை என்று சொல்வது மிகவும் சங்கடமானது. என்னுடைய ஏற்பாடு என்னவென்றால் சீரடிக்கு வரும்போதெல்லாம் ஒரு தொகையை கோபர்கானில் வைத்து மிகுதியை சீரடிக்கு எடுத்து வருவேன். பாபாவிற்கு தட்சிணை கொடுத்து பணம் தீர்ந்து விட்டால் கோபர்கானிலிருந்து பணத்தை வரவழைத்துக் கொள்வேன். இப்பொழுது அங்கு 100 வைத்து விட்டு மிகுதி 100 ரூபாயுடன் வந்துள்ளேன். இது தீர்ந்தால் பாபா கேட்பதற்குள் கோபர்கானிலிருந்து வரவழைத்து விடுவேன். ஆக பாபா தட்சிணை கேட்டு இல்லை என்று இதுவரையில் சொன்னதில்லை. நீரும் இந்த ஏற்பாட்டை கடைப்பிடியும்" என்று கர்வத்துடன் மொழிந்தார். இதை பாபாவிடம் ரேகே தெரிவித்தபோது பாபா நானாவை வரவழைத்து எல்லா பணத்தையும் தட்சிணையாக பெற்றுக் கொண்டு நானா ஒருவரை கோபர்கானுக்கு அனுப்பி பணம் வருவதற்குள் முன்பாக பாபா மேல்கொண்டு நானாவிடம் பணம் கேட்க நானா கர்வ பங்கமடைந்தார். தானே ஒரு பெரிய களஞ்சியம் என்று நினைத்து பாபா கேட்பதை தர முடியும் என்று எண்ணுவது தவறு என்று பாபா கோடிட்டு காண்பித்தார்.

## வெள்ளி கடியாரம்

பாலகிருஷ்ணா உபாசனி பாபாவை சென்று சேவித்தார். பாபா தட்சிணை கேட்டபோது தன்னிடம் பணமில்லை என்று தெரிவித்தார். பாபா உன்னுடைய ஜேபியில் என்ன வைத்திருக்கிறாய்? அதைக் கொடு.

பால : இது ஒரு வெள்ளி கடியாரம் இதை எடுத்துக் கொள்ளும்.

பாபா : இதைக் கொடுப்பதால் நீ நஷ்டமடைவதாய் நினையாதே.

பால : உமக்கு கொடுப்பது ஒன்றும் எனக்கு நஷ்டமில்லை.

பாபா அதை வாங்கி அங்கேயிருந்த வேறொருவருக்கு கொடுத்துவிட்டார். பாலகிருஷ்ண உபாசனி சந்தோஷத்துடன் பூனாவிற்கு சென்றார். அங்கு அவருடைய நண்பர் ஒரு தங்க கடியாரத்தை பாலகிருஷ்ண உபாசனிக்கு பலவந்தமாக கொடுத்து ஒப்புக் கொள்ளச் செய்தார். இவ்விதமாக வெள்ளி கடியாரத்தை கொடுத்ததால் நஷ்டமடையாமல் அதிக லாபமடைந்தார்.

## நாச்னே

நாச்னே என்கிற பக்தர் இரண்டு வைதீக பிராமண நண்பர்களுடன் பாபாவிடம் சென்றார். பாபா நாச்னேவைப் பார்த்து சாப்பிட்டாயிற்றா என்றார். நாச்னே அன்று ஏகாதசியானதால் சாப்பிடவில்லை என்றார். சாதாரணமாக ஏகாதசியில் நாச்னே உபவாசமிருப்பதில்லை. இரண்டு வைதீக நண்பர்கள் உடன் இருக்கவே உபவாசமிருக்க எண்ணினார். பாபா 'அந்த இருவரும் பித்தர்கள் நீ போய் சாப்பிடு' என்றார். பிறகு நாச்னே பாலாபாவ் ஹோட்டலுக்குப் போனார். பாலாபாவும் வைதீகமானதால் ஆரத்தி ஆனபிறகுதான் சாப்பாடு என்று சொல்லிவிட்டார். நாச்னே மசூதிக்கு திரும்பியவுடன் பாபா அதற்குள் சாப்பிட்டாயிற்றா என்று கேட்டார். ஆரத்தி முடிந்த பிறகு சாப்பிடுவதாகச் சொன்னார். பாபா இல்லை நீ போய் சாப்பிடு, உனக்காக ஆரத்தி காத்திருக்கும். பாலாபாவ் வேறு வழியில்லாமல் நாச்னேவிற்கு பாபாவின் உத்திரவுபடி சாப்பாடு போட வேண்டியதாயிற்று. பிறகு நாச்னே மசூதிக்கு திரும்பி வந்தார். அப்பொழுது மாவுசி என்பவர் சில பீடாக்களை பாபாவிற்கு சமர்ப்பித்தார். பாபா, நாச்னேவிடம் ஒரு பீடாவை கொடுத்து போடச் சொன்னார். ஏகாதசி ஆனதால் நாச்னே தயங்கினார். பாபா கட்டாயப்படுத்தி பீடாவை சாப்பிடச் செய்தார். பிறகு ஆரத்தி ஆரம்பமாகியது. ஆக எவருக்கு எந்த பழக்கமோ அதை தொடர்ந்து விடாமல் அனுசரிக்க பாபா அருள் புரிந்தார்.

## குசாபாவ்

ஒரு நாள் ஏகாதசி அன்று குசாபாவ் என்கிற பாபாவின் பக்தர் பாபாவிற்கு நமஸ்காரம் செய்து பாதங்களை பிடித்து வந்தார்.

பாபா : குசா, இன்று என்ன சாப்பிடப் போகிறாய்?

குசா : ஒன்றுமில்லை, இன்று ஏகாதசி.

பாபா : ஏகாதசி என்றால் என்ன?

குசா : உபவாச தினம்.

பாபா : உபவாச தினம் என்றால்?

குசா : அது ரோஸாய் மாதிரி.

பாபா : ரோசாய் என்றால்?

குசா : அதாவது காந்த மூலங்கல் தவிர வேறொன்றும் சாப்பிடுவதில்லை

பாபா : ஹோ! காந்த என்றால் வள்ளிக்கிழங்கு காந்தர் என்றால் வெங்காயம், இதோ வெங்காயம் சாப்பிடு.

குசா : பாபா தாங்கள் சாப்பிட்டால் நானும் சாப்பிடுவேன்.

அப்படியே பாபா வெங்காயத்தைச் சாப்பிட்டார். குசாபாவும் சாப்பிட்டார். அப்பொழுது சிலர் பாபாவிடம் வந்தார்கள். வேடிக்கை செய்ய எண்ணி பாபா பாரும் இந்த வைதீக பிராமணன் ஏகாதசி தினத்தில் வெங்காயத்தை தின்கிறான் என்று கேலி செய்தார்.

பாபாவே சாப்பிட்டார். நானும் சாப்பிட்டேன் இதில் தவறு என்ன? என்றார் குசா. "குசா பொய் சொல்கின்றான். நான் காந்த (வள்ளிக்கிழங்கை) சாப்பிட்டேன் பாருங்கள் என்று சொல்லி பாபா வாந்தி எடுத்து காண்பித்தார்". என்ன ஆச்சரியம்! வெறும் வள்ளிக்கிழங்காகவே பாபா வாந்தி பண்ணினார். குசாபாவ் மிகவும் ஆவலுடன் அதை விழுங்கினார். பாபா அவரை அடித்து, போக்கிரி வாந்தி பண்ணினதை ஏன் சாப்பிடுகிறாய் என்றார். ஆனால் குசாபாவ் அதை கவனியாமல் எல்லா வள்ளிக்கிழங்கையும் சந்தோஷமாக சாப்பிட்டார். பாபாவின் மனம் இளகி 'ஏ குசா நான் உன்னை

ஆசீர்வதிக்கின்றேன். என்னையே நினைத்து எப்பொழுது உன் கைகளை நீட்டுகின்றாயோ, அப்பொழுது என் பிரசாதம் உன் உள்ளங்கையில் விழும்' என்று தன் கைகளை குசாபாவ் சிரசில் வைத்து ஆசீர்வதித்தார். ஆக குசாபாவ் இறக்கின்ற வரையில் வெப்பமான உதி பிரசாதமாக அவர் கைகளில் கிடைத்து வந்தது.

## மாஸ்டர் தாரக்கட்

சிறு பையனும், பாபாவிடம் அபார நம்பிக்கையுள்ளவனுமான மாஸ்டர் தாரக்கட் ஒரு நாள் பாபாவை சென்று சேவித்தான்.

பாபா : பையா எனக்கு எட்டு ரூபாய் தட்சிணை கொடு.

பையன் : என்னிடமில்லையே பாபா.

பையன் : பரவாயில்லை போய் பாபுசாஹேப் ஜோக்கிடம் வாங்கிவா. அவ்வாறு பையன் ஜோக்கிடம் சென்றபோது அவர் பாகவதத்தில் துருவ சரித்திரம் வியாக்கியானம் செய்து கொண்டிருந்தார். சாதுக்கள் கடவுளாக இல்லாவிட்டாலும் கடவுளிடமிருந்து சில சக்திகளை அடைந்துள்ளார்கள் என்று சொல்லும்போது பையன் சென்றான். பையனுக்கு மிகவும் கோபம் ஏற்பட்டு நேராக பாபாவிடம் வந்து 'பாபா என்னை ஏன் அவ்விடம் அனுப்பினீர்' என்று கோபப்பட்டான்.

பாபா : என்ன நடந்தது?

பையன் : தாங்கள் ஒரு சாதாரண மனிதனென்றும் கடவுள் அல்ல என்றும் தூஷிக்கின்றார்களே!

பாபா : ஆம் அது உண்மைதானே நான் ஒரு அற்பப் பக்கிரி கடவுளுடன் என்னை ஒப்பிட முடியுமா?

பையன் : இவ்விதமாக பேசி எங்களை ஏமாற்றுகிறீர்கள். தாங்கள் ஒருவரே கடவுள் என்று நம்பியிருக்கிறோம். நன்மைகளை அடைகின்றோம். அப்படியிருக்க யாராவது

தங்களை சிறுமைப்படுத்த எப்படி பொறுப்போம். சாதுக்கள் இகழப்படும் இடத்தில் ஒரு விநாடி கூட நிற்பது பாபமல்லவா?

பாபா : ஆம்.

பையன் : கடவுளைப்பற்றி இகழ்ந்தால் அவர் கோபப்பட மாட்டார். ஆனால் தம்முடைய பக்தர்களைப் பற்றி இகழ்ந்தால் அவர் சகிக்கமாட்டார் அல்லவா,

பாபா : ஆம்.

பையன் : அந்த சாது பெரியவர் இன்னொருவர் அல்ல என்று வித்தியாசம் பாராட்டினால் நலமுண்டாகுமா?

பாபா : சாதுவை தூஷிக்குமிடத்தில் நிற்காதே. என்னையே நினைத்திரு. சாயி சாயி என்றாலே ஈரேழுலோகங்களை சுலபமாக கடந்து விடலாம்.

பையன் : நான் நடுவில் பாராயணத்தை விட்டுவிட்டால் பாபமல்லவா. ஆகவே ஜபம் செய்யமாட்டேன்.

பாபா : (பையனின் தாயைப் பார்த்து) அம்மா உன் மகனின் முழுபொறுப்பையும் நானே ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது.

தாய் : எங்கள் எல்லோரையும் தாங்கள் தான் கவனித்து வருகிறீர்கள்.

பாபா : ஆம் என் பக்தர்களை பாதுகாக்க அவர்கள் கீழே விழ நேர்ந்தால் என் கைகளை பரப்பி நான் நான்கு கைகளால் தாங்கிக் கொள்கிறேன்.

பையன் : ஆ பாபா இப்பொழுதுதான் தாங்கள் கடவுள் இல்லை என்றும் ஏழை பக்கிரி என்றும் சொன்னீர்கள். அப்படியானால் தங்களுக்கு நான்கு கைகள் உண்டாகுமா?

பாபா : சந்தோஷப்பட்டு பையனை ஆசீர்வதித்தார்.

## பாபாவின் புத்திமதி

பாபா : நானா, யாராவது வந்து எதையாகிலும் யாசித்தால் உன்னால் முடியும் வரை கொடு. திருப்தி ஏற்படாவிட்டால், மென்மேலும் கேட்டால் இனிய சொற்களால் இல்லை என்று மறுத்துவிடு கோபத்தை வெளிப்படுத்தாதே அதிகாரத்தைக் காட்டாதே.

நானா : இதிலென்ன கஷ்டம்! இனிமையாக இல்லை என்று சொல்வதில் யாதொரு கஷ்டமுமில்லை. கண்டிப்பாக இதை அனுசரிப்பேன். ஒரு நாள் கல்யாணில் சந்தோர்க்கரின் மனைவியிடம் ஒரு பிச்சைக்காரி பொரியரிசி யாசித்தாள். கொஞ்சமாக கொடுத்ததால் வாங்க மறுத்து வீட்டிலுள்ள அனைத்து பொரியரிசியும் யாசகமாக கேட்டாள். அப்படி கொடுத்தாலே தவிர வீட்டை விட்டு நகர முடியாது என்று பிடிவாதமாக இருந்தாள். மனைவிக்கு கோபமேற்பட்டு நானாவிற்கு சொல்லியனுப்பினாள். நானாவும் கீழே வந்து கோபமாக, அதட்டலாக பிச்சைக் காரியின் கழுத்தைப்பிடித்து வெளியே தள்ள உத்திரவிட்டார். பிச்சைக்காரி பயந்து ஒன்றுமே பெற்றுக் கொள்ளாமல் ஓடி விட்டாள்.

இது நடந்த சில நாட்களுக்கு பிறகு நானா பாபாவிடம் சென்று சேவித்தார். பாபா அவருடன் ஒன்றும் பேசவில்லை.

நானா : பாபா ஏன் என்னுடன் பேசவில்லை.

பாபா : என் போதனை ஏற்றுக் கொள்ளாதவனிடம் என்ன பேச்சு வேண்டியிருக்கிறது.

நானா : எந்த போதனையை நான் மறந்தேன். எல்லா புத்திமதிகளையும் ஞாபகம் வைத்து நடந்து வருகின்றேனே, தெளிவாகச் சொல்லுங்கள்.

பாபா : அன்றைய தினம் பிச்சைக்காரி பொரியரிசி அதிகமாக கேட்கும்போது உன் அதிகாரம் ஆர்ப்பாட்டம் எல்லாம் காண்பித்து அவளை வேலைக்காரனைக் கொண்டு கழுத்தைபிடித்து தள்ள முயன்றாயே. ஏன் அப்படிச் செய்தாய்! அவளுக்கு மெதுவாக, இனிமையாக பதிலுரைப்பதற்கு பதில் ஆர்ப்பாட்டத்தால் அறிவிழந்தாயே! ஏன் இம்மாதிரி? என் புத்திமதியை உதாசீனம் செய்தால் எப்படி பேசுவது.

நானா : உடனே பாபாவின் பாதங்களில் விழுந்து கதறி அழுது இனி அவ்வாறு செய்வதில்லை என்று மன்னிப்புக் கோரினார்.

## அதிதி உபாசனை

நானா தினந்தோறும் தான் சாப்பிடுவதற்கு முன்பாக, அதிதிகளுக்கு காத்திருந்தும், தினமும் யாரும் கிடைக்காததினால், மனச் சலிப்படைந்து, வேதத்தில் சொல்லியிருக்கும் கட்டளை அதிதி உபாசனை முடிந்த பிறகு தான் உட்கொள்ள வேண்டும் என்பது உபயோகமற்றதா என்று பாபாவைக் கேட்க ஒரு நாள் பாபாவிடம் சென்றார். நானா கேட்பதற்கு முன்பாக பாபா அவர் மனதை அறிந்து 'ஆம் அதிதி உபாசனை செய்ய வேண்டும். ஆனால் வேதத்தின் உண்மையான பொருளை நீ அறியவில்லை. அதிதி என்னும் பதம் ஒரு மனிதன் 3 முழம் உயரமுள்ளவன், அதிலும் பிராமணன் இதையா குறிக்கிறது. மனித ரூபமாகவோ, பக்ஷி, மிருகம், பூச்சி ரூபமாகவோ எந்த ஜீவன் எந்த சமயத்தில் பசியுடன் வருகிறதோ அதுவே அதிதி. இவைகள் லக்ஷக்கணக்காய் வருகின்றன. தப்பான அர்த்தத்தை விடுத்து வீட்டிற்கு வெளியே நிறைய அன்னத்தை கொண்டு போய் போட்டு விடு. கூச்சலிட வேண்டாம். எதையும் கூப்பிட

வேண்டாம். ஓட்டவும் வேண்டாம். அதை உண்ண எந்த பிராணி வந்தாலும் மனதினில் அதிருப்தி கொள்ளதே இவ்வாறு லக்ஷக்கணக்கான அதிதிகளுக்கு உணவளித்தவனாவாய், மிகவும் புண்ணியம் பெற்றவனாவாய்' என்று கூறினார். ஆக பாபா நானாவின் மனதறிந்து அவர் சந்தேகத்தை தக்க சமயத்தல் நிவர்த்தி செய்தார்.

## லஞ்சம்

ஒரு சப் ஜட்ஜ் லஞ்சம் வாங்கியதற்கு தண்டிக்கப்பட்டு பிறகு அப்பீலில் ஜெயிக்க பாபாவின் உதவியை நாடினார். அவர் வாய் திறப்பதற்கு முன்பே "வேப்பங்கொட்டையை பயிரிட்டதால் வேப்பங்காயை அறுவடை செய். செய்தபின் பலனை அனுபவிக்காமல் தப்பிக்க வழியே இல்லை. இங்கு வருவதிலும் பிரயோஜனமில்லை என்று சொன்னார்.

## பெண்ட்ரே

ஒரு சமயம் பெண்ட்ரே என்னும் பக்தரை நோக்கி 'பூட்டியிடம் சென்று 10 ரூபாய் தட்சிணை வாங்கி வா' என்றார். பெண்ட்ரே, பூட்டியிடம் சென்றபோது அவர் அப்பொழுதுதான் இறந்து விட்ட தன் குமாஸ்தாவை மனம் கலங்காமல் புதைத்துக் கொண்டிருந்தார். பிறகு பெண்ட்ரே பாபாவிடம் வந்தபோது பாபா "ஒரு துக்ககரமான சம்பவம் நடந்துவிட்டது. பயப்படாதே தைரியமாக இரு" என்றார். இவ்வாறு பாபாவினால் தயார் செய்யப்பட்டு பெண்ட்ரே வீட்டிற்கு போனபோது, அவரது குமாரன் இறந்துவிட்டான். ஆனால் பாபா அவரை முன்னமேயே தயார் செய்ததால், துக்கத்தை ஒரளவு பொறுத்துக் கொண்டார்.

## உயிர்ப்பித்தல்

ஒரு சமயம் ஒரு ஆட்டுக்குட்டி உஷ்ணம் தாங்காமல் சுருண்டு விழுந்து இறந்தது. அதை பாபா பரிதாபத்துடன் உயிர்பித்தார். இதையறிந்த ஒரு மாது தன் குமாரனை சர்ப்பம் கடித்ததால், அவனைக் காப்பாற்ற உதி பாபாவிடம் கேட்டாள். பாபா

கொடுக்கவில்லை அந்த பையனும் இறந்துவிட்டான். மறுபடியும் அந்த மாது மசூதிக்கு வந்து உருக்கமாய் ஓலமிட்டாள்.

காகா சாகேப் தீக்ஷிதர் இதை கண்ணுற்று, பொறுக்க முடியாமல் பாபாவிடம் "எனக்காகவாவது இறந்த இவள் மகனை உயிர்ப்பெற்று எழச் செய்யுங்கள்" என்று வேண்டினார். பாபா "காகா இதில் நீ சிக்கிக் கொள்ளாதே நடந்தது நன்மைக்கே. அவன் சரீரத்தில் புகுந்து விட்டான். அந்த சரீரத்தில் அதிக விசேஷ நன்மையை செய்வான். ஆனால் பாம்பு கடித்த தேகத்தில் நிறைவேற்ற முடியாது. அப்படியே நான் இந்த தேகத்தில் இழுத்துவிட்டால், புதிய தேகம் இறந்துவிடும். இந்த ஜீவன் உயிர்பெறும். உனக்காக இதை செய்ய முடியும். ஆனால் விளையும்பயனை ஆலோசித்தாயா. அந்த பொறுப்புக்கு உன்னை ஆளாக்கிக் கொள்கின்றாயா" என்று கேட்டார். இதைக் கேட்ட தீக்ஷிதர் தன் கோரிக்கையை வற்புறுத்துவதில்லை என்று விட்டுவிட்டார்.

## அப்பா குல்கர்ணி

ஒரு சமயம் அப்பா குல்கர்ணியைப் பார்த்து, "பக்காத் திருடர்கள் கிராமத்திற்கு வந்துள்ளார்கள். அவர்களுக்கு முதல் வேட்டை நீயே, முக்கியமான வஸ்துக்களின் பேரிலே அவர்கள் கண். அதை எடுத்துக் கொண்டதும் ஓடிவிடுவார்கள்" என்று சொன்னார்.

குல்கர்ணி தான் பத்திரப்படுத்திய சொத்துக்களைப் பற்றி பாபா கூறுவதாக நினைத்து பணம், பண்டங்களை மிகவும் பத்திரப்படுத்தினார். ஆனால் அந்த கிராமத்தில் காலரா வியாதி கண்டு அப்பா குல்கர்ணியே முதல் முதலாக இறந்தார். இதையே பாபா குறிப்பிட்டார்.

## முன்சீப் மனைவி

நிகோஜ் கிராம முன்சீப் மனைவி பிளேக் வியாதி முற்றி இறக்கும் தருவாயிலிருந்தாள். பாபா அன்றிரவு மஹல்சபதியை நோக்கி "பக்தா இன்றிரவு நீ தூங்கக்கூடாது. நின்று காவல் புரிய

வேண்டும். இன்று கடவுளைக் குறித்து பிரார்த்தனை செய்வேன். ஏனெனில் அந்த பெண் பிள்ளையை பிளேக் கொல்லவிருக்கிறது. ஜாக்கிரதையாக பாதுகாத்து வா" என்றார். அதே மாதிரியாக மஹல்சபதி பாபாவை தடங்கலும், விக்கலும் நேராமல் பாதுகாத்து வந்தார். ஆனால் நடுநிசியில், "நிவான் மாம்லத்தார் பாபாவை தரிசிக்க வந்திருக்கிறார்" என்று அவர் ஜவான் சந்தடி செய்து கூச்சலிட்டான். மஹல்சபதியுடன் அவர்கள் பேசியதும், உதி எடுத்துக் கொண்டதும் பாபாவை அலட்டி விட்டது. பாபா கோபம் கொண்டார். மஹல்சபதியின் மீது துணியை கோபமாக விட்டெறிந்து "நீ ஒரு குடும்பத் தலைவனா! அந்த கிராமத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று அறியாமல் ஜனங்களை ஏன் இந்த சந்தர்ப்பத்தில் விட்டாய்" என்று கடிந்து கொண்டார். சிறிது நேரம் கழித்து "அப்படியே ஆகட்டும். நடந்தது நன்மைக்கே" என்றார். அன்றிரவு முன்சீப் மனைவி இறந்தாள்.

## காலராவை தடுத்தல்

1917ல் ஜுன் மாதத்தில் ஒரு ஸ்திரீயும், குமாரனும் பாபாவை தரிசிக்க வந்து ஆரத்தி சமயத்தில் பாபாவின் எதிரில் உட்கார்ந்திருந்தார்கள். பாபா அவர்களைப் பார்த்து பகல் 2 மணிக்கு சரியாக தன்னிடம் வரும்படி விடை கொடுத்தார். அவ்விதமே அந்த பையன் பகல் 2 மணிக்கு துவாரகமாயிக்கு வந்திருந்தான். பாபா அவனைப் பார்த்து "பையா இந்த பாயின்மேல் என் பாதத்தின் அடியில் உட்கார்ந்து என் காலை கெட்டியாய் பிடித்துக்கொள். நான் சொல்லும் வரையில் என் காலை விடாதே" என்றார்.

பையனும் பாபாவின் காலை கெட்டியாக பிடித்துக் கொண்டான். 3 மணியளவில் ஒரு கோரஸ்திரி உருவம், விரிந்த கூந்தல் கோரமான முகம், நீண்டு தொங்கிய நாக்கு தெத்திப்பல் இவைகளுடன் மதில் சுவரை தாண்டி பையனை நெருங்கிற்று. பாபாவைப் பார்த்து "இந்த பையன் எனக்கு வேண்டும்" என்றது. பாபா "அவனைக் கொடேன்" என்றார். அவள் இந்தப் பையனை நெருங்கி பிடிக்க முயன்றாள். கடுங்கோபத்துடன் பாபா எழுந்து நின்று

பையனை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, அவளை மாரில் உதைத்தார். அவள் கர்ஜித்துக் கொண்டு ஓடிவிட்டாள். பாபா பையனை பார்த்து "இனி பயமில்லை. அந்த ஸ்தீரீ உன்னை பிடிக்க என்னை அனுமதி கேட்டாள். அவள் காலரா தேவதை. உடனே உன் தாயுடன் பம்பாயிற்கு புறப்படு" என்று உத்தரவு கொடுத்தார். பையனும் பாபாவை சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து நன்றி செலுத்தினான். தாயும் பாபாவை போற்றி மகிழ்ந்தாள்.

## எருமைக்கு சத்கதி

பாபா : (ஜோக்கின் மனைவியிடம்) உன்னிடம் ஒரு எருமை வரும். அதற்கு நிறைய நெய்விட்டு பூர்ண போளியை போடு.

ஜோக் மனைவி : அந்த எருமையை எப்படி அடையாளம் கண்டு கொள்வது.

பாபா : அது தானாகவே கதவு பக்கம் வரும்.

ஜோக் மனைவி : எத்தனையோ எருமைகள் என் கதவு பக்கம் போகிறது.

பாபா : தேவையான பூர்ண போளிகளை நீ செய்து முடிக்கும்பொழுது எந்த எருமை, உன் கதவிடம் வருமோ, அந்த எருமைக்குப் போடு.

ஜோக் மனைவி : என் வீட்டுக்கு வடக்கு தெற்கு இரண்டு பக்கமும் கதவுகள் உள்ளன.

பாபா : தென்பக்க கதவு வழியாக வரும். இதே மாதிரியாக ஜோக்கின் மனைவி 18 பூர்ண போளிகள் தயார் செய்து முடித்து நெய் தடவினாள். மனைவி அப்பொழுது ஒரு எருமை தென்பக்கம் கதவிடம் வந்து தானாகவே நின்றது. ஜோக் மனைவி எல்லா

பூர்ண போளிகளையும் அதனிடம் வைத்தாள். அது எல்லாவற்றையும் தின்று உடனே கீழே விழுந்து இறந்தது. எருமை இறந்ததால் அதன் பாபத்திற்காளானது ஒரு பக்கமும், மற்றோரு பக்கம் எருமைக்கு சொந்தக்காரனோ, சர்க்காரோ தன்பேரில் குற்றம் சுமத்தி உபத்திரவப்படுத்துவார்களோ என்று நடுங்கி பாபாவிடம் சென்று வணங்கி நடந்ததைச் சொன்னாள். பாபா அவள் பயத்தைப் போக்கி "நெய்யுடன் போளியை தின்னும் ஆசையைத் தவிர மற்றெல்லா வாசனைகளும் அந்த எருமைக்கு தீர்ந்திருந்தது. இந்தக் கடைசி ஆசையும் உன்னால் தீர்க்கப்பட்டதால் அதன் ஆத்மா உடலை விட்டு நற்கதியடைந்தது. நீ கவலைப்பட வேண்டாம்" என்று தைரியமளித்தார்.

## பார்வையளித்தல்

விட்டல் ராவ் தேஷ் பாண்டேவின் பாட்டனார். இரு கண்களின் பார்வையிழந்து, சீரடிக்கு தன் பேரனுடன் பாபாவை தரிசிக்க வந்தார். பாபாவிற்கு நமஸ்காரம் செய்து தான் பாபாவை பார்க்க முடியவில்லையே என்று உருக்கமாக கதறினார். பாபா உடனே உதியை கொடுத்து "நீர் பார்ப்பீர்" என்று சிரசின் மீது கை வைத்தார். என்ன ஆச்சரியம்! கண் பார்வை நன்றாக தெரிந்து, பாபாவை நன்றாக தரிசித்து நன்றி செலுத்தினார். எவ்வித சலனமுமில்லாமல் ஊர் போய் சேர்ந்தார்.

இவ்விதமே பன்ஸியிலிருந்து ஒரு ஸ்திரி பாபாவிடம் வந்தாள். இவள் பிறவி குருடு. மசூதியில் பாபாவை நோக்கி "பாபா! இந்த கண்களால் உம்மை பார்க்க வேண்டும்" என்று வேண்டினாள். உடனே அவள் பாபாவை மட்டும் பார்க்க முடிந்தது. நமஸ்காரம் செய்து வெளியே போக திரும்பின போது, மறுபடியும் பார்வையை

இழந்தாள். பாபாவை தரிசிக்கவே வேண்டினாள். அது மட்டும் அளிக்கப்பட்டது.

## கேசவ காட்கீல்

சிதம்பர கேசவ காட்கீல் ஒரு அரசாங்க அதிகாரி. வேறு ஊருக்கு மாற்றினபோது ரயிலில் போகும்போது சீரடிக்குப்போய் பாபாவை பார்க்கவில்லையே என்று விசனப்பட்டார். அப்பொழுது ரயிலுக்குள் ஒரு உதிப்பொட்டலம் காட்கிலின் மடியில் விழுந்தது. நெடு நாட்களுக்குப் பிறகு கேசவ காட்கீல் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கினார். "நீ வர முடியவில்லை ஆகையால் உனக்கு உதி அனுப்பினேன். உனக்கு அது கிடைத்ததா?" என்று பாபா விசாரித்தார். காட்கீல் அதைக் கேட்டு மெய்மறந்து சந்தோஷித்தார்.

## சர்ப்பத்

ரேகே ஒரு சமயம் பாபாவிற்கு எலுமிச்சம்பழ சர்பத் தயார் செய்து, தன்னை பாபாவின் சிறந்த பக்தனாக நினைத்து சர்ப்பத்தை கொஞ்சம் ருசி பார்த்து பாபாவிற்கு கொடுத்தார். பாபா அதைப்பருகி H.S.D. தீக்ஷிதரைப் பார்த்து, 'காகா இது எவ்வளவு புளிப்பாய் உள்ளது பார். சிறந்த பக்தன் செய்யும் வேலையா இது' என்று திருப்பிக் கொடுத்தார். காகாவும், ரேகேவும் ருசி பார்த்ததில் மிகவும் புளிப்பாக இருந்தது. ரேகே உடனே பாபாவிடம் சரணமடைந்து இனி அவ்வாறு கர்வப்படுவதில்லை என்று மானசீகமாக வேண்டினார். பாபா "பயப்படாதே, நான் ஒரு வேடிக்கை செய்தேன் இப்பொழுது ருசி பார்த்துச் சொல்" என்றார். இப்பொழுது சர்ப்பத் நன்றாக இனித்தது. ரேகேவின் மனமும் இனிப்பாயிற்று.

## காவடி

மஹல்சபதியும் இன்னும் நான்கு பேர்கள், சீரடியிலிருந்து காவடி எடுத்துக் கொண்டு ஜெஜூரிக்குச் சென்றார்கள். அங்கே காலரா வியாதி மும்மரமாக இருக்கவே மிகவும் பயந்து, மஹல்சபதி காவடி

மேல் சாய்ந்து பாபாவையே நினைத்திருந்தார். தனக்கும் பின்னால் யாரோ இருப்பதைத் திரும்பிப் பார்த்ததும், பாபா காணப்பட்டு, உடனே மறைந்தார். பிறகு மஹல்சபதிக்கு தைரியமுண்டாகி, நான்கு தினங்கள் தங்கியிருந்தார்கள். ஒருவரும் காலராவால் அவஸ்தைப்படாமல் பத்திரமாக சீரடிக்கு திரும்பினார்கள். பாபா மஹல்சபதியைப் பார்த்து "பக்தா உனக்கு நல்ல யாத்திரை, காவடி மேல் சாய்ந்து கொண்டிருந்தாய். அந்த சமயம் அவ்விடம் நான் வந்திருந்தேன்" என்றார். மஹல்சபதி நிறைந்த கண்ணீருடன் பாபாவை வணங்கினார்.

## தபோவனம்

சமஸ்கிருதத்தில் மகா பண்டிதரான பாலகிருஷ்ண உபாசனி ஹரித்வார் தபோவனம் சென்றபோது ஒரு சாதுவைக் கண்டார். அந்த சாது உபாசனிகள் குலதனமாக பாவித்து வரும் ஒரு சாலிகிராமத்தை, தானே உபாசனியின் மூதாதையர்களுக்கு கொடுத்ததாகவும் சொன்னார். பாலகிருஷ்ண உபாசனி அவரை யார் என்று விசாரித்தார். அந்த சாது இந்துஸ்தானியில் சில புரியாத சமிக்ஞைகள் செய்தார்.

பல வருடங்களுக்குப் பிறகு 1911-ல் தனது சகோதரர் காசிநாத் உபாசனியை சந்திக்க கோபர்கான் சென்று, பிறகு சீரடிச் சென்றார். பாபாவை நமஸ்கரித்ததும் "கண்டோபா கோயிலுக்கு போ" என்று பாபா கட்டளையிட்டார். உபாசனி "பாபா தங்களைக் கண்டதும் எல்லா தெய்வங்களையும் தரிசத்ததின் பலன் அடைந்தேன்" என்றார். மறுபடியும் பாபா "கண்டோபா கோயிலுக்குப் போ" என்றார். அவ்வாறே அங்கே சென்றதும் தான் தேடி வந்த அவர் சகோதரர் காசிநாத் உபாசனியை கண்டு சந்தோஷித்தார். இதற்காகவே பாபா தன்னை கண்டோபா கோயிலுக்கு தன் மனதறிந்து கட்டளையிட்டதையறிந்து சந்தோஷமடைந்தார். தம்பியுடன் மறுபடியும் மசூதிக்குச் சென்ற போது, பல வருடங்களுக்கு முன்பாக தபோவனத்தில் சாது சொன்ன இந்துஸ்தானி சமிஞ்கைகளை பாபா செய்து காண்பித்து, தானே அந்த சாது என்று சொன்னார். பாலகிருஷ்ண சாஸ்திரி மெய்மறந்து பாபாவை வணங்கி எழுந்தார்.

## ஆதாம் டவாலி

ஒரு சமயம் ஆதாம் டவாலி என்பவரிடம் ஒரு மார்வாடி வந்து போஜனம் கேட்டான். டவாலி கொஞ்சம் பணம் கொடுத்து, மார்வாடி ஓட்டலுக்கு சென்று சாப்பிடச் சொன்னார். பிறகு ஒரு சமயம் ஆதாம் டவாலி சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கினார். அப்பொழுது பாபா "இந்த மனிதனிடம் ஒரு சமயம் பசியோடு போனேன். சாப்பாட்டிற்கு ஒரு மார்வாடியிடம் என்னை அனுப்பி வைத்தான்" என்றார். டவாலிக்குச் சந்தோஷத்தினால் கண்களில் நீர்பெருக பாபாவே தன்னிடம் போஜனம் கேட்க வந்தார் என்பதை நினைத்து உருகினார்.

## சீரடி

1908க்கு முன்பு சீரடி ஒரு குக்கிராமமாக இருந்தபோது பாபா சொன்னார். "இந்த கிராமத்தில் மாளிகைகள் உண்டாகும். பெரிய பிரபுக்கள் வருவார்கள். செடிகள் போடப்படும், ரதங்கள், குதிரைகள், யானைகள் எல்லாம் வரும். நேர்த்தியான ஊர்வலங்கள் நடக்கும்" என்றார். உபயோகமில்லாத அந்த குக்கிராமத்தில் இவைகள் எல்லாம் நடவாதவை என்று கருதி ஜனங்கள் சிரித்தார்கள். ஆனால் பாபாவின் கீர்த்தி வளர, வளர இவையெல்லாம் சர்வ சாதாரணமாக நடந்தேறியது.

## பாபாவின் முக்கால உணர்வு

1915ம் வருடம் லக்ஷ்மணன் T. நாட்கர் பாபாவிடம் தங்கியிருந்து உத்திரவு பெறும்பொழுது நேரமாகி கோபர்கானில் ரயிலுக்கு போய்ச் சேரும் வேளை கடந்து விட்டது. ஆனாலும் பாபா "போ கோபர்கானில் ரயில் உனக்கு கிடைக்கும்" என்றார். பாபா சொன்னால் அசைக்க முடியாததல்லவா! நாட்கர் புறப்பட்டு போனார். ஆனால் மத்தியில் கோதாவரியை கடக்க இருட்டி விட்டதால் படகுகள் விடப்படவில்லை. பாபாவை நினைத்திருந்தபோது ஒரு பெரிய உத்தியோகஸ்தர் அங்கு வந்து சேர்ந்தார். அவருக்கு ஒரு படகு தயார் செய்யப்பட்டு அவருடன் நாட்கரும் படகேறி அக்கரைக்குச்

சென்று திருடர்கள் தொந்தரவு இல்லாமல் கோபர்காவ்னை அடைந்தார். பாபா சொன்ன பிரகாரம் ரயிலும் தாமதமாக வந்ததால் சுலபமாக ஏறி ஊர்ப் போய் சேர்ந்தார். பாபாவிற்கு தெரியாததொன்றுமில்லை.

## மானபங்கம்

மஹல்சபதி ஒரு சமயம் மாமனார் வீட்டில் நடந்த பண்டிகைக்கு போய் வர பாபாவிடம் உத்திரவு கேட்டார். பாபா தடுத்து "அங்கே நீ மானபங்கம் அடைவாய்" என்று சொன்னார். ஆயினும் போவதை நிறுத்த முடியாமல் மஹல்சபதி சென்றார். அவர் அங்கே போனபோது அவரை மதித்து காத்திராமல் பண்டிகை பற்றிய போஜனம் முடிந்து போய் விட்டிருந்தது. பாபாவின் எச்சரிக்கை வார்த்தையை நினைத்து வருந்தினார்.

மற்றொரு சமயம் மஹல்சபதி, அர்த்தங்கோன் என்ற இடத்திற்கு போய்வர பாபாவின் உத்திரவு கேட்டார். பாபா அவ்விடம் போக வேண்டாம், சண்டை சச்சரவு உண்டாகும் என்று எச்சரித்தார். ஆனால் மஹல்சபதி அங்கு மல்ஹாரி மஹாத்மியம் பாராயணம் செய்ய கடமைப்பட்டிருந்ததால், பாபாவின் உத்திரவை மீறிச் சென்றார். அவ்வாறு பாராயணம் செய்து கொண்டிருக்கும்போது வாலிபர்கள் சண்டையிட்டுக் கொண்டு ஒருவருக்கொருவர் தடிகளால் அடித்துக் கொண்டார்கள். அதனால் பாராயணத்தை நிறுத்தி விட்டு பாபாவின் வார்த்தையை நினைத்து வருந்தி வீடு திரும்பிச் சென்றார்.

## கோதாவரி ஸ்நானம்

1910 வருடம் நவம்பர் மாதத்தில் ஜோக் என்னும் பக்தர் பாபாவிடம் சென்று தான் அடுத்த நாள் கோதாவரியில் ஸ்நானம் செய்து வர உத்திரவு கேட்டார். பாபா "கோதாவாரியே சீரடிக்கு வரும் நீர் போக வேண்டாம்" என்று தடுத்து நிறுத்திவிட்டார். ஜோக் அதிருப்தியுடன் அடுத்த நாள் பாபாவை தரிசித்து அமர்ந்திருந்தார். அப்பொழுது சில கிராமத்தார்கள் ஓடி வந்து "பாபா, புதிதாக வெட்டியிருக்கும் கால்வாயின் வழியாக கோதாவரி ஜலம் சீரடிக்கு வந்து கொண்டிருக்கிறது" என்று சொன்னார்கள். உடனே பாபா

ஜோக்கைப் பார்த்து சிரித்து "என்ன! கோதாவரி சீரடிக்கு வந்துவிட்டது. போய் ஸ்நானம் செய்" என்று உத்திரவு இட்டார். ஜோக்கிற்கு ஆனந்தம் உண்டாகி பாபாவை திரும்பத் திரும்ப விழுந்து வணங்கினார்.

மற்றொரு சமயம் பாபா ஜோக்கின் தகப்பனாரின் திதியை கோபர்கானில் நடத்துவதற்கு ஒத்துக் கொள்ளாமல் சீரடியிலேயே ஏற்பாடு செய்யச் சொன்னார். ஆனால் சீரடியில் அவர் குலத்தைச் சேர்ந்த பிராமணர்கள் திதியை செய்வதற்கு கிடைக்க மாட்டார்கள். ஆகவே பாபாவிடம் அவர் குலத்தைச் சேர்ந்த பிராமணர்கள் கோபர்கானில் இருப்பதால் அங்கேயே சென்று திதியை நடத்துவதாக வற்புறுத்தி வேண்டினார். கடைசியில் திதியை விட்டு விடுவதா என்று பாபாவிடம் கேட்டார். அவர் குலத்தை சேர்ந்த பிராமணர்கள் அவர்களே சீரடிக்கு வந்து திதியை நடத்தி கொடுப்பார்கள் என்று பாபா உறுதியளித்தார்.

ஜோக் : திதி வருகிறதென்று அவர்களுக்கு எப்படி தெரியும். அப்படியே வந்தாலும் என் குலத்தைச் சார்ந்தவர்களாக இருப்பார்களா?

பாபா : ஆம்

சிரார்த்த தினம் 9 மணிக்கு இரண்டு பிராமணர்கள் பாபாவிடம்சென்று வணங்கி இங்கு பிராமண போஜனம் கிடைக்குமா என்று கேட்டார்கள். பாபா ஜோக்கிடம் அனுப்பி வைத்தார். அவர்கள் ஜோக்கிடம் போனார்கள். அவர்கள் வைதீகத்தில் நன்றாக பழகியும் தம் குலத்தைச் சார்ந்தவர்களாக இருக்கவே அவர்களை வைத்து ஆனந்தமாக திதியை கொண்டாடினார். பிறகு பாபாவிடம் சென்று அவர் சமத்காரத்தை பாராட்டி விழுந்து வணங்கினார்.

## கார்னிக்

கல்யாணியைச் சேர்ந்த கார்னிக் முதன்முதலில் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கினபோது "வரவேண்டும் சௌகார்" என்று அழைத்தார். அப்பொழுது கார்னிக் மிகவும் ஏழையாகவும்,

வறுமையில் வாடி உற்சாகமில்லாமலிருந்தார். ஆனால் சில வருடங்களில் பாபாவின் வார்த்தைப்படி மிகப்பெரிய பணக்காரராகி பணம் லேவாதேவி செய்பவராக மாறினார்.

## வயிற்றுவலி

1917ல் வைத்திய பரீட்சைக்கு படித்து வந்த ஒரு மாணவனின் கனவில் பாபா தோன்றி "என் வயிறு வலித்துக் கொண்டிருக்கிறது. நீ ஒரு வைத்தியனல்லவா. எனக்கு மருந்து கொடு" என்று கேட்டார். அதற்கு மாணவன் "நான் இன்னும் வைத்தியனாகவில்லை மாணாக்கன் தான்" என்று பதில் சொன்னான். பாபா "பரவாயில்லை மருந்து கொண்டு வா" என்று சொல்லி மறைந்தார். அதே மாதிரியாக வயிற்று வலியைப் பற்றிய கேள்வி ஒன்று பரீட்சையில் இருந்தது. மாணாக்கன் ஆச்சரியமடைந்தான்.

## கழுத்தில் கட்டி

மஹல்சபதியை நோக்கி ஒருநாள் பாபா உன் மனைவியின் கழுத்தில் ஒரு கட்டி இருக்கிறது. அதன் வலிகொடியது நான் அதை குணப்படுத்துவேன். வேறு ஒருவராலும் குணப்படுத்த முடியாது என்றார். அந்த சமயத்தில் அவர் மனைவி வெகு தூரத்தில் ஒரு ஊரில் இருந்தாள். அவளுக்கு கட்டி வந்ததே மஹல்சபதிக்கு தெரியாது. அவள் கட்டியால் அவஸ்தைப் பட்டதாகவும் பிறகு குணமானதாகவும் ஒரு கடிதம் பாபா சொன்ன பிறகு வந்தது. இதே மாதிரியாக தீக்ஷிதரின் சகோதரருக்கு நாக்பூரில் அசௌக்கியமாக இருந்த செய்தி சீரடியில் தீக்ஷிதருக்கு தெரிவிக்கப்பட்டது. தீக்ஷிதர் பாபாவிடம் சென்று வணங்கி "என் சகோதரனுக்கு உபயோகமில்லாதவனாக இருக்கின்றேன்" என்று மன வருத்தத்துடன் சொன்னார்.

பாபா : "நான் உபயோகமுள்ளவனாக இருக்கின்றேனே" என்றார்.

சில நாட்களில் தீக்ஷிதருக்கு அவர் சகோதரரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் நாக்பூரில் ஒரு சாது தீக்ஷிதரின்

சகோதரரிடம் வந்து "நான் உபயோக முள்ளவனாக இருக்கின்றேனே" என்ற அந்த வார்த்தையை சொல்லி நோயை குணப்படுத்தியதாக தெரிவிக்கப்பட்டது. தீக்ஷிதர் பாபாவின் லீலைகளையும், சாய் சஞ்சீவித் தன்மையையும் உணர்ந்து, பாபாவை மிகவும் கொண்டாடினார்.

## காகா மஹாஜனி

1917ல் காகா மஹாஜனியின் மைத்துனன் குமாரன் பம்பாயில் இருந்த காகாவிடம், அவரை சீரடியில் பாபாவிடம் (தகப்பனார்) சேட்டின் தேக சௌக்கிய விஷயமாக கேட்டு வரச் சொன்னான். அப்பொழுது தீக்ஷிதர் சீரடியிலிருந்ததால் அவருக்கு எழுதினால்போதும் என்று காகா அபிப்ராயப்பட்டார். ஆனால் சேட்டின் மகன் பிடிவாதமாக காகவே நேரில் போய் பாபாவைக் கண்டு அவர் உத்திரவை வாங்கி வர வேண்டுமென்றும் அதுதான் தன் தகப்பனாருக்கு திருப்தியாகுமென்றும் சொன்னான். அதே மாதிரியாக காகா சீரடிக்குப் புறப்பட்டார். இந்த சம்பாஷணை பம்பாயில் நடக்கும்பொழுது, சீரடியில் பாபா அவ்விடத்தில் "என்ன தர்க்கமும் ஆலோசனையும் நடந்து கொண்டிருக்கின்றன' என்றார். மறுநாள் காகா பாபாவிடம் வந்து சேவித்தபோது பாபா "நேற்று நான் சொன்ன விஷயம் இதுதான்" என்று தீக்ஷிதரிடம் சொன்னார். பிறகு தீக்ஷிதரும், காகாவிடம் ஒருவருக்கொருவர் விஷயங்களை ஒப்பிட்டுக் கொண்டார்கள். பாபா 100 மைலுக்கு அப்பால் இருந்தபோதிலும் ஒவ்வொன்றையும் நன்றாக அறிகின்றார்! என்று கண்டு கொண்டார்கள்.

## கஜானன் மகராஜ்

சேகானில் கஜானன் மகராஜ் என்கிற பிரசித்தி பெற்ற சாது மகா சமாதியடைந்தபோது பாபா சீரடியில் மிகவும் கவலையோடு இருந்தார். ஒரு பக்தர் காரணம் கேட்க பாபா "என் கஜானன் போய் விட்டார்" என்று சொன்னார். உடனே சேகானுக்கு கடிதம் எழுதி பாபா சொன்ன மாதிரியே கஜானன் மகராஜ் சமாதியடைந்த விஷயம் ஊர்ஜிதமாகியது.

## காகா கோபேஷ்வர் மகராஜ்

காகாகோபேஷ்வர் மகராஜ் தன்னை வந்து வணங்கிய ஜோஷி என்னும் வக்கீலையும், மற்றொருவரையும் பாபாவை சென்று தரிசிக்க உத்திரவு செய்தார். ஆனால் அவர்கள் சில நாட்கள் கழித்தே சீரடிக்கு புறப்பட்டார்கள். அதற்குள் காகா கோபேஷ்வர் மகராஜ் சமாதி ஆகிவிட்டார். இது வக்கீலுக்குத் தெரியாது. சீரடிக்கு இருவரும் வந்தபோது பாபா மிகவும் கோபமாக இருந்தார். ஆனால் இவர்கள் இருவரையும் கண்டவுடன் சாந்தமடைந்து என்ன அந்த கிழவரைக் கொன்றுவிட்டு இங்கே வந்தீர்களா! என்று பாபா சொன்னார். பிறகு தான் வக்கீல் காகா மகராஜ் சமாதியடைந்ததை அறிந்து கொண்டு பாபாவின் முக்கால உணர்வை போற்றினார்.

## தாம்பூலம்

ஒரு சமயம் தீக்ஷிதர் பாபாவின் படத்திற்கு வாடாவில் நிவேத்யம் செய்யும்போது தாம்பூலம் கொடுக்க மறந்து பிறகு மசூதிக்குச் சென்றார். உடனே பாபா “காகா தாம்பூலம் கொடுக்கவில்லையே கொண்டு வா அதை” என்றார். உடனே தீக்ஷிதருக்கு தன் தவறை பாபா எவ்வளவு அழகாக சுட்டிக் காண்பித்து தன்னை மகிழச் செய்கின்றார் என்று நினைத்து பூரித்துப் போனார்.

## போஜனம்

கபர்தேவின் கனவில் பாபா தன் வீட்டிற்கு வந்து போஜனம் செய்வதுபோல் கனவு கண்டார். மறுநாள் சீரடிக்குக் கிளம்பிச் சென்று பாபாவை நமஸ்காரம் செய்தபோது “பாபா ஆமாம் உன் வீட்டில் நேற்றிரவு போஜனம் செய்தேன். ஆனால் தட்சிணை கொடுக்கவில்லையே கொண்டு வா அதை” என்று சொல்லி தட்சிணையைப் பெற்றார். கபர்தேவிற்கு பாபாவின் செய்கை மிகவும் சந்தோஷம் அளித்தது.

## உத்தவேசபூவா

தஹானுவிலிருந்த உத்தவேசபூவா தன் சிநேகிதருடன் துவாரகைக்குப் போக கப்பலேறிச் சென்றார். கப்பலில் ஓரமாக நின்று வேடிக்கை பார்த்தபோது அவரிடமிருந்த பர்ஸ் கடலில் தவறி விழுந்துவிட்டது. அதில் டிக்கட்டும், எல்லா பணமும் இருந்தது. துவாரகையிலிருந்து பாபாவிற்கு நடந்த விவரங்களைச் சொல்லி பணம் தேவை என்று கடிதம் எழுதினார். அந்த கடிதம் வருவதற்கு முன்பே பாபா தஹானுவில் ஒரு பெரிய பணக்காரருக்கு கனவில் தோன்றி "உன் சிநேகிதனின் பணம் கடலில் விழுந்துவிட்டது. அவனுக்கு பணம் அனுப்பு" என்று கட்டளையிட்டார். அவரும் அடுத்த நாளே துவாரகைக்கு உத்தவேசபூவாவிற்கு 50 ரூபாய் மணியார்டர் மூலமாக அனுப்பி வைத்தார். அதைப் பெற்றுக்கொண்டு பூவா யாத்திரை முடித்து சீரடிக்கு வந்து பாபாவை சேவித்தவுடன், பாபா ஒரு பாட்டு பாடினார்.

**"கைப்பணம் கடலினில் விழுந்த தென்ன**
**கடவுளே பணம் நீர் கொடுத்த தென்ன"**

இதைக் கேட்ட பூவா மிகவும் சந்தோஷமடைந்தார்.

## D.D. ராஸனே

ராஸனே பாபாவை சேவித்தபோது அநேக தடவை தட்சிணையாக பாபாவிற்கு பணத்தை கொடுத்து மிகுதி ரூ. 25 மட்டும் வைத்திருந்தார். ஊருக்கும் கடிதம் எழுதி கொஞ்சம் பணம் அனுப்பும்படி எழுதியிருந்தார். மறுபடியும் பாபா தட்சிணையாக கேட்டபோது தம்மிடம் பணமில்லை என்று சொன்னார். பாபா ஏன் பொய் சொல்லுகிறாய் உன்னிடம் ரூ. 25 இருக்கிறது. நீ எழுதின பணமும் இப்பொழுது வந்து விடும் என்றார். ராஸனே பாபாவின் அந்தர்யாமியத்தை போற்றி 25 ரூபாயை கொடுத்து வணங்கினார்.

## பாபுராவ்

பாபுராவ் சிறுவனாக இருந்தபோது பணம் ஒன்றும் இல்லாமல் சீரடிக்குச் சென்றார். வழியில் மாமன் வீட்டிற்கு சென்று ஓய்வெடுத்தார். பிறகு மாமன் வெறுங்கையில் பாபுராவ் சாதுவை சேவிக்கக்கூடாது என்று சொல்லி ஒரு ரூபாய் தட்சிணை பாபாவிற்கு கொடுக்கும்படி சொல்லி கொடுத்தார். பாபுராவ் அதை நிஜார் ஜேபியில் போட்டுக் கொண்டு அதை மறந்தவராகி பாபாவிடம் சென்று வணங்கினார். பாபா தட்சிணை கேட்டபோது தன்னிடம் ஒன்றுமில்லை என்று கைவிரித்தார். பாபா "உன் ஜேபியில் ஒரு ரூபாய் உன் மாமன் கொடுத்தது இருக்கிறது, எடு அதை" என்றார். உடனே பாபுராவிற்கு ஞாபகம் வந்து பையிலிருந்து பணத்தை எடுத்து பாபாவிடம் கொடுத்து வணங்கினார். எல்லாமறிந்த பாபாவிடம் ஒன்றையும் மறைக்க முடியாதல்லவா!

## ஏமாற்றுதலை தவிர்த்தல்

N.V. என்பவர், பாபா தட்சிணை கேட்பார், அப்படி கேட்டால் தன்னிடம் ஒன்றுமில்லை என்று தைரியமாக சொல்லலாம் என்று நினைத்து தன் நண்பரிடம் எல்லா பணத்தையும் கொடுத்து வைத்தார். பிறகு பாபாவிடம் சென்று வணங்கியபோது பாபா "எனக்கு 2 ரூபாய் தட்சிணை இந்த மனிதனிடமிருந்து வாங்கிக் கொடு" என்று நண்பனை சுட்டிக் காண்பித்தார். ஆக பாபாவை ஏமாற்றவே முடியாது என்று தெரிந்துகொண்டு தன் நண்பனிடம் கொடுத்து வைத்த பணத்தை வாங்கி பாபாவிடம் கொடுத்தார்.

## போலீஸ் உத்யோகஸ்தர்

பாபா ஒரு போலீஸ் உத்யோகஸ்தரைப் பார்த்து தக்ஷிணை கேட்டார். அதற்கு அவர் தன்னிடம் பணமில்லை என்று கைவிரித்தார். உடனே பாபா "உன் சட்டைப்பையில் 50 ரூபாய் உள்ளது. எடு அதை" என்றார். போலீஸ் உத்யோகஸ்தரும் அந்த பணத்தை எடுத்து பாபாவிடம் கொடுக்க நீட்டியபோது பாபா அதை மறுத்து "இல்லை

அது சீக்கிரமே உனக்கு தேவையாக இருக்கும்" என்று சொன்னார். அதே மாதிரியாக போலீஸ் உத்யோகஸ்தர் ஒரு கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டு அதிலிருந்து தப்ப அந்த 50 ரூபாய் மிகவும் தேவையாக இருந்தது. கஷ்டம் தொடருவதை முன்கூட்டியே பாபா அறிவித்துவிட்டார்.

## கிழவிக்கு தரிசனம்

1914ல் ராமநவமி உற்சவத்தில் கூட்டம் கூட்டமாக ஜனங்கள் திரண்டு பாபாவிடம் கூடினார்கள். ஒரு கிழவி அந்த கும்பலுக்குள் புகுந்து வர முடியாமல் "அய்யோ நான் கிழவி, பாபா என்னை தங்களிடம் அழைத்து தரிசனம் தரவேண்டும்" என்று மானசீகமாக பிரார்த்தித்தாள். இது போதாதா பாபாவிற்கு! உடனே சாமாவிடம் "சாமா வெளியே போய் அந்த கிழவியை, கையில் கந்தல் முடிச்சை வைத்திருப்பவளை அழைத்து வா" என்றார். சாமாவும் முழங்கையால் கூட்டத்தை விலக்கி கிழவியை பாபாவின் முன் கொண்டு வந்து சேர்த்தார். அவள் தாரை தாரையாக கண்ணீர் வடித்தாள். தன் இரண்டு கைகளாலும் பாபாவின் இடுப்பை கட்டிக் கொண்டாள். பாபா அம்மா உனக்காக எவ்வளவு காலம் காத்திருந்தேன். நான் சாப்பிட என்ன கொண்டு வந்தாய் என்று கேட்டார். கிழவி : இதோ ஒரு பழைய ரொட்டித்துண்டும், வெங்காயமும் எடுத்துக்கொண்டு கிராமத்திலிருந்து நேற்று புறப்பட்டேன். பிரயாணத்தால் களைத்துப்போய் ஒரு நதி ஓரம் உட்கார்ந்து அரை ரொட்டியும் ஒரு வெங்காயமும் சாப்பிட்டேன். இதோ மீதி தங்களுக்குத்தான் சாப்பிடுங்கள் பாபா என கொடுத்தாள். ஆகா என்ன கருணையம்மா உனக்கு உன் ரொட்டிதான் எவ்வளவு இனிக்கிறது. சாமாவிடம் சொல்லி கிழவியை நன்றாக சாப்பிட வைத்து ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

## கிழவனுக்கருள்

1913ல் நாமசப்தம் நடந்து கொண்டிருக்கையில் பெரிய கூட்டத்தின் நடுவே பாபா உட்கார்ந்திருந்தார். பாபா சாமாவிடம் "சாமா

அந்த சுவற்றுக்குப் பின்னால் ஒரு கிழவன் உட்கார்ந்திருக்கின்றான். அவனிடம் கொஞ்சம் கற்கண்டு இருக்கின்றது. எனக்காக கொஞ்சம் வாங்கி வா" என்றார். சாமா வெளியே சென்று ஒரு கிழவனைக் கண்டார். அவன் வாயிலிருந்து எச்சில் சொட்டிக் கொண்டிருந்தது. அவன் மார்பில் புண் துர்நாற்றத்துடன் சீழ் ஒழுகிக் கொண்டிருந்தது. அதன்மேல் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தது. அவன் கட்டிக் கொண்டிருந்தது ஒரு அழுக்குக் கந்தை. அதன் நுனியில் கற்கண்டை முடித்து வைத்திருந்தான். அந்த கிழவனை அப்படியே தூக்கி வந்து பாபாவின் எதிரில் சாமா வைத்தார். பாபா கிழவர் தலை மீது கை வைத்து ஆசீர்வதித்து தானே அவன் முடிச்சிலிருந்து ஒரு கற்கண்டை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். என்ன ஆச்சரியம்! பாபா கற்கண்டை சாப்பிட்டவுடன் கிழவனுக்கு தெளிவு உண்டாகி எழுந்து நின்று பாபாவை நமஸ்கரித்து விடைப்பெற்றான். சீரடியில் கொஞ்சநாள் தங்கியிருந்து மார்பிலிருந்து புண் ஆறி திடகாத்திரமடைந்து ஊருக்கு கிளம்பினான்.

## பஸ்ஸுன் ஊர்க்காரன்

பஸ்ஸுன் என்னும் ஊரைச் சேர்ந்த ஒருவர் பாபாவிற்கு முதல் முதலில் தன் தோட்டத்தில் காய்த்த வாழைக்குலையை ஒருவரிடம் கொடுத்தனுப்பி அதை பாபா சாப்பிட்ட பிறகுதான் தான் போஜனம் செய்யப்போவதாக அறிவித்து உபவாசமிருந்தார்.

அக்குலையைக் கொண்டு வந்தவன் பாபாவிடம் வந்து கொடுக்காமல் எங்கேயோ வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். பாபா அவனைக் கூப்பிட்டு "அக்குலையிலிருந்து ஒரு பழத்தை பிடுங்கிக் கொடு உன் எஜமானன் சாப்பிடாமல் காத்திருக்கிறான். வாழைப்பழத்தை பாபா சாப்பிட்டார் என்று தந்தி கொடு. பிறகு தான் அவன் சாப்பிடுவான்" என்றார். பாபா எல்லாமறிந்து, பக்தனையும் பட்டினி போடாமல் அற்புதமாக காப்பாற்றுகின்றார்.

## சங்கராந்தி அல்வா

1915 ஜனவரி 5-ந் தேதி சங்கராந்தி வர இன்னும் 8 நாள் இருந்தது. ஆனால் பாபா ஒருவனிடம் சங்கராந்தி அல்வா வேண்டுமென்று உக்கிராணத்துக்கு சொல்லி அனுப்பினார். போனவன் திரும்பி வந்து இன்னும் 8 நாள் கழித்து தான் சங்கராந்தி அல்வா கிடைக்குமென்று உக்கிராணத்துக்காரி சொன்னதாகச் சொன்னார். பாபா தனக்கு அப்பொழுதே சங்கராந்தி அல்வா வேண்டுமென்று பிடிவாதமாகச் சொன்னார். என்ன ஆச்சரியம், பாபாவிடம் அதிக அன்பு கொண்ட ஒரு பக்தர் பாபா ருசி பார்ப்பதற்கு பம்பாயிலிருந்து அனுப்பிய சங்கராந்தி அல்வாவை பார்சலில் தபால்காரன் கொண்டுவந்து கொடுத்தான். பாபா தம் அந்தர் ஞானத்தால் எல்லாமே அறிந்து லீலை புரிகின்றார்.

## பண்டிதர்

நாக்பூரில் சப்ஜட்ஜாக இருந்த R.K. கர்தே பூனாவில் "ரே" மார்க்கட்டில் பாபாவிற்காக மூன்று உயர்ந்தரக மாம்பழங்களை வாங்கி பத்திரப்படுத்தி பாபாவிடம் சமர்ப்பித்து நமஸ்கரித்தார். பாபா அவைகளை வாங்கிக் கொண்டு "ஹோ, இந்தப் பழங்கள் எனக்காக மிகுந்த பக்தியுடன் வாங்கப்பட்டு சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. ஆனால் நேற்று அந்தப் பண்டிதர் எனக்காக முழுப் பொட்டலம் லட்டு வாங்கி வழியில் கோதாவரியில் ஸ்நானம் செய்த பிறகு பசியாக இருந்ததால் சில லட்டுகளை அந்த பண்டிதர் சாப்பிட்டு மிகுதியையே எனக்களித்தார். அம்மாதிரி சேஷமான பழங்கள் அல்ல இவை. எனக்காகவே வாங்கி வந்தவை. சேஷமல்ல." என்று சொல்லி பண்டிதரின் குட்டை வெளிப்படுத்தினார். பண்டிதர் மிகவும் வெட்கமடைந்தார்.

## ஸ்ரீமதி காளிட்கர்

ஸ்ரீமதி காளிட்கர் தமது குமாரத்திகளுடன் பாபாவிடம் சென்றாள். வழியில் பாபாவிற்காக ஒரு கூடை நிறைய உயர்ந்த திராட்சைப் பழங்களை அன்புடன் வாங்கினாள். பாபா அவளிடம் "நீ என்ன கொண்டு வந்தாய். திராட்சைப் பழமா" என்றார். அம்மையும் கூடையை பாபாவிடம் கொடுத்து ஆம் பாபா தங்களுக்காகவே நாஸிக்கிலிருந்து வாங்கி வந்தேன் என்றாள். பாபா அப்பழங்களை கையினால் பிரட்டும்பொழுது அம்மையின் பெரிய மகள் "ஐய்யய்யோ, அம்மா முழு கூடையையும் கொடுத்து விட்டாளே! பாபாவும் சாப்பிடப் போவதில்லை. அநியாயமாக யார் யாருக்கோ பங்கிட்டுவிடுவாரே' என்று நினைத்தாள். இது போதாதா பாபாவிற்கு! அவளைக் கூர்ந்து நோக்கி கூடையை அம்மைபக்கம் தள்ளிவிட்டு "போ உன்னுடையதை நீயே எடுத்துக் கொள்" என்றார். அம்மை மிகவும் மனம் நொந்து பாபா எடுத்துக் கொள்ளவில்லையே என்று கதறினாள். உடனே மனமிளகி பாபா மிகவும் உலர்ந்ததும், உபயோகமில்லா பழங்களை சிலதை பொறுக்கி எடுத்துக் கொண்டு "போ உன் குமாரத்திகள் இதை சாப்பிடட்டும்" என்றார். அந்த குமாரத்தி தன் தவறையுணர்ந்து வழியில் தன் தாயிடம் எல்லாவற்றையும் விவரித்து மன்னிப்புக் கோரினாள்.

அந்த அம்மை மனப்பூர்வமாக சமர்ப்பணம் செய்ததை பாபா ருசித்தாரென்றாலும் குமாரத்தியின் கெட்ட நினைவு அதை திருப்பச் செய்தது.

## பன்லேடஹறானுகர்

ஒரு சமயம் பன்லேடஹறானுகர் தன் தாயின் விருப்பத்திற்கு மாறாக ராமேஸ்வர யாத்திரை புறப்பட்டார். அந்த தாய் மனம் நொந்து தன் மகன் திரும்பி வரும் வரையில் உபவாசம் இருப்பதாய் வேண்டிக்கொண்டு உபவாசம் இருந்தாள். வழியில் பன்லே சீரடிக்குச் சென்று பாபாவை நமஸ்கரித்தார். இதை அறிந்த தாய் "பாபா தாங்கள் உண்மையான சாதுவானால் என் மகன் செய்யும் யாத்திரையை

தடுத்து அவனை வீட்டிற்கு அனுப்ப வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள். இதை மானசீகமாக அறிந்த பாபா பன்லேவிடமிருந்து தட்சிணையாக அவர் யாத்திரை செய்ய வைத்திருந்த காசு எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு அவரை நோக்கி "நீ வீட்டிற்கு போ நீ வீடு விட்டது முதல் ராமேஸ்வரம் உபவாசமாக இருக்கிறது. நீ இப்பொழுது திரும்பிப் போகாவிட்டால் ராமேஸ்வரம் போய்விடும்" என்றார். பாபா உத்திரவுபடி பான்லே வீட்டிற்குப் போனார். தன் தாயார் உபவாசமிருப்பதை கண்டு அவள் பிரார்த்தனையும், பாபா அதற்கு இணங்கினதையும் அறிந்து கொண்டார். தாயாரைவிட ராமேஸ்வரம் பெரிதல்ல என்பதை பாபா நிரூபித்தார்.

## சதாசிவ வடாவ்கர்

ஒரு சமயம் வடாவ்கர் பாபா பக்கத்தில் மிக்க பசியோடு உட்கார்ந்திருந்தார். ஆயினும் அதைச் சொல்வது மரியாதையல்ல என்று சும்மாயிருந்தார். அதே சமயம் ஒரு பொட்டலம் பேடாவை பாபாவிடம் யாரோ ஒருவர் கொண்டுவந்து கொடுத்தார். சாதாரணமாய் எந்த வஸ்துவையும் பாபா தொடுவதில்லை. ஆனால் இந்த சமயத்தில் பாபா பொட்டலத்தை பிரித்து ஒரு பேடாவை எடுத்து வடாவ்கர் மடியில் எறிந்தார். வடாவ்கர் அதை எடுத்து தன் கையில் வைத்துக் கொண்டார். பாபா 'நீ! சும்மா கையில் வைத்துக் கொள்வதற்காக அது கொடுக்கப்படவில்லை. நீ பசியாக உள்ளாய்! சாப்பிடு'. எனறார். பிறகு வடாவ்கர் அதை வாயில் போட்டுமென்று விழுங்கியவுடன் பாதி பசி அடங்கியது. மறுபடியும் பாபா ஒரு பேடாவை எறிந்தார். இப்பொழுது வடாவ்கர் அதை பாபாவின் பிரசாதமாக வீட்டுக்கு எடுத்துச் செல்ல கையில் வைத்துக் கொண்டார். பாபா 'இதையும் சாப்பிடு முழு பசி அடங்கும்' என்றார். அவ்வாறே வடாவ்கர் அதையும் சாப்பிட்டு முழுப் பசியும் நீங்கப் பெற்றார். பாபாவிற்கு தெரியாததொன்றுமில்லை, பக்தர்கள் பசியால் வாட ஒருக்காலும் விடமாட்டார்.

## B.V. வைத்யா

1911ல் வைத்யா தன் குடும்பத்துடன் சீரடிக்கு வந்து இரவு 1 மணிக்கு சாத்தே வாடாவில் வந்திறங்கினார். அந்நேரத்திற்கு

அக்குக்கிராமத்தில் ஒன்றுமே கிடைக்காததால் எல்லோரும் பேசாமல் படுத்து தூங்கினார்கள். பொழுது விடிந்ததும் பாபா கூச்சலிட்டு "என் குழந்தைகளை யாரும் விசாரிக்காமல் உபவாசம் செய்ய விட்டீர்களே" என்று கோபமாகச் சொல்லி எல்லோரையும் விரட்டி வைத்யா குடும்பத்திற்கு வேண்டிய யாவற்றையும் கொடுக்கச் செய்தார். பிறகு நாசிக்கு போக பாபாவிடம் வைத்யா உத்திரவு கேட்டார். "அங்கே ஏன் போக வேண்டும். அங்கே பிளேக் இருக்கின்றது போக வேண்டாம் வீட்டுக்கு குஞ்சு குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு போ" என்றார்.

வைத்யா பாபாவின் படத்தை பாபாவிடம் கொடுத்து ஆசீர்வாதம் பெற்று திரும்பப் பெற்றார். உத்திரவு பெற்று ஒரு டாங்காவில் கோபர்கான் ஸ்டேஷனுக்கு வந்தபோது ரயில் போய் விட்டதை நினைத்து மனம் வருந்தினார். அடுத்த ரயிலுக்கு காத்திருந்து புறப்பட்டு போனபோது இதற்கு முன் தப்ப விட்ட ரயிலில் போனவர்கள் அங்கிருந்து பம்பாய் போன ரயிலில் விபத்து ஏற்பட்டு, ரயில் வண்டி நொருங்கி ஏராளமான உபாதைகளை அடைந்தார்களென்பதை வைத்யா தெரிந்து கொண்டு இதற்காகவே அந்த ரயிலில் பாபா தப்ப வைத்தார் என்று தெரிந்து கொண்டார்.

## பல்லக்கு

பல்லக்கிலிருந்து சில வெள்ளி சாமான்கள் திருட்டுப் போகவே அதை பத்திரப்படுத்த ஒரு அறை தயார் செய்ய வேண்டி புரந்தரே மசூதியின் சுவற்றில் சில துளைகள் செய்தார் அப்பொழுது பாபா மசூதியில் இல்லை. பிறகு பாபா வந்தவுடன் இந்த வேலையை நிறுத்தினார். பாபா பயமுறுத்தினபோதும் புரந்தேரே தொடர்ந்து வேலை செய்து வந்தார். தமது சாப்பாட்டிற்கும் போகாமல் வேலை செய்து கொண்டிருந்தார்.

பாபா : எவ்வளவு மோசமாக இருக்கின்றான்! நான் சொல்வதை அவன் கேட்பதில்லை. இதை எல்லாம் நான் பொறுத்துக் கொள்ள வேண்டியுள்ளது. ஏ! பாவ் உன் சாப்பாட்டுக்கு போ.

புரந்தரே : முடியாது நான் அப்படி போகப்பார்த்து என் வேலையை கலைத்துவிடுவீர்கள்.

பாபா : இல்லை! நீ சாப்பாட்டுக்கு போ. பிறகு புரந்தரே சாப்பாட்டிற்கு சென்றார்.

பாபா : என்ன செய்வது! ஒரு குழந்தை உன் கால்களின் மீது மலங்கழித்தால் காலை வெட்டிப் போடுவாயா அல்லது குழந்தையை வெட்டி விடுவாயா நாம் அதை பொறுத்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு புரந்தரே அதிக முயற்சி எடுத்து பாபாவின் தடங்கலை மீறி அறையை அமர்த்தி பல்லக்கிற்கு பந்தோபஸ்து செய்தார்.

## பக்தரை பாதுகாத்தல்

1913ல் ராவ்ஸி பஹறால்கர் என்பவரின் இளைய மகனுக்கு அதிக சுரம். அவன் பிழைப்பது அரிது என்று வைத்தியர் சொன்னார். பஹறால்கர் விடாமல் பாபாவை பிரார்த்தித்து வந்தார். ஒருநாள் இரவு 2 மணிக்கு பாபா பஹறால்கரின் பூஜை அறையில் பிரத்யட்சமாகி "அந்த பையனுக்கு உதியை தடவு. கவலை வேண்டாம் இன்னும் 2 மணியில் வியர்வை விடும். காலையில் சுரம் குறைந்து குணமாவான்" என்று சொல்லி மறைந்தார். அவ்வாறே பையனுக்கு வியர்வை விட்டு காலையில் சுரமும் குறைந்து குணமானான். அதற்கு அடுத்த நாள் பஹறால்கருக்கு சீரடியிலிருந்து சாமாவின் கடிதம் கிடைத்தது. அதில் சாமா "நான் பஹறால்கர் வீட்டிற்கு போய் வந்தேன். தினமும் போய்க் கொண்டிருக்கின்றேன். அவனுக்கு கடிதம் எழுது." என்று பாபா சொன்னதால்தான் இக்கடிதத்தை எழுதுவதாக வரைந்திருந்தார்.

பதினைந்து தினங்களுக்குப்பிறகு பஹறால்கரும் அவர் குமாரனும் சீரடிக்குச் சென்றார்கள். வழியில் கோபர்கானில் டாங்காகாரனுடன் தகரானதால் தாமதமாகியது. பாபா சாமாவிடம் "உன் சிநேகிதன் பஹறால்கர் வருகிறான். ஆரத்தியை தள்ளிப்போடு.

டாங்காகாரன் தொந்தரவு கொடுக்கின்றான்" என்றார். ஆரத்தி முடிந்து பிரசாதம் வினியோகம் செய்தவற்குள் பஹறால்கர் குமாரனுடன் வந்து சேர்ந்தார். பாபா அந்த பையனைப் பார்த்து "நீ சுரத்துடனிருந்தபோது நான் உன்னிடம் வந்தேனே உனக்கு ஞாபகம் இருக்கிறதா?" என்று கேட்டார். பஹறால்கர் இதைக் கேட்டு சந்தோஷமடைந்து பாபா பக்தர்களை காப்பாற்ற எப்படியெல்லாம் லீலைகளை பண்ணுகிறார் என்று ஆச்சரியம் அடைந்தார்.

## பாலா சிம்பி

ஒரு சமயம் பாலா சிம்பி என்னும் பக்தர் உடல்நலம் சரியில்லாமல், கவனிக்கவும் ஆளில்லாமல் தெருவோரமாய் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் வீட்டில் பாபா பிட்சை எடுத்திருப்பதால், பாபா அவரை எழுப்பி நிம்கானில் அடுத்த கிராமத்து மிராசுதார் டாங்ளேவிடம் போய் உடம்பு குணமடைய தங்கச் சொன்னார். அதே சமயத்தில் டாங்ளேவின் கனவில் பாபா தோன்றி "உன்னிடம் பாலா சிம்பி வருகிறான். அவனை கவனித்துக் கொள்" என்று சொன்னார். டாங்ளேவும் ஆவலுடன் பாலாசிம்பியை வரவேற்று உடம்பைத் தேற்றி மிகவும் அனுகூலமடையச் செய்தார்.

## ஜோஷி

ஜோஷி என்பவர் பாபாவின் பக்தராக இருந்தும் பாபாவை நேரிடையாக தரிசிக்க முடியாமல் திண்டாடினார். ஒரு நாள் ஒரு கொங்கணந்த பிராமணன் பாபாவிடம் சீரடியில் ஊருக்குப் போக விடை கேட்டார். பாபா சரி, இந்த உதி பொட்டணத்தை எடுத்துக்கொண்டு ரயில் வண்டியில் உன்னை சந்தித்து "நான் உட்காருவதற்கு ஒரு சாண் இடம் கொடு என்று உன்னிடம் கேட்பவரிடம் இதை கொடு" என்றார்.

பிராம்மணர் : அவ்வாறு நான் காணாவிடில் தங்களுக்கே இப்பொட்டணத்தை அனுப்பி விடுகிறேன்.

பாபா : இல்லை "நிச்சயமாக அவனைக் காண்பாய்!" என்றார். பிராமணர் கோபர்கானிலிருந்து பம்பாய் போகும்போது கல்யாண் ஸ்டேஷன் வரையில் அவ்வாறு யாரும் வரவில்லை. கல்யாண் ஸ்டேஷனில் ரயில் நிற்கும்போது கூட்டம் அதிகமாக ஏறியதால் எவரையும் பார்க்க முடியாமலிருந்தது. வண்டி நகர்ந்ததும் ஜோஷி அந்த பிராமணரை அணுகி "ஒரு சான் இடம் கொடுங்கள்" என்று கேட்டார். உடனே பிராமணர் அவருக்கு இடத்தை கொடுத்து உதியையும் கொடுத்து பாபாவின் வார்த்தையையும், ஆசீர்வாதத்தையும், நடந்ததையும் விரிவாக தெரிவித்தார். ஜோஷி மெய்மறந்து பாபாவின் அபார கவனிப்பைப் போற்றினார்.

## ஹல்வாக்காரன்

1916ல் பாபாவின் ஆரத்திக்கு வழக்கமாக நிவேத்தியம் தயார் செய்து கொடுக்கும் ஹல்வாக்காரன் பிளேக்கினால் இறந்துவிட்டான். பாபா நார்கேயைப் பார்த்து "ஹல்வாக்காரன் கடைக்குப்போய் நிவேத்தியம் கொண்டு வா" என்றார். நார்கே ஹல்வாக்காரன் வீட்டுக்குப்போய் அவன் மனைவியிடம் பாபா நிவேத்தியம் கேட்பதாகச் சொன்னார்.

ஹ. மனைவி : இங்கே பாரும் கணவன் இறந்த உடல் இங்கே உள்ளது. ஹல்வா அலமாரியில் இருக்கிறது. தங்களுக்கு இஷ்டமிருந்தால் ஹல்வாவை எடுத்துப் போகலாம். நார்கே அதை எடுத்துக் கொண்டு தனக்கும், நிவேத்தியம் வாங்கிக் கொள்ளும் மற்றவர்களுக்கும் பிளேக் ஒட்டிக் கொள்ளுமோ என்று நடுங்கிக் கொண்டே பாபாவின் எதிரில் ஹல்வாவை வைத்தார்.

பாபா : சீரடிக்கு தூரத்திலிருந்தால் நீ உயிருடன் அபாயம் இல்லாமல் இருக்கலாம் என்று நீ நினைக்கிறாய். அப்படியல்ல யாருக்கு விதி உண்டோ அவர்கள்தான் அடிபடுவார்கள். யார் இறக்க வேண்டுமோ அவர்கள் தான் இறப்பார்கள். யார் சீராட்டப்பட வேண்டுமோ அவர்கள் சீராட்டப்படுவார்கள். அந்த ஹல்வா நிவேத்தியமாக கொடுக்கப்பட்டது. ஹல்வாவினால் யாருக்கும் பிளேக் தொந்தரவில்லை.

## குற்றவாளிகளுக்கும் உதவி

1915–ல் ஒருநாள் பாபா தீக்ஷிதரைப் பார்த்து "நல்லோரும், தீயோரும் இங்கு வருகின்றார்கள், ஆக அவர்களை பக்ஷபாதமில்லாமல் கவனிக்க வேண்டுமல்லவா" என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது ஒரு குமாஸ்தா பாபாவை வந்து நமஸ்கரித்தான். அவன் தன் எஜமானன் பணத்தை கையாடிவிட்டு அதற்காக அவன் பேரில் ஒரு வாரண்டும் இருந்தது. அந்த சமயத்தில் அவன் மேல் உத்தியோகஸ்தர் ஒருவர் பாபாவின் சன்னிதானத்தில் அமர்ந்திருந்தார். அவர் குமாஸ்தாவைக் கண்டதும் போலீஸில் சொல்லிவிட வேண்டுமென்று எண்ணினார். அப்போது பாபா யாரோ ஒருவரைப் பற்றி சொல்வதைப் போல் அந்த குமாஸ்தாவைப் பார்த்து "நீ உடனே சாப்பிட்டு இங்கு வா" என்று கட்டளையிட்டார். உத்தியோகஸ்தரைப் பார்த்து "நீ இங்கேயே இரு" என்று அமரச் செய்தார். சாப்பிட்டுவிட்டு திரும்பி வந்த குமாஸ்தாவிடம் சில புத்திமதிகள் ரகசியமாகச் சொல்லி உடனே போலீஸில் தானாகவே சரணடையச் செய்தார். பாபாவின் உத்திரவுபடி குற்றத்தை ஒப்புக் கொண்டதால், மேலும் எஜமானன் அதிக தண்டனை தராததால் சுலப தண்டனையே கொடுக்கப்பட்டது.

## வேலை தேடி தருதல்

வேலையில்லாமல் இருந்த ஒரு பக்தர் பாபாவை வந்து வணங்கி வேலை கிடைக்க பிரார்த்தித்தார். உடனே பாபா உத்திரவு கொடுத்து "அகமத்நகர் வழியாக உன் ஊருக்குப் போ. உடனே புறப்படு" என்றார். உத்தியோகம் இல்லாமல் உடனே பாபா உத்திரவுப்படி சீக்கிரம் கிளம்ப வேண்டியுள்ளதே என்று மனக்கவலையுடன் ஊர்ப் போய்ச் சேர்ந்தார். அவ்விடமிருந்த மில் காண்ட்ராக்டர் இவரைத் தேடிவந்து மில்லில் வேலை நிறுத்தமானபடியால் மானேஜர் வேலை கொடுக்க தீர்மானித்து அழைத்துச் சென்று வேலையை ஒப்புக்கொள்ளச் செய்தார். ஆக பாபா இதை முன் கூட்டியே அறிந்து வேலை கிடைக்கும்படியாக அருள்புரிந்தார்.



## சாயி லீலாவில் பிரசுரமான பக்தர்களின் அனுபவங்கள்

அமர்னாத் என்கிறவர் சீரடிக்குச் செல்லும் ஒரு குடும்பத்துடன் தன் சார்பில் சில உயர்ந்த ஜாதி மாம்பழங்களை வாங்கி நிவேத்யம் செய்யும்படி பணம் கொடுத்து வேண்டினார். அவர்களும் அவ்வாறே செய்வதாக ஒத்துக்கொண்டு சீரடிக்கு கிளம்பி 7-7-1975 திங்கட்கிழமை காலையில் 10 மணிக்கு சென்றடைந்தார்கள். பாபாவின் தரிசனத்தைப் பெற்று கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, மெய்சிலிர்க்க பாபா வாழ்ந்து கொண்டிருப்பதாகவே உணர்ந்தார்கள். பாபாவின் பாதத்தில் உட்கார்ந்தபோது சுவர்க்கத்தில் இருப்பதுபோல் உணர்ந்தார்கள். அமர்னாத் சொல்லியதுபோல் மாம்பழங்களை கடையில் வாங்கி அடுத்த நாள் பாபாவிற்கு நிவேத்யம் செய்ய தீர்மானித்தார்கள். திங்கட்கிழமை நல்ல உயர்ந்த மாம்பழங்கள் சீரடியில் கிடைத்தும் அதை வாங்காமல் அடுத்த நாள் வாங்கிக் கொள்ளலாம் என்றிருந்து விட்டார்கள்.

ஆச்சரியமாக செவ்வாய்கிழமையன்று மார்கெட்டில் சுற்றி வந்தும் ஒரு மாம்பழமும் கிடைக்கவில்லை. புதன்கிழமை காலையிலும் மாம்பழம் கிடைக்காமல் போகவே அந்த குடும்ப தலைவர் கோபர்கான் சென்று நல்ல உயர்ந்த மாம்பழங்களை வாங்கி வர உத்தேசித்து பஸ் ஸ்டாண்டுக்கு சென்றார். என்ன ஆச்சரியம்! எந்த பஸ்ஸில் போக நினைத்தாரோ அதே பஸ்ஸிலிருந்து ஒருவர் கூடை நிறைய உயர்ந்த ரக மாம்பழங்களுடன் இறங்கி விற்பனை செய்ய ஆரம்பித்தார். முதல் விற்பனையாக பாபாவிற்கு வாங்கப்பட்டது வியாபாரிக்கு மகிழ்ச்சியை அளித்தது. இதுவே முதல் லீலை. பிறகு மாம்பழங்களை நன்றாக அலம்பி, துடைத்து பூஜாரியிடமிருந்து தட்டை வாங்கி அதில் மாம்பழத்தை வைத்து பூஜாரியிடம் கொடுத்தார்கள். பூஜாரி பாபாவிற்கு நிவேத்யம் செய்து திருப்பி தரவா அல்லது பாபாவிற்கு படைத்து எல்லோருக்கும் பிரசாதமாக பங்கிடவா என்று கேட்டார். சாயிபக்தர் ஒருவரால் அனுப்பப்பட்டதால் எல்லோருக்கும் அளிக்கும்படி வேண்டினார்கள். மாம்பழத் தட்டை பூஜாரி குடும்பஸ்தரிடம் திருப்பி கொடுத்து சிறு துண்டுகளாக்கி கொண்டு

வரச் செய்தார். இதற்குள் ஆரத்தி ஆரம்பமாகவே எல்லோரும் ஆரத்தியில் சேர்ந்து கொண்டார்கள். ஆரத்திக்குப் பிறகு பூஜாரி தட்டை எடுத்துச்சென்று அதுவே பாபாவிற்கு வந்த முதல் பிரசாதமாகும் என்று சொல்லி பாபாவிற்கு நிவேத்யம் படைத்தார். பிறகு எல்லோருக்கும் பிரசாதமாக பங்கிட்டுக் கொடுத்தார். குடும்பஸ்தர்கள் மகிழ்ச்சியாக விடைபெற்று தானும் சில மாம்பழங்கள் வாங்கி எல்லோரும் உண்ணலாம் என்று நினைத்து பஸ் ஸ்டாண்டிற்கு சென்றால் அங்கே வியாபாரியைக் காணோம். ஆக பாபா அன்புடன் அளிப்பதை அமோகமாக வரவேற்று வேண்டியதை வேண்டிய நேரத்தில் செய்து கொடுக்கும் மகாபிரபு பாபா ஒருவரேயாவார்.

## என்னோடு எப்பொழுதும் உறையும் சீரடி பாபா

புரொபஸர் வாம் H. பண்டிட் என்பவர் மே மாதம் 1961-ல் சீரடி சென்று அனுபவித்த பாபாவின் லீலையை அழகாக விவரித்துரைக்கிறார். கடந்த 14 வருடங்களாக ஏராளமான ஆச்சரியம் தரக்கூடிய அனுபவங்கள் பாபாவிடம் அடைந்து வருகிறேன். மே மாதம் 1961ல் என்னுடைய மகளுடனும், மருமகனுடனும் சீரடி செல்லும் வாய்ப்பு கிடைத்தது. வியாழக்கிழமை அன்று சீரடி சென்று முதலில் பாபாவை போய் தரிசனம் செய்தேன். என் கண்களில் ஆறுபோல் கண்ணீர் பெருக மெய்சிலிர்க்க பாபாவை தரிசித்தேன்.

என்னுடைய மகள் குளிக்கும் அறையில் தங்க நெக்லஸை கழற்றி வைத்து மறந்தவளாய் நெடுநேரம் அதைப் பற்றியே ஞாபகமில்லாமல் பாபாவின் அபிஷேகத்திலும், ஆரத்திலும் மெய் மறந்திருந்தாள். பிறகு வாடாவிற்கு திரும்பி வந்து சிறிது நேரம் ஓய்வெடுத்தோம். பாபாவின் சமாதி மந்திருக்கு எதிரிலேயே வாடா கிடைத்ததால் அங்கு நடப்பதையெல்லாம் பார்த்து மெய் மறந்திருந்தோம். திடீரென்று எனது மகளுக்கு தனது தங்க நெக்லஸை குளிக்கும் அறையில் விட்டு வந்ததை ஞாபகப்படுத்தி ஓடிச்சென்று தேடினாள். எங்கெங்கும் தேடியும் கிடைக்கவேயில்லை. நானும் பாபா மீது பாரத்தை சுமத்தி மகளை கவலையை விடும்படியும், நடப்பதெல்லாம் பாபாவிற்கு தெரியுமென்றும், அவர் மனதினால்

என்ன நினைக்கின்றாரோ அதுவே நடக்கட்டும் என்று சொல்லி மறுபடியும் ஆரத்திற்கு சென்று பாபாவிடம் தஞ்சமடைந்தோம்.

வெகு உற்சாகமாக பஜனை நடப்பதை கவனித்திருக்கும்பொழுது ஒருவர் ஒலிபெருக்கியில் "எனக்கு ஒரு நெக்லஸ் கிடைத்திருக்கிறது. சொந்தக்காரர் தகுந்த அடையாளங்களைச் சொல்லி வாங்கிச் செல்லலாம்" என்று அறிவித்தார். பாபாவின் லீலையை வியந்து கொண்டே எனது மகளும், மருமகனும் அந்த நபரிடம் அடையாளங்களைச் சொல்லி தங்க நெக்லஸை பெற்றுக் கொண்டு வந்தனர். பாபாவின் கருணையில்லாவிடில் காணாமல் போனது கிடைத்திருக்குமா! உடனே நான் எனது மருமகனிடம் அந்த நகையை கொடுத்த நபருக்கு ஏதாவது வெகுமதி கொடுக்க சொன்னேன். ஆனால் அந்த நபரை மந்திராலயம் முழுக்க தேடியும் காணவில்லை. சீரடி முழுக்க பஸ் ஸ்டாண்டிலிருந்து லெண்டி தோட்டம் வரையில் விடாமல் தேடியும் அம்மாதிரியான நபர் கிடைக்கவில்லை. அது பாபாவேயல்லாமல் வேறு யாராக இருக்கக்கூடும்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு என் வீட்டில் எல்லோரும் பக்தி செலுத்த ஆரம்பித்தார்கள். என் வீட்டில் எல்லா அறைகளிலும் பாபாவின் படம் ஜொலிக்கும். வெளியே சென்றால் பாபாவை வணங்கிக் கொண்டுதான் வெளியே செல்வேன். என்னுடைய வியாபாரம் மென்மேலும் செழிப்பதற்கு பாபாவின் அபார அருள்தான் காரணம். ஏதாவது விசேஷங்கள் என் வீட்டில் நடந்தால் பாபாவிற்கு முதலழைப்பை கொடுத்து அவர் நேரில் வந்து ஆசீர்வதிக்க வேண்டுவேன். அம்மாதிரியாகவே ஒரு சிறு பையன் வடிவிலோ, பிச்சைக்காரர் வடிவிலோ ஏன் ஒரு சத்தியநாராயணா பூஜைக்கு ஸ்கூட்டரில் வந்திருந்து சாப்பிட்டுச் சென்றார். அந்த ஸ்கூட்டரின் சாவியில் பாபாவின் படம் இருந்தது எவ்வளவு அதிசயம். சந்தோஷத்திலும், துக்கத்திலும், பாபாவை மறக்காமலிருந்தால் நம்மை பாபா மறக்கவே மாட்டார். அவரைவிட வேறு தெய்வம் என்பது ஈரேழு லோகங்களிலும் கிடையாது.

## பாபா லிமாயி

பாபா லிமாயி என்பவர் தன்னுடைய வீட்டிலேயே பாபாவின் சிலை வைத்து ஏராளமாக பக்தர்கள் வந்து பக்தி செலுத்த வழி

செய்திருக்கின்றார். 17-11-1922ல் குலாபாவின் லெண் என்கிற ஊரில் பிறந்தார். ரிஸர்வ் பாங்கில் ஒரு பெரிய உத்தியோகத்தில் கடந்த 37 வருடங்களாக வேலை செய்து வருகிறார். கைரேகை பார்ப்பதிலும் வல்லவர். முதலில் கடவுள் பக்தியேயில்லாமல் நாஸ்திகனாக இருந்தார். தாஸ்கனு மாதிரியாக டிராமாவில் நடித்து பொழுதுபோக்கி வந்தார். M.A. பட்டம் பெற்றவர். அவர் எவ்வாறு சாயி பக்தனாக மாறினார் என்பதே ஒரு அதிசய கதை.

ஒரு நாள் ரிஸர்வ் பாங்கிற்கு ஒரு நண்பர் பாபாவின் சிலையோடு வந்து லிமாயின் நண்பரான ராமகிருஷ்ணனுக்கு வெகுமதியாக கொடுக்க வந்தார். ஆனால் அன்று ராமகிருஷ்ணன் லீவிலிருந்ததால் அந்த நண்பர் லிமாயிடம் பாபாவை கொடுத்து அடுத்த நாள் ராமகிருஷ்ணனிடம் சேர்ப்பிக்கச் சென்னார். லிமாயி அதை தன் வீட்டிற்கு கொண்டு போய் மறுநாள் ராமகிருஷ்ணனிடம் கொடுக்க வந்தார். மறுபடியும் ராமகிருஷ்ணன் வேலைக்கு வராமல் போகவே லிமாயி சாயிபாபாவை திரும்பவும் வீட்டிற்கு கொண்டு போனார். இம்மாதிரியாக லிமாயி பாபாவை ஆபீஸிக்கு கொண்டு வரும் நாளெல்லாம் ராமகிருஷ்ணன் ஏதாவதொரு காரணத்தால் வேலைக்கு வராமல் இருந்தார். இம்மாதிரியாக அநேக தடவை நடந்து போகவே லிமாயி ஒரு நாள் பாபாவின் சிலையை ஆபீஸிக்கு கொண்டு போய் அன்று ராமகிருஷ்ணன் வரவில்லையென்றால் தானே அச்சிலையை வைத்துக் கொள்வதாகவும், பாபாவின் விருப்பமும் அப்படித்தானிருக்கும் என்று முடிவுசெய்து பாபாவை ஒரு நாள் ஆபீஸிற்கு எடுத்துச் சென்றார். ராமகிருஷ்ணன் அன்று ஆபிஸ் வரவேயில்லை. லிமாயி, தனக்கு பாபாவின் பிரசாதம் அவர் சிலைதான் என்று தீர்மானித்து வீட்டில் பாபாவை பிரதிஷ்டை செய்து காலையிலும், மாலையிலும் ஆரத்தி செய்ய ஆரம்பித்தார். எப்படியெல்லாம் பாபா ஒரு நாஸ்திகனை தன்பக்கம் இழுக்கின்றார் என்று பார்த்தால் எவ்வளவு ஆச்சரியமாக இருக்கிறது. லிமாயி பாபாவின் ஒரு சிறந்த பக்தனாக மாறினார். லிமாயிற்கு அந்த சிறிய சிலை திருப்தி தரவில்லை. ஆகவே ஒரு பெரிய சிலையை தன்வீட்டில் ஸ்தாபிக்க ஆசை கொண்டார். ஆக ஒரு சிற்பியிடம் அவ்வாறு செய்வதற்கு உத்திரவு செய்து 15000 ரூபாய் சிலவில் அச்சிலையை செய்து முடித்தார். 1-4-1974 ராமநவமி அன்று தன்

வீட்டில் ஒரு பெரிய ஹாலில் அவரை பிரதிஷ்டை செய்து பக்தர்கள் எந்நேரமும் வந்து பாபாவை தரிசிக்க ஏற்பாடு செய்தார்.

லிமாயி இப்பொழுது டிராமாவில் நடிப்பதை அறவே விட்டு தன்னை பாபாவிற்கு சேவை செய்யவே அர்ப்பணித்துக் கொண்டார். அவரது பொழுதுபோக்கெல்லாம் பாபாவிற்கு சேவை செய்வதே. எல்லா வசதிகள் இருந்தும் ஏராளமான பணம் குவிந்திருந்தாலும் லிமாயி எல்லாவற்றையும் துச்சமாக கருதி பாபாவிடமே ஒட்டிக் கொண்டார். இது பாபாவின் கற்பக விருக்ஷ தெய்வீக அருளல்லவா.

## ஸ்ரீ சாயி ஹிந்து நிலையம், லண்டன்

சாயி தேவன் இந்தியாவில் மட்டுமல்லாமல் உலகம் முழுக்க பரவியிருக்கின்றார். வேறு சாதுக்களைப்போல் குறிப்பிட்ட இடத்தில் மட்டும் புகழுடன் இல்லாமல் நமது தெய்வமான பாபா லண்டனிலும், அமெரிக்காவிலும் புகழ்மிக்க பரந்து நிற்கின்றார். லண்டனிலும், அமெரிக்காவிலும், சாயி மந்திரங்கள் நிறுவப்பட்டுள்ளன. கிரேட் பிரட்டனின் தலைநகரான லண்டனில் சாயிமந்திரம் நிறுவப்பட்டு அதனுடைய கிளைகள், சிட்னி, வியன்னா, புருஸ்ஸல்ஸ், லான்கூவர், பிரேக், ஹம்பர்க், ஹோனா, லூலு, பாரீஸ், பின்லாந்து, ஹாங்காய், நார்வே, சிங்கப்பூர், ஜூரிச், சிகாகோ, லாஸ்ஏன்ஜெல்ஸ், நியூயார்க், சான் பிரான்ஸிஸ்கோ ஆகிய இடங்களில் பரந்து உள்ளது. இங்கிலாந்தில் வசிக்கும் இந்தியர்களால் நிறைய பணம் வெகுமதியாக கொடுக்கப்பட்டு இந்த சாயி மந்திர் உருவாகியுள்ளது.

இந்த சாயி மந்திரம் 29-7-1945ல் நிறுவப்பட்டது. மக்கள் சேவையே மகேச சேவை என்ற பாபாவின் குறிக்கோளின்படி இந்த நிறுவனம் நடத்தப்பட்டு வருகிறது. ஆஜிபாய் என்கிற மூதாட்டியால் நிறுவப்பட்டு அவரே தலைவராகவும் பணியாற்றி வருகிறார்.

ஆஜிபாய் 1950ல் லண்டனுக்குச் சென்றார். இந்திய மாணாக்கர்களுக்கு இங்கிலாந்தில் இந்திய முறைப்படி உணவு கிடைப்பது கஷ்டமாகும். குடும்பத்துடன் வசிப்பவர்கள் ஒரு மாதிரியாக ஏற்பாட்டுடன் நடந்து கொண்டாலும் மாணாக்கர்கள் வெகுவாக கஷ்டப்பட்டார்கள். இதை உணர்ந்த ஆஜிபாய் ஒரு உணவு விடுதியை

ஆரம்பித்தார்கள். இந்த விடுதி இந்திய மாணாக்கர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாகவும், தன் சொந்த ஊரில் வசிப்பதைப்போல் கவலையுமில்லாமல் வாழ்ந்தனர்.

ஆஜிபாய் பாபாவின் சிறந்த பக்தை. ஆகவே இந்திய மாணாக்கர்களின் உதவியுடன் ஸ்ரீ சாயி மந்திரத்தை நிறுவினார்கள். இரண்டு அடுக்கு மாளிகையில் சுமார் ஆயிரம் பேர்கள் ஒரே சமயத்தில் அமர்ந்து பாபாவை தரிசனம் செய்ய வசதியான கூடத்துடன் அமைந்துள்ளது. எப்பொழுதும் மிகச் சிறந்த வாசனை புஷ்பங்களால் பாபா அலங்கரிக்கப்பட்டு மிக நேர்த்தியாக காட்சியளிப்பார். அப்பா சாஹிப் பஸிக்கர் என்னும் சாயி பக்தர் பம்பாயிலிருந்து சாயி சிலையை லண்டனுக்கு எடுத்துச் சென்று ஸ்தாபனம் செய்தார். பாபாவின் வெள்ளிப் பாதுகையும், இன்னும் அழகிய பாபாவின் கலர் படங்களும் வைக்கப்பட்டுள்ளது. எல்லா பண்டிகைகளையும், ஆனந்தமாக எல்லா இந்தியர்களாலும் சேர்ந்து கொண்டாடுகின்றார்கள். வீட்டைப் பற்றியே ஞாபகமில்லாமல் இந்தியர்கள் பாபாவின் உதவியால் சந்தோஷமாக வாழ்கின்றார்கள். பஜனைகள், டிராமாக்கள், சப்தகவ்கள் அடிக்கடி நடத்தப்பட்டு வருகின்றன. பாபாவின் உதியை எல்லோருக்கும் வழங்கப்படுகிறது.

வெங்ப்ளேவின் போலியாவினால் தாக்கப்பட்ட ஒரு பையன் நிற்கவும் முடியாமல் அவஸ்தைப்பட்டான். மிகப்பெரிய டாக்டர்களாலும் சரி செய்ய முடியாத அந்த நோயை பாபாவின் உதியால் பூசி சில நாட்களில் சரி செய்யப்பட்டது. ஆங்கில வைத்தியர்கள் பாபா உதியின் மகிமையை போற்றி புகழ்கின்றனர். நாளுக்கு நாள் பாபாவின் மகிமை பெருகிட மக்கள் கோயிலுக்கு திரண்டு வருகின்றனர்.

## சாயிநாதரின் உலகம்

யாருக்கு பாபாவிடம் அசைக்க முடியாத நம்பிக்கை உள்ளதோ அவர்கள் அதிருப்தியடையாமல் எல்லா நன்மைகளையும் பெற பாபா தன்னுடைய சமர்த்த லீலைகளால் அருள்புரிகின்றார். அதற்கு சான்று இதோ!

5-5-1975 அன்று பாபாவின் தரிசனத்திற்காக சுப்ரமண்யம் என்பவர் சீரடிக்கு தன்னுடைய குடும்பத்துடன் புறப்பட்டுச் சென்றார். 10-5-1975ல் திரும்பி வீட்டிற்கு வந்தவுடன் வீட்டில் ஒரு திருடு ஏற்பட்டிருப்பதைக் கவனித்தார். நூறு ரூபாயும், இரண்டு பொன்தாலி குண்டுகளும் ஒரு விலையுயர்ந்த துணியும் காணாமல் போனதைக் குறித்து ஆச்சரியப்பட்டனர்.

ஆபீஸ் பையன் இரவு நேரங்களில் வீட்டில் படுத்திருந்தும் திருடு போனதால் அந்த ஆபீஸ் பையனே மற்ற விலையுயர்ந்த பொருள்கள் இருந்தும் இவைகளை மட்டும் திருடியவனாக நினைத்து 10 நாட்கள் வேலையிலிருந்து தள்ளி வைத்திருந்தார்.

விசாரணை நடத்தியதில் ஆபீஸ் பையன் குற்றமற்றவன் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டனர். ஒன்று மட்டும் நிச்சயமாக நம்பினார்கள். பாபா ஒருக்காலமும் தன்னை வந்து வணங்கியவர்களை துன்பப்படுத்த விடமாட்டார் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கையில் என்றாவது ஒருநாள் திருடன் மாட்டுவான், பாபா காண்பித்து அருளுவார் என்று உறுதியோடு இருந்தனர்.

ஒரு வியாழக்கிழமை 23-5-1975 அன்று பாபாவின் பக்தரின் மனைவி பாபாவின் பூஜையை முடித்து வெளியே பார்த்தபோது பக்கத்து வீட்டுப் பையன் தொலைந்துபோன துணியினால் ஷர்ட் அணிந்திருப்பதை கவனித்தாள். பையனை அணுகி விசாரித்தபோது நிஜம் வரவில்லை. அவனுடைய சகோதரனிடமும், தாயாரிடமும் விசாரித்தபோது எல்லோரும் ஒரே முகமாக மறுத்தனர். மாலையில் போலீஸில் பிராது கொடுத்து போலீஸில் அடுத்தநாள் விசாரித்தபோது பையன் திருட்டை ஒத்துக்கொண்டு தான் பொன் குண்டுகளை விற்ற மார்வாடியை அடையாளம் காண்பித்து, மேலும் நூறு ரூபாயும், துணியையும் திருடியதை ஒத்துக் கொண்டான். பாபாவின் கருணையால் எல்லா சாமான்களும் கிடைத்துவிட்டதால் பையனை போலீஸார் ஒன்றும் செய்யாமல் விட்டுவிடச் செய்தோம்.

பாபாவின் தரிசனத்திற்காக சீரடி சென்றபோது அவர்கள் வீட்டை பாதுகாப்பது பாபாவேயாகும். பாபா தன்னுடைய அபார

லீலைகளால் எப்பொழுதும் தன் பக்தர்களை காப்பாற்றி வருகின்றார். பாபாவின்மீது பாரத்தை சுமத்தி நம்பிக்கையோடு இருந்தால் எல்லா காரியங்களும் வெற்றிகரமாக முடியுமல்லவா! உலகத்தை காப்பவரும் நம்முடைய நல்லவை, கெட்டவைகளை கவனித்து காப்பவரும் பாபாவேயாகும்.

## மௌஹத் பாபா சாயி மந்திர்

பம்பாயில் வொர்லி என்கிற கிராமத்தில் காந்தி மைதானத்தில் மௌஹத்பாபா என்கிறவரால் ஸ்தாபிக்கப்பட்ட ஒரு சிறிய பாபாவின் கோயில் மிகவும் பிரசித்தி பெற்றதாக அமைந்துள்ளது. தினமும் ஏராளமான பக்தர்கள் தரிசித்து நற்பலன்களைப் பெறுகின்றனர்.

மௌஹத்பாபா என்பவர் கோபி என்கிற கிராமத்தில் பிறந்தவர். முதல் யுத்தத்தில் 1914-1918ல் இராணுவத்தில் சிப்பாயாக இருந்தார். உலகம் முழுக்க சுற்றி 1914ல் ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றார். பிறகு வொர்லி கிராமத்தில் தங்கி காட்ஜேமகராஜின் சிஷ்யரான பாண்டுரங்க மகராஜை சந்தித்தார். பாண்டுரங்க மகராஜின் மௌஹத்பாபாவை சிஷ்யனாக ஏற்று மந்திர உபதேசமருளினார். இவ்வாறாக மௌஹத்பாபா ஆன்மீகத்தை வென்று புதிய வாழ்க்கையைப் பெற்றார்.

ஒருசமயம் பாபாவின் பக்தருடன் மௌஹத்பாபா சீரடிக்கு சென்று பாபாவை தரிசித்தார். லெண்டி தோட்டத்தில் தனியாக சுற்றிவரும்பொழுது ஒரு மரத்தடியில் நிஷ்டையிலிருந்த ஒரு சாதுவைக் கண்டார். அந்த சாதுவை வணங்கியபோது அந்த சாது ஆசீர்வதித்து தன் கைகளை மௌஹத்பாபாவின் தலையில் வைத்தார். பிறகு மௌஹத்பாபா தன்னை சீரடிக்கு அழைத்து வந்த பாபாவின் பக்தரை சாதுவிடம் அழைத்து வர சமாதி மந்திருக்குச் சென்று பக்தரை சந்தித்து சாதுவைப் பற்றிச் சொல்லி இருவரும் ஓடி வந்து லெண்டி தோட்டத்தில் எங்கு தேடியும் சாதுவைக் காணவில்லை. மௌஹத்பாபாவிற்கு ஏதோ ஒரு வித உணர்ச்சி உடம்பு முழுவதும் பரவி உன்மத்தர் போல் ஆனார். மாலை வேளையில் இதையே நினைத்து மறுபடியும் தனியாக லெண்டி தோட்டத்திற்கு சென்றபோது மறுபடியும் சாது இருப்பதை

மௌஹறத் கண்டு நமஸ்கரித்தார். அந்த சாது பாபாவே என்று உறுதிப்படுத்தி தனக்கு தனியாக தரிசனம் தரவே பாபா விரும்புகிறார் என்று நினைத்து மௌஹறத்பாபா மிகவும் உருகினார்.

இதற்குப் பிறகு பம்பாயிற்கு திரும்பி மௌஹறத்பாபா சில நாட்கள் தியானத்தில் வாழ்ந்தார். சில சமயங்களில் வொர்லியில் இடுகாட்டிலும் தியானத்திலாழ்ந்தார். இவ்வாறு பாபாவை விடாமல் பிரார்த்தனை செய்ததின் பலனாக பாபாவின் கட்டளை கிடைத்து பாபாவையே தெய்வமாகத் தொழ ஆரம்பித்தார். ஆக துவாரகமாயி ரூபமாகிய படத்துடன் ஒரு சிறிய கோயில் ஏற்பாடு செய்து பூஜையை ஆரம்பித்து வைத்தார். மழையினால் அவதியுறவே கிராமத்தார்களுடன் சேர்ந்து பணவுதவி பெற்று ஒரு சிறிய மந்திரை உருவாக்கினார். 1969ல் ஒரு அழகிய பாபாவின் சிலை கிடைக்கப்பெற்று ஸ்தாபனம் செய்து தினசரி பூஜையை கிரமப்படி அனுசரித்து மௌஹறத்பாபா உற்சாகமாக நடத்தி வந்தார். ஆரம்பத்தில் பிச்சையெடுத்து புசித்து வந்த மௌஹறத்பாபா பிறகு பக்தர்களின் உதவியினால் பாபாவிற்கு பிரசாதம் தானே செய்து அதையே ஆகாரமாக உட்கொண்டு வருகிறார்.

ஒவ்வொரு இரவு ஆரத்தியிலும் எல்லா குழந்தைகளும், பெரியவர்களும் ஒரே சீராக பாபாவின் ஆரத்தியைப் பாடி பூஜை செய்வது கண்கொள்ளா காட்சியாகும். முக்கியமாக குழந்தைகள் நலத்திற்காக இந்த கோயிலில் ஒவ்வொரு நாளும் பூஜை முதலியன நடத்தி வருவது மிகவும் விசேஷமானதாகும். குழந்தை பிராயத்திலேயே பாபாவிடம் பக்தி செலுத்தி அதையே வேறூன்றச் செய்து பாபாவிடம் ஐக்கியமாவது மிகவும் நன்மை தருமல்லவா! வியாழக்கிழமை ஆரத்தி ஒரு பெரிய உற்சவமாகவே காணப்படுகிறது.

மௌஹறத்பாபாவிற்கு பாபாவே தரிசனம் கொடுத்து தன்னை வணங்க கட்டளையிட்டார். எழுத்தறிவில்லாத மௌஹறத்பாபா பகவத்கீதையை பாராயணம் செய்வது ஆச்சரியமானது. தன்னால் ஒன்றுமில்லையென்றும் எல்லாம் பாபாவே நடத்தி வைக்கின்றார் என்றும் மிகைப்படாமல் மௌஹறத்பாபா சொல்வது ரொம்பவும் அடக்கமானதாகும்.

## ஹூப்ளி பெரியவர் சொன்ன கதை

நாங்கள் சாயி ஜீவியாக நினைக்கும் திரு. ராதாகிருஷ்ணன் என்னும் பெரியவர் சொன்ன நிகழ்ச்சி.

நான் ரயில்வேயில் ஸ்டோர்ஸ் பிரிவில் பொறுப்பாளராக இருந்தபோது ஒருமுறை அரைநாள் லீவு எடுத்துக்கொண்டு முக்கிய வேலையாக வெளியில் சென்றேன். திரும்பிவரும்போது என் வீட்டில் போலீஸ்காரர்கள் காத்திருப்பதைப் பார்த்து பயந்தேன். விஷயத்தைச் சொல்லாமல் என்னை காவல் நிலையத்திற்கு அழைத்துச்சென்று இன்ஸ்பெக்டர் முன்னிலையில் நிறுத்தினார்கள்.

இன்ஸ்பெக்டர் என்னை முறைத்து, சாமானைத் திருடி வேறு ஆள் மூலமாக வெளியே அனுப்பிவிட்டு ஒன்றும் தெரியாதது போல் நடிக்கின்றாயே, எவ்வளவு பணம் கிடைத்தது உனக்கு. நீ அனுப்பிய சாமான் அவ்வளவையும் போலீஸால் பிடிக்கப்பட்டு உன்னை அரெஸ்ட் பண்ண உத்திரவு ஆகி இருக்கிறது. எவ்வளவு காலமாக இம்மாதிரி சாமான்களை திருடி அனுப்பி வருகிறாய். இதுவரையில் எவ்வளவு பணம் சம்பாதித்தாய்? என்று அடுக்கடுக்காக கேள்வி கேட்டு பொய் சொல்லாமல் பதிலை சொல் என்று லத்தியை சுழற்றி பயமுறுத்தினார். எனக்கு ஒன்றும் தெரியாது என்று மன்றாடியும் கேட்கவில்லை. உத்தமனாய் இருந்தால் ஏன் லிஸ்ட் எழுதி ஹேண்டோவர் பண்ணவில்லை என்று இன்ஸ்பெக்டர் லத்தியை உயர்த்தியவர் அருகிலிருந்த கான்ஸ்டபிளையும் விலாச உத்திரவிட்டார். கான்ஸ்டபிள் ஒரு பெரிய லாட்டியை சுழற்றினார், உடனே ஓ! சாயிபாபா என்று சொல்லி மூர்சையாகிவிட்டேன். 4 மணிநேரம் கழித்து உணர்வு திரும்ப வந்து கண் திறந்து பார்த்தேன். இன்ஸ்பெக்டர் என்னிடம் நெருங்கி வந்து தவறுதலாக உங்களை தண்டிக்க முற்பட்டேன். நீங்கள் சாயிபாபாவை கூப்பிட்டது மட்டுமில்லாமல் எனக்கு ஸ்ரீ சாயிபாபாவாகவே காட்சியளித்தீர்கள். நானும் பாபாவின் பக்தன்தான். உங்கள் அஸிஸ்டென்டை கூப்பிட்டு ஒரு தட்டு தட்டியவுடன் தான் செய்த தப்பை ஒத்துக்கொண்டான். அதோ அவனை அரெஸ்ட் பண்ணியிருக்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள் என்று சொல்லி பெரிய உபசாரத்துடன் ஜீப்பில் அனுப்பி வைத்தார்.

ஆக சாயிபாபா என்கிற ஒரு வார்த்தை எவ்வாறு நன்மை அளிக்கிறது என்பது தெரிகிறது.

## கௌரிவாக்கம் சாயிபாபாவின் அற்புத லீலைகள்

ஒருநாள் காலை சுமார் பத்துமணி அளவில் ஒரு வயதான தம்பதியினர் கௌரிவாக்கம் பாபாவிடம் வந்தனர். மிகவும் விரக்தியாகவும், மன சஞ்சலத்துடனும் என்னிடம் சேவித்து, அவர்களின் ஒரே பிள்ளை, இருபத்திரண்டு வயதுள்ளவன் ப்ளட் கேன்ஸரினால் அவதிப்படுவதாகவும், இன்னும் இருபத்தியோரு நாட்களில் ஆப்ரேஷன் செய்யப் போவதாகவும், அந்த ஆப்ரேஷன் பத்து பர்சென்ட்தான் உயிருக்கு உத்திரவாதம் என்று டாக்டர்கள் கூறியிருப்பதாகவும் சொல்லி அழுதனர். எங்கிருந்து வருகின்றீர்கள் என்று கேட்டபோது அவர்கள் மயிலாப்பூரில் இருந்து வருவதாக தெரிவித்தனர். மயிலாப்பூர் சாயிபாபா கோவிலுக்கு சென்றதாகவும் அங்கிருந்தவர்கள் கௌரிவாக்கம் பாபா கோவிலில் உள்ள பெரியவரை அணுகினால் நிச்சயமாக உயிர்பிழைக்கக்கூடும் என்று சொன்னதாக கூறினார்.

பாபாவின் உதி ஒன்றுதான் எனக்குத் தெரியும் என்றும், அந்த உதியினால் எதையும் சாதிக்கலாம் என்று சொல்லி பாபாவிடம் உறுக்கமாக வேண்டி, உதிப் பொட்டலத்தைக் கொடுத்து தினமும் தண்ணீரில் வெறும் வயிற்றில் காலையில் கரைத்துக் கொடுக்கச் சொல்லி இருபது நாட்கள் கழித்து மறுபடியும் வரச் சொன்னேன். பாபா இரு கண்களையும் சிமிட்டி சந்தோஷ செய்தியை சொன்னதை வைத்தே, தைரியத்துடன் உதியைக் கொடுத்தேன். ஆனாலும் தினமும் அந்த பையனுக்காக பாபாவிற்கு பாலாபிஷேகம் செய்யும்போது அந்தப் பையனை நினைத்தே பாலை பாபாவிற்கு விட்டு வந்தேன்.

சரியாக இருபதாவது நாள் பையனை அழைத்துக் கொண்டு அந்த வயதானவர்கள் ஒரு பெரிய வரிசைக்குரிய முந்திரி, திராட்சை, பாதாம், பேரீச்சை மற்றும் பலவகை பழ வகைகளைக் கொண்டுவந்து பாபாவின் முன் வரிசையாக வைத்தனர். மூவரும் மிக சந்தோஷத்துடன் என்னை நமஸ்கரித்தனர். என்ன செய்தி என்று

விசாரித்தபோது பாபாவிடம் ஒரே அசைக்கமுடியாத நம்பிக்கையுடன் நான் கொடுத்த உதியை ஒரு நாளைக்கு இருமுறை வீதம் பத்து நாட்கள் விடாமல் கொடுத்து வந்ததாகவும், பதினோராவது நாள் ஸ்டேட்ஸ்ஸிலிருந்து வந்த ஒரு டாக்டர், இவர்கள் பையனுக்கு ட்ரீட்மெண்ட் கொடுக்கும் டாக்டரை சந்தித்து ஸ்டேட்ஸிலிருந்து வரவழைத்த ஒரு இன்ஜெக்ஷன் மருந்து அவருடைய பேஷண்ட்டுக்கு ஒத்துவராமல் ஆகிவிட்டதாகவும் எனவே மிகுதி மருந்தை இந்தப் பையனுக்கு முயற்சி செய்யுமாறும் கூறி மருந்தைக் கொடுத்தார்.

கொஞ்சமாக அந்த இன்ஜெக்ஷன் மருந்தை இந்தப் பையனுக்கு செலுத்தியபோது நல்ல குணம் தெரியவே எல்லா மருந்தையும் கொடுத்து மூன்றே நாளில் ப்ளட் கேன்ஸரை பரவாமல் தடுத்து நிறுத்தினார். இப்போது பையன் ரொம்ப உற்சாகமாகவும் கேன்ஸர் உபத்திரவமே இல்லாமலும் சுறுசுறுப்பாக இருக்கவே பாபாவிற்கு நன்றி செலுத்த பலவகை பழவகைகள் வாங்கி வந்ததாக கூறினர். நானும் பாபாவால் முடியாதது ஒன்றுமே இல்லை என்று சொல்லி, அவர்கள் மயிலாப்பூரிலிருந்து வந்ததினால் அங்குள்ள பாபா கோயில் வாசலில் நிறைய குஷ்டரோக வியாதியஸ்தர்கள் இருப்பதாக சொல்லி இந்தப் பழங்களை அப்படியே எடுத்துச்சென்று அவர்களுக்கு விநியோகிக்க சொன்னேன் அவர்கள் அம்மாதிரிப் பழங்களைப் பார்த்தே இருக்கமாட்டார்கள் என்றும், அவர்கள் அதை உண்டு களித்தால் பையன் பரிபூரணமாக குணமடைவான் என்று சொல்லி ஆசீர்வதித்து அனுப்பினேன். இதுவே கௌரிவாக்கம் பாபாவின் முதல் லீலையாகும்.

31-1-2003ல் பாபாவிற்கு அபிஷேகம் ஆயத்தம் செய்தேன். பல இடங்களிலிருந்து புஷ்ப மாலைகள் வரவழைத்து பாபாவிற்கு சாற்றினேன். அப்போது என்னை அறியாமலேயே என்னுள் ஒரு மமதை உண்டாக்கியது. இந்த ஊரில் புஷ்பம் கிடைக்காவிட்டாலும் பல இடங்களிலிருந்து புஷ்பங்களை வரவழைத்து பாபாவிற்கு அமோகமாக சாற்றுகின்றோமே என்ற எண்ணம் உண்டாயிற்று. அந்த நினைப்புடனேயே பாபாவைப் பார்த்தபோது பாபாவின் கண்கள் சிமிட்டுவதுபோல் தோன்றி, என்னைப் பார்த்து, எல்லா மாலைகளையும் கழற்றி எறி, எனக்கு ஒன்றும் வேண்டாம் என்று

என் காதில் ஓதினார். எனக்கு நடுக்கம் ஏற்பட்டு உடனே என் அகங்கார நினைப்பை பாபாவிடம் சொல்லி மன்னிக்கும்படி கதறினேன். பாபா உடனே சிரித்து கவலைப்படாதே உனக்கு கலெக்டர் மாலை போடப் போகிறான். அதைச் சொல்லவே இப்படி மிரட்டினேன் என்று சொன்னார்.

எனக்கு எந்த கலெக்டர் என்னைத் தேடிவந்து, அதுவும் இந்த வயதான பூசாரியைத் தேடிவந்து மாலை போட அவருக்கு நான் என்ன செய்திருக்கிறேன் என்று குழம்பினேன். அன்று என்னுடைய பிறந்தநாள் ஆனதால் குத்துவிளக்கு பூஜைக்கு ஏற்பாடு செய்திருந்தேன். அறுபது சுமங்கலிகள் பங்கெடுத்துக் கொண்டு ஒரு பெரிய உற்சவமாக நிறைய பக்தர்களுடன் நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது சுமார் பதினோரு மணியளவில் திரு. பாஸ்கர், டைரக்டர் ஆஃப் அக்ரிகல்சர் கோவிலுக்கு வந்து எனக்கு பொன்னாடை போத்தினார். நான் மிகவும் திளைத்துப் போனேன். பாபாவின் சொல் நூற்றுக்கு நூறு நடந்ததைக் கண்டு திரு. பாஸ்கர் அவர் கலெக்டர் ரேங்கில் உள்ளவரா என்று விசாரித்தேன். அவரும் ஆமாம் என்று சொன்னார். ஆகவே பாபா சொன்னது அப்படியே நடந்தேறியது.

பாபாவிற்கு எப்பொழுதுமே காலையில் அபிஷேகம் முடிந்தவுடன் சேலைதான் சாத்துவது வழக்கம். பக்தர்கள் முன்பாகவே புது சேலைகளைக் கொண்டு வந்து பாபாவிற்கு அளிப்பர். பாபாவுக்கு சாத்திவிட்டு இரண்டொரு நாளில் திரும்பவும் வாங்கிச் செல்வர். இதன்படி ஒரு புதன்கிழமை ஒருதாயும் பிள்ளையும் ஒரு புது சேலையை பாபாவிற்காக அளித்து மறுநாள் வியாழக்கிழமை சாத்துமாறு கூறினர். அதேமாதிரியாக அடுத்தநாள் அபிஷேகம் முடிந்தவுடன் அந்த சேலையை பாபாவிற்கு உடுத்த எடுத்துச் சென்றபோது அது பிரிக்கபடாமலேயே பாபா அதை தனக்கு சாத்தவேண்டாம் என்றும் கொடுத்தவரிடமே திருப்பிவிடும்படி சொன்னார். பர்பாவிடம், நான் வாக்கு கொடுத்துவிட்டேன், அவர்கள் மிகவும் வருத்தப்படுவார்கள். எனக்கு இக்கட்டான நிலை ஏற்பட்டுள்ளது என்று சொன்னேன். பாபா ஒன்றும் சொல்லவில்லை, அவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்று குழம்பி நின்றபோது மற்ற பக்தர்கள்

காரணம் வினவினர். சேலையை பாபா மறுத்ததை சொன்னபோது வேறொரு பக்தர் மிக ஆனந்தத்துடன் தான் கொண்டு வந்த சேலையை என்னிடம் நீட்டினார். மற்ற பக்தர்களும் அது மிகவும் நன்றாக இருக்கின்றது. அதையே உடுத்துங்கள் என்று கூறினர். அதே மாதிரியாக அந்த சேலையை உடுத்தினேன், ஆனாலும் அன்று முழுவதும் தாயும் பிள்ளையும் வந்தால் என்ன பதில் சொல்வது என்று நடுக்கத்துடன் அதை நினைத்தேன், ஆரத்தி எல்லாம் சரியாக செய்ய முடியாமல் திணறி வந்தேன். அன்று முழுவதும் அதே நினைப்பாக இருந்தேன். சரியாக மாலை ஆறு மணி ஆரத்தியின்போது அந்த தாயும் பிள்ளையும் மிகக் கோபத்துடன் மேடை ஏறி வந்து தான் கொடுத்த சேலையை ஏன் சாத்தவில்லை? அவ்வளவு அக்கரையாகக் கொண்டு வந்து கொடுத்தும் மதிப்பில்லாமல் செய்துவிட்டீர்களே என்று வருத்தப்பட்டு பேசினார்கள். நான் உடனே பாபாவை பார்த்து கண்ணீர் நிறைந்த கண்களுடன் இக்கட்டான இந்நிலையிலிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டினேன். பாபா, “அந்த மாமி இந்த சேலையை உடுத்துவாளா என்று கேள்” என்று சொன்னார். உடனே எனக்கு சேலையில் ஏதோ குறையிருக்கிறது என்று புரிந்துவிட்டது. உடனே சேலையை கொண்டு வந்து, மாமியிடம் கொடுத்து இந்த சேலையை நீங்கள் உடுத்துவீர்களா என்று வினவினேன். அதற்கு அந்த மாமி, அதெப்படி முடியும், இந்த சேலை காக்கா சரிகை கரை போட்டதாச்சே, நான் கட்டமாட்டேன் என்று சொன்னார். நான் உடனே நீங்கள் கட்ட தகுதி இல்லாத ஒரு சேலையை பாபா உடுத்த வேண்டும் என்று நினைக்கின்றீர்களா? எப்படி நீங்கள் பாபாவை மட்டமாக நினைப்பீர்கள். அவர் தேவாதி தேவனல்லவா? நாம் கட்டும் உயர்ந்த சேலையாக இல்லாவிட்டாலும், நாம் கட்டக்கூடிய சேலையையாவது கொடுத்திருக்க வேண்டாமா என்று கோபமாக திட்டினேன். சேலையையும் திருப்பிக் கொடுத்துவிட்டேன். அப்போதுதான் அந்த மாமி தன் தவறை உணர்ந்து இனி இவ்வாறு செய்வதில்லை. தான் செய்தது தவறுதான் என்று பாபாவிடம் பணிந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். ஆக பாபா ஒரு சிறு விஷயத்தைக் கூட சாதாரணமாக விடாமல் மிக நல்ல நிலையில் கோவிலை நிர்வகிக்க செய்கிறார்.

ஒரு வியாழக்கிழமை அபிஷேகத்திற்கு பிறகு பாபாவிற்கு மூன்று சேலைகள் பக்தகர்களிடமிருந்து வந்து சேரவே மூன்றையும் பாபாவிற்கு கஷ்டப்பட்டு சார்த்தி மாலைகள் எல்லாம் சார்த்தி பாபாவை ரசித்தபோது திடீரென்று பாபா கண்களை அசைத்து எல்லா துணிகளையும் கழற்றி எறி என்று சொன்னார். நான் பாபாவிடம் பக்தர்கள் வெகு தூரத்திலிருந்து அன்போடு அதிகாலையில் கொண்டு வந்த சேலைகளை எப்படி நான் கழற்றி போட முடியும் என்று கண்களில் நீர் பெருக அழுதபோது, பாபா பயப்படாதே இன்று பச்சை புடவை அணிந்து ஒரு தாய் எனக்கு ஒரு ஷால் கொண்டு வருவாள் அதை எனக்கு சார்த்து. சேலைகள் தான் சாத்துவேன் என்று திருப்பி அனுப்பாதே என்றார். அதேமாதிரியாக எந்த மாமி பச்சை புடவை கட்டி வந்தாலும் அவருடைய கையில் ஷால் வைத்திருக்கிறாரா என்று ஆவலோடு பார்ப்பேன். ஆனாலும் 7 மணி வரை அம்மாதிரி யாரும் வராமல் ஏமாற்றத்தை அளித்தது.

பாபா சொன்னது பொய்யாகுமோ என்று நினைத்தபோது, ஒரு மாது பச்சை புடவை கட்டிக்கொண்டு மேடையேறி வந்து என் கையில் ஒரு ஷாலை அளித்து பாபாவிற்கு சாத்த சொன்னார்கள். நான் ரொம்பவும் விசித்து கண்களில் நீர்பெருக அழ ஆரம்பித்தேன். அந்த மாது, அவள் தாமதமாக ஷாலை கொண்டு வந்து கொடுத்ததற்காகத்தான் நான் அழுவதாக நினைத்து, என்னை நமஸ்கரித்து மன்னிப்பு கோரினார்கள். நான் பாபா என்னிடம் முன்கூட்டியே அந்த மாது ஷால் கொண்டு வருவதை காலையில் சேலை உடுத்தும்போது எனக்கு தெரிவித்தத்தை அந்த மாதுவிடம் சொல்லி அதுவுமல்லாமல் அந்த மாது அன்றைக்கு எந்த கலர் புடவை கட்டிக் கொண்டு வரப் போகிறாள் என்றும் அறிவித்ததை தெரிவித்தேன். அந்த மாதுவும் இதை கேட்டு தேம்பி தேம்பி அழ ஆரம்பித்தாள். தன்னை ஒரு பொருட்டாக மதித்து இந்த அற்ப ஷாலை பெரியதாக நினைத்து அம்மாதிரியாக லீலையை பாபா செய்ததாக எல்லோருக்கும் சொல்ல மேடையிலிருந்த அனைவரும் அழ ஆரம்பித்தார்கள். இம்மாதிரியாக பாபா அடிக்கடி லீலைகளை நடத்தி அருள் பாலிக்கிறார்.

